கேட்கும்விண்ணப்பமொன்றுள ததனைநீர்கேட்டருளும். அதாவது; தேவரீரிதுகாறுங்கூறிவந்த மார்க்கமனைத்துமங்கீகாரமே: — பரமுடனிகமுமிகந்தவரன்றோ பழகுவர்மெய்ஞ்ஞானம், எ-து., பரலோகவிச்சையும், இகலோகவிச்சையுங் கடந்தவரன்றோ மெய்யுணர்வேயானெனப்பழகாநிற்பர்:—விரவுமுயற்சியின்மீண்டவரதையினி வேண்டுவரோவேண்டார், எ-து. இச்சையில்மேல்கீழெனமிசிரிம்பித்துநின்றுள்ள முயற்சியினின்றுவெறுத்துத்திரும்பினவர்க ளினியதைமறந்தும்விரும்பியுழல்வரோவுழலார்:'— சிரவணமணுதிகள்வேண்டாவோ சித்தமுறைநத்திடவே, எ-து. இங்ஙனமாயினுமிவர்கட்குஞ்சித்தங் கலங்கா துறுதிபெறநிற்றற்குக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல்வேண்டுவனவின்றோ, எ-று.

பரமுடனெனவுடன் கொடுத்துப்பிரித்தது ; சொற்கம், சத்தியமாதியெனமதத்தர்கூறு மேலிட்டபதவிகளைநோக்கியென்க. ஒன்றினுநிலையுறாதமுயற்சியாதலின் விரவுமுயற்சியெனவும், ஓர்கால்சித்தங்கலக்கமுறற்பாலதின் சித்தமுறைநத்திடவெனவுங்கூறினர். முடிந்தவனுக்குச்சிரவணுதிகள்மீண்டும்வேண்டுவது, மாயாமயமாதலைப்பற்றியென்க. களங்கமற்றகண்ணுடிபலவாடைகளால்மூடப்பட்டிருக்கினுந் தூசடையுமாறுபோன்று, தெளிவுற்றதேனும் அறிவாகிறகண்ணுடிக் கையந்திரி பெங்ஙனமேனுஞ் சற்றடையும்.

(க-து.) மகான்கள்கிருதகிர்த்தியரன்றெனக்குறிப்பிக்கச் சிரவணுதிகள் வேண்டாவோவென்பது. இச்சை - தொக்கது. (உ௮)

உகூ - கவி. அ - கை.

[அதற்குவிடைகூறுவான்வேண்டிக் கேட்டல், சிந்தித்தல்,
தெளிதல்செய்வாரின்னின்னதகையினராவரென
விக்கவியிற் கூறுகின்றார்.]

இள்ர்மக னேகேள் தத்துவ மறியார் கேட்டல் செயக்கடனே
தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களு ளார்
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனை யோர்
வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்றுண்டோ.

(இ - ள்.) இளர்மகனேகேள்தத்துவமறியார் கேட்டல்செயக்கடனே, எ - து. சின்மாத்திரமாவிளங்குஞானபுத்திரா யான்கூறுவதைக்கேளுதி, மெய்யுணர்வினையதெனக்கேட்டுமறியாதார் சிரவணம்பண்ணிக்கொண்டிருப்பர்:—தளர்வறுசிந்தித்தலின்முயல்வார் சிலர்சந்தேகங்களுளார், எ - து. சந்தேகங்களகலாதசிலர் ஓயாதமனனவயத்தராய்முயலாநிற்பர்: — தெளிதலினிற்பார்விபரீதப்பேய்தீராவாதனையோர், எ - து, விபரீதமென்னும்பேயினுல் தீராதவாதனையுடையோர்கள் சித்தத்தெளிவுபெறு முயற்சியில்விடாதுநிற்பர்: — வெளியுருவாயறிவாய் நிறைவாயினர் வேண்டுவதொன்றுண்

டோ, எ - து. சுத்தமானவெளிமயமாகியும், ஞானப்பிரகாசமாகியும், அகண்டபரிபூரணமாகியும்விளங்கினர்; யாதானுமிம்மூன்றனுள் வேண்டுவதொன்றுளதோ இல்லையே, எ-று.

தத்துவம், அறிவு. அது ; கற்பிதம், எதார்த்தமெனவிருபாற்று. கற்பிதம், அனர்த்தம். எதார்த்தம், அர்த்தம். கற்பிதமெனினும், விபரீதமெனினுமொக்கும். விபரீதவுணர்வு, பண்டிதர்பாமரரிடத்தும், எதார்த்தவுணர்வு, தத்தெரிசனமுடையோரிடத்துமெனவுணர்க. உத்தமம், மத்திமம், அதமமெனமூன்றும். தெளிதலினிற்றல், உத்தமம். சிந்தித்தலினிற்றல், மத்திமம். கேட்டலினிற்றல், அதமம். இம்மூத்திசையுங்கடந்தவொன்பது தோன்ற, வெளியுருவாயறிவாய்நிறைவாயினவொன்றூர்.

(க - து.) கிருதகிர்த்தியனெனக்குறிப்பிக்க விம்முத்திசையுங்கடந்தவொன்றுவொன்பது. செயக்கடனென்பதைமுதனிலைத்தீபமாக்கி, வினையிரண்டிடத்துமொட்டுக. விபரீதப்பேயெனல், உருவகம். ஒன்றையொன்றாக்கோடல்சர்வமதத்தராதலினிதனையே பேயெனலறிக. அறியார், உளார், வாதனையோர், எழுவாய். வினையாலணையும்பெயராதலினென்க. (உக)

கூ0 - கவி. அ - கை.

[அஞ்ஞானியர்போலப் பலவேறு விகற்பக்கிர்த்தியம்புரிதருளுே, கிருதகிர்த்தியநிலைக்கடையாளம். இதனைத்தெரித்தருளுமெனவினவியதை யிக்கவியிற்கூறுகின்றூர்.]

ஐயா கேளீர் தத்துவ ஞானியு மஞ்ஞா னிகள்போ லச்
செய்யா நின்றேன் கண்டே னுண்டேன் சென்றே னெனலா மோ
பொய்யாம் விபரீ தங்க ளவர்க்குப் போயின வென்றீ ரே
மெய்யாம் பிரம விசாரமி தன்றே வெளியா யுரையீ ரே.

(இ - ள்.) ஐயாகேளீர்தத்துவஞானியு மஞ்ஞானியர்போலச் செய்யாநின்றேன்கண்டேனுண்டேன் சென்றேனெனலாமோ, எ-து. ஐயனேயின்னுமடியேன்கேட்கும்விண்ணப்ப மொன்றுளததனைக்கேட்டருளும். உண்மைஞானியருமஞ்ஞானிகள்போலச் செய்யாநின்றேன், கண்டேன், உண்டேன், சென்றேனெனச்சொல்லத்தகுமா: — பொய்யாம்விபரீதங்களவர்க்குப்போயினவென்றீரே, எ - து. பொய்மயமாகியவிபரீதங்களவர்க்குநீங்கிப்போயினவென்றுகூறினீரே: — மெய்யாம்பிரமவிசாரமிதன்றேவெளியாயுரையீரோ, எ-து. மெய்ம்மையாகியபிரமவிசாரணையிதல்லவே யிதனைவிளங்கத்தெளிவாயுரைத்தருளும், எ-று.

செய்யாநின்றேன், உண்டேன், சென்றேனென்பவை, மித்தையாத்தியாசம். கண்டேனென்பது, இதராத்தியாசம். இங்ஙனமிருக்க, இவை போயினவெனக்கூறுவதெங்ஙனமியையும். இதுமெய்ம்மையானபிரமவிசா

ரமல்லவே, யிதனைத்தெரித்தருளுமென்பார், மெய்யாம்பிரமவிசாரயிதன்றே வெளியாயுள்ளாயீரோயென்றார்.

(க-து.) கிருதகிர்த்தியனொன்பதற்கிதுதக்கவுத்தரமன்றெனக் குறிப்பித்ததென்பது. (௩௦)

௩௧ - கவ. அ - ௬௩௧.

[இவ்விவகாரம்விதேகமுத்திபரியந்தந் தொடர்ந்தேகிற்கும்.
...னுந்தெளிவினிற்றலி னேனையர்போலன்

ஓய்ந்த கனவிற் கண்ட பழங்கதை யோதுவன் வாதனை யா
லாய்ந்தறி வுற்றவ னப்படி செப்புவ னுபா சனுமா கான்
மாய்ந்தத னுடல்வே மளவும் விண்ணவன் மனித னெனப்படு வான்
வீய்ந்தசி தாபா சன்போ மளவும் விவகா ரந்தொட ரும்

(இ - ள்.) ஓய்ந்தகனவிற்கண்டபழங்கதை யோதுவன்வாதனையால், எ-து. கனக்கண்டவன் ஓய்ந்துபோன தனதுகனவிற்கண்டபழங்கதையினை மறவாதுவாதனையாற்சொல்லுவன்:— ஆய்ந்தறிவுற்றவனப்படிசெப்புவனுபாசனுமாகான், எ-து. தானினையனெனச்சுருதி, யுத்தி,அனுபவத்தாலையந்திரிபறவாராய்ந்து தெளிவுற்றவறிவுடையோனு மவன்கூறுமாறுபோன்று கூறுவன். கூறினும், இவனவன்போலதனைமெய்யெனநம்பிக்கூறுவனல்லன். அதனால், இவனவன்போலாபாசனுமல்லன். ஆவனெனில், தெளிந்தசிந்தையனதலி னங்ஙனமொருக்காலுமாகான்:— மாய்ந்ததனுடல்வேமளவும் விண்ணவன்மனிதனெனப்படுவான், எ-து. முன்னரே பிரக்ஞோதயத்தால் மரித்ததனதுகாரணசரீரம் ஞானக்கினிமேலீட்டால் நீறுமளவும், மனிதனாயினும், தேவனே. இவனுக்கிவன்தேவனாயினும், பார்ப்பவர்க்குமனிதனாக்காணப்படலின் பிறரால்மனிதனெனவழங்கப்படுவன்:— வீய்ந்தசிதாபாசன்போமளவும் விவகாரந்தொடரும், எ-து. ஆதலின், அறிவேதானெனக் கண்டவக்கணமே மரித்தசிதாபாசத்துவ மவித்தைபோற்போமளவு மிவனுக்குலகவிவகாரந்தொடர்ந்தேகிற்கும். எ-று.

அவனுலகைமறந்தது நித்திரைவந்துழி,இவன்மறந்தது விசாரத்தெளிவு வந்துழி கனக்காட்சியவனுக்குச் சொற்பனம், நனக்காட்சி யிவனுக்குச்சொற்பனம். அதுகனசொற்பனம். இதுதீர்க்கசொற்பனம். அவன்விழிப்பு, அஞ்ஞானம். இவன்விழிப்பு, ஞானம். அஃதவன்மறந்துழிநடந்தது. இஃதிவன் மறவாது மறந்துழிநடந்தது. அதனையவனுலகாக விழித்துழிச்சொல்லுமாறுபோன்று, இதனையிவனறிவாக விழித்துழிச்சொல்லுவன், அதனையவன் மூடவிநோதமாகச்சொல்லுமாறுபோன்று, இதனையிவன் ஞானவிநோதமாகச்சொல்லுவன். பண்டிதனதனையாதோவென வுண்மையாகக்கொள்ளா

வாறுபோன்று, ஞானி யிதனைத் தற்பிரதிபலனமெனவுண்மையாகக்கொள்ளான். அவனுக்கது சொல்லுநயமுமாத்திரமாயதுபோல இவனுக்கிது, சொல்லுந்தோற்றமுமாத்திரமாயது. ஆதலினிவ்வுவமை பொருந்தும், பொருந்தாதென்பாரை யவாந்தரவாதிகளெனவறிக. அவாந்தரவாதம்; கோழிகோழி; என்னவிலையென்னவிலையென்றாற்போல்வது. ஆய்ந்தறிவுற்றவனுமென்றவும்மைதொக்கது. ஆபாசனுமென்றவும்மையிழிவுசிறப்பு. மாய்ந்தெனவினையெச்சமாக்கினு மொருசாரமையினுமமையும். இருமுகநோக்கு முணர்ந்தவனுதலி னுபாசனுமாகானெனக்கொள்க. உலகிருப்புந் தன்னிருப்புமுணராவிடத்ததவன்விவகாரம். உணர்ந்தவிடத்ததிவன்விவகாரம். இங்கேயுடலென்பது, தூலமெனின், அதுமாய்ந்தவிடத்து மதுவேந்தவிடத்துந் தேவனுத லெவருந் தூலதேகத்தராதலின் பொருந்தாதே. இவனுக்குமாத்திரமெனின், அப்போது தூலதேகமன்று. சூக்குமவுடலெனின், சொப்பனஞ்சுழுத்தியிலும் சர்வசங்காரகாலத்திலு மெவரும்விண்ணவராகவேண்டும். இன்றே. இங்கேவிண்ணவன், ஐக்கியமுத்திக்குரியோன். அன்றெனின், "ஐயத்தினீங்கித்தெளிந்தார்க்கு வையத்தின்வானநணியதுடைத்து." என்னுங்கவியில் வானம் பதவிமுத்தியோ; பதவிமுத்தியெனின், ஐயந்திரிபறத்தேர்தலும் யாகாதிகிருத்தியமியற்றலுமொன்றோ? ஒன்றெனின், தன்னைத்தானெய்தில்,அயலெனவில்லை. இல்லையாகவே, சுகமுமயலெனவின்றித்தானேசுகவடிவாகத் தன்னைத்தானனுபவித்தல் கன்மகாண்டத்திலுண்டோ. இதனைப் பாடுதுறையில், கசக - அதிகாரத்திற்காணலாம். இன்றெனின், ஒன்றெனல்கூடாது. இதுகூடாதாகவே, அதுவுங்கூடாதெனமுடியும். ஆதலின், காரணவுடலாகியவவித்தையை யுடலென்றார். வீய்ந்தசிதாபாசன்போமளவும் விவகாரந்தொடருமென்றது;மாய்ந்ததன்னுடல்வேமளவும் விண்ணவன்மனிதனெனப்படுவானென்பதுபற்றி, மாயினுங் காரணவுடனீறுமளவு மனிதனெனப்படுவான்போன்று, வீயினுஞ்சிதாபாசன்போமளவும் விவகாரந்தொடரும். உடனீறுயின், சிதாபாசன் மாப்பிள்ளைத்தேழன்போற் சொல்மாத்திரமுடையவன். அது நீறுமளவு மனிதனெனலுண்டு. இவன்போமளவும் விவகாரமுண்டு, மனிதனெனப்படினுந்தனக்கில்லை. அதுபோல, விவகாரந்தன்பாணிகழினுந் தனக்கில்லை., சிற்பிரகாசநாட்டத்தில் தானெவ்வகைத்தோற்றத்தானு மல்லனுதல்போலத், தற்பிரியமகலாநாட்டத்திற் கிரியைசெய்துஞ்செய்திலனென்றாயிற்று. இங்ஙனநின்றார்க்கே யிதுதெரியுமன்றிச் சொல்லாலும், நினைவாலுமென்னைபயனுள. இவற்றாலிதனைமறுக்கிற் பயனின்மையின்தள்ளுதும்.

(க - து.) ததாகாரத்தில் செய்துஞ்செய்திலனென்பது, இச்சை, அநிச்சை, பரேச்சையுளொன்றுகாரணமாக வினைநிகழினும், தன்னையகண்டமாகக்காண்டலின், நிருவிகாரியெனக்குறிப்பித்தது. இதனைத்தற்சோதனையிற்காண்க. (௩௧)

கூ௨ - கவி. அ - கை.

[நிட்டையகலானெனினு மதுவுஞ்செயலன்றோ; கிருதகிர்த்தியனென லெங்ஙனங்கூடுமென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

ஆனு லையா குருவே காணப தசத்திய மென்றா லு
நானு விவகா ரந்துய ரலவோ ஞானசு கந்தரு மோ
போனு லன்றோ நன்று நிட்டை புரிந்திடல் வேண்டா வோ
தானு நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படி யோ.

(இ - ள்.) ஆனுலையாகுருவேகாண்ப தசத்தியமென்றாலும் நானுவிவகாரந்துயரலவோ ஞானசுகந்தருமோ, எ-து. ஐயனே, குருநாதனே, மகானென்போன்கிருதகிர்த்தியனுனல்காணப்படுவனவனைத்துந்திரிசியமன்றோ; அதுதிரிசியமாயினுமநிர்தமன்றோ; அநிர்தமெனினும், அதனைமெய்யெனக்கொள்வதென்னையோ, கொண்டுநானுவிவகாரம்புரிதலென்னையோ, புரிந்து மதனுலெய்தும்பயன்சுகமாயினும், அதுமெய்ப்பொருள்காரணமாக வந்ததன்றுமையின் துயராகமுடியுமன்றோ; அதனுலதுதுயரல்லவோ; அதுமேவிடுமன்றோ; மேவிடுந்தோறும் தனித்துநிற்கைவாய்க்குமோ; வாய்க்காவிடத்து அது சிதானந்தவாழ்வைத்தருமோ:—போனுலன்றோநன்று நிட்டைபுரிந்திடல்வேண்டாவோ, எ - து. இவ்விவகாரமொருங்கேநீங்கினுலன்றோ. தனித்திருக்கைக்குநன்கு. இந்நன்குநிலைத்தல் நிட்டைபுரியாதுழிவாய்க்குமோ; வாய்க்காவிடத்து நிட்டைபுரிந்திடல்வேண்டாவோ:—தானுநிட்டைபுரிந்தாற் செய்கை தவிர்ந்தவனெப்படியோ, எ - து. வேண்டுமெனின், தானேதானு தற்கியைந்த விந்த நிட்டைபுரிதலுஞ் செய்கையன்றோ, எந்தச்செய்கையுமகன்றவனுயினும், இந்தச்செய்கையகலானுதலின், கிருதகிர்த்தியனென்பதிவனுக் கெங்ஙனமியையுமோ வறிகிலன், எ - று.

(க - து.) கிருதகிர்த்தியனெனல் சொல்லாலன்றி யர்த்தங்கண்டிலனென்பது. இதினுன்கோகாரமுமெதிர்மறைப்பொருள். விடாவழக்கென விங்ஙனமாயதெனவுணர்க. அசத்துகாரணமாகவரும் விவகாரமாதலின், துயரலவோவெனப்பட்டது. அறிகிலனிசையெச்சம். (கூ௨)

கூகூ - கவி. அ - கை.

[இக்கிரியைகளகத்திலன்றிப் புறத்தினிகழின், கிருதகிர்த்தியனெனக் கோடற்கவென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

தெரிதரு மகனே யாரம் பத்தொடு தீரும் விவகார
முரிய சமாதியும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன் றே
துரிய பரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய் வதுமுண்டோ
வரிய சமாதிகள் பழகுவ னேலவ னுரு டனுமன்றே.

(இ - ள்.) தெரிதருமகனேயாரம்பத்தொடேதிரும்விவகாரம், எ-து. சகலவர்த்தங்களையு மெளிதில்தெரிந்துகொள்ளத்தக்க ஞானபுத்திரா ; ஆரம்பத்தில்சிரவணமன்னுதிகள் செய்யும்போதே சகலவிவகாரங்களும்:—உரியசமாதியும்விவகாரங்களு முள்ளத்தொழிலன்ருே, ஃ-து. தன்னைவிளக்கற்குரியநிட்டையும், கேட்டவாறுசிந்தித்துத் தெளிதலாகியசகலவிவகாரங்களு முள்ளத்தின்கணிகழுந்தொழில்களன்ருே:—துரியபரம்பொருளானவர் வேருெருதொழில்செய்வதுமுண்டோ, எ - து. துரியமாகவிளங்கும் பிரமசொரூபமானவர்கள் பிறிதோர்தொழில்செய்வதுமுளதோ :—அரியசமாதிகள் பழகுவனேலவ னூருடனுமன்றே, எ-து. செய்தற்கரியசமாதிகள் கைகூடும்படிபழகுவனுயி னவனூருடனுமல்லனே. எ - று.

சகலவிவகாரங்களோடு சிரவணுதிகள் செய்யின்பயன்படா. படுமெனின், பெருமைபற்றியெனவேண்டும். அதுபற்றியெனின். தாக்கிவிர்த்திக்கென்செய்தும். இன்ருதலின், சிரவணுதிகள்செய்யுமாரம்பத்தில்தானே சகலவிவகாரங்களுநீங்கியேவிடும். (எங்ஙனமெனின்,) சிரவணமாறுவகைப்படும். அவை; உபக்கிரமோபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், உற்பத்தி, அர்த்தவாதமென்பன. உபக்கிரமமாமது ; சிருட்டிக்குமுன் சகத்து சத்தெனல், உபசங்காரம் ; அந்தச்சத்து, சுசாதிக விசாதிக சுகதபேதமிறந்ததெனல். இதனை யொன்ருக்கி உபக்கிரமோபசங்காரமென்பர். இந்தவொன்றைவிசாரித்துத்தெளிதற்கே விவகாரசிந்தைசற்றுமிலதாகவேண்டும்.ஆதலின், ஆரம்பத்தொடேதிரும்விவகாரமெனவும், சவிகற்பசமாதி, நிர்விகற்பசமாதியைச்சமாதியெனவும், இவற்றிற்குரியவறியவுழைப்புகள்பலவாதலின் விவகாரங்களெனவும், இவையனைத்துமகத்திலாதலின், உள்ளத்தொழிலெனவும், துரியமேபரமாதலின், துரியபரம்பொருளெனவுங்கூறினூர். ஆரூடனுயின்சமாதிபழகுவனு ; பழகுவனேலாரூடனுமன்றென்பதிலும்மை இழிவுசிறப்பு. ஆரூடனுமன்றெனவே, அப்பியாசியென்ருயிற்று.

(க - து.) சமாதிகூடப்பழகின், கிருதகிர்த்தியனன்றென்பது. ஏழாம்வேற்றுமை மூன்ரும்வேற்றுமையாயதுருபுமயக்கம். (கக)

ருச - கவி, அ - கை.

[ஆரூடர்களிற்சிலர் .தியானுதிகள்செய்வதெதற்கென விஞவியதற்குவிடை யிக்கவியிற்கூறுகின்ருர்.]

உத்தம குருவே யாரூ டருமா யொருதொழி லற்றவ ருள்
சித்த மடங்கு தியானு திகள்சிலர் செய்குவ தென்னென் ரு
வித்தல மருவும் பிராரத் வப்பிறி வெப்படி யப்படி யே
முத்தரும் வெகுவித மாகுவ ரென்பது முன்னே சொன்னே னே.

(இ-ள்.) உத்தமகுருவேயாரூடருமா யொருதொழிலற்றவருள் சித்தமடங்குதியானுதிகள்சிலர் செய்குவதென்னென்ருல், எ-து. உத்தமமானகுருநா

தனே, விவகாரங்களுளோர்தொழிலுமின்றி யெத்தொழிலுமிறந்து நிர்பவர் களுக்குள் சிலராரூடராயிருந்துஞ்சித்தமொருப்படற்கியைந்ததியானாதிகளைச் செய்வதியாதிற்கெனக்கேட்பையாயின்:—இத்தலமருவும் பிராரத்வப்பிறிவெ ப்படியப்படியே, எ-து. பிறவிகாரணமாகவிப்பூமியினேரிடும்பிராரத்வபேதங் களெங்ஙனமெங்ஙனமோ வங்ஙனமங்ஙனமே:—முத்தரும் வெகுவிதமாகுவ ரென்பது முன்னேசொன்னேனே, எ-து. சீவன்முத்தரு மனேகவிதமாவா ரென்பதைப்பற்றி முன்னமேசொல்லியிருக்கின்றேனே யடிக்கடிகேட்பதெ ன்னே, எ - று.

(க - து.) ஆரூடராயிருந்துஞ் சிலர்கிருதகிர்த்தியராகில்லாது தியானாதிகள்செய்வதென்னையென்ற வினாவிற்குத்தரம் பிராரத்வகன்மபேதத்தாலெனவறிகவென்பது. ஆரூடருமாமெயன்பதிலும்மை, இழிவுசிறப்பு. பிராரத்வகன்மபேதச்சேட்டைகளை யவர்மேலேற்றிக்காணி னப்பியாசியரெனவும், அவரதுதீர்ந்தநிலையினை யவர்மேலேற்றிக்காணி னாரூடரெனவுந்தோன்றுவர். (பிழை) காண்பார்மிசைத்தாதலி னவராரூடரேயெனவறிகவென்பார், பிராரத்வப்பிறிவெப்படியப்படியே முத்தரும்வெகுவிதமாகுவரென்பது முன்னே சொன்னேனேயென்றார். சித்தமடங்குதியானாதிகள்செய்தல், அப்பியாசம். இத்தலமருவும்பிராரத்வப்பிறிவு, அவரவர்வினைக்களவாக விம்மையிலவரவர் பாலெய்தும் பிராரத்வபேதங்கள். இது பசுக்குழாத்துளதனதன்கன்று தேடித்தாயைமருவுமாறுபோல்வது. என்னே, "தாந்தாமுன்செய்தவினைதாமேயனுபவிப்பர்"என்றுளளவையார். கிரிசியநாட்டத்தில் வினையுண்டெனவும், திருக்குநாட்டத்தில் வினையின்றெனவுங்காணும். அதோமுகமாதலி னான்மாபலவாகவும், ஊர்த்தமுகமாதலினான்மாவொன்றாகவுங்காண்டலினதுபொருந்தும். இருவகைமுகமும், இருவகைநாட்டமுமின்றேல், ஆன்மாபலவெனலும், ஒன்றெனலும், வினையுண்டெனலும், இன்றெனலுமெங்கே? இவ்வுளவறியாதா ரொத்தனைபல்லூழிகாலம் வாதிக்கினுமென்பயன்? உடலுஞ்சேட்டையுங்காரணமாக மாணாக்கன்கேட்டலின் விடையுந்தக்கது. (௩௪)

ஙரு - கவி. அ - கை-

[ஞானிகள்விவகார மூலகோபகாரமாதலின்றித் தமக்கன்றென
வுபமானபூர்வமாகவிக்கவியிற்கூறுகின்றார்.]

நல்லவ னேகே ளுலகுப கார ஞானிகள் விவகார
மல்லது வேறொரு பெறுபே றும்மிலை யதனாற் பிணியுமிலை
வல்ல சிருட்டி முதற்பல தொழிலால் வருபுண் ணியபாவ
மெல்லவ ருக்கு மனுக்கிர கஞ்செயு மீச னடைந்திலனே.

(இ-ள்.) நல்லவனே கேளுலகுபகார ஞானிகள்விவகாரம் அல்லதுவேறொருபெறுபேறும்மிலை யதனாற்பிணியுமிலை, எ-து. சற்புத்திராவினாச்சங்கி

யாது யான்கூறுவதைக்கேளுதி. ஞானிகள்செய்யுவிவகாரங்களனைத்து முல கோபகாரமாகவன்றித்தமக்கன்று. அதனால்தாமடையும்வேறோர்சுகப்பேறு மசுகப்பேறுமுளவோ யாங்கண்டிலம். இதுயாதுபோல்வதெனின்:—வல்ல சிருட்டிமுதற் பலதொழிலால்வரு புண்ணியபாவம், எ-து. செய்தற்கு வலி யுள்ள சிருட்டியாதி பலதொழிலியற்றுவதால் வரக்கிடந்த புண்ணியபாவங்க ளை:—எல்லவருக்குமனுக்கிரகஞ்செயு மீசனடைந்திலனே, எ-து. ஏற்றற்பால ரெவரோவவரவர்களுக்கெல்லாந் தரமறிந்துகொடுத்தருளுவனன்றி யீசன்தா னடைந்தனனோ, இலனே, இதுபோல்வதென்றறிதி, எ - று.

அவரவர்சன்மார்க்கத்தாலுய்யுபொருட் டவரவர்கருத்தின்வண்ணஞ் சிரு ட்டியாதியீசன்செய்வனன்றிக்கெடுக்கற்கன்று. அதுபோல, ஞானவான்களு முயிர்களுய்யும்பொருட் டவரவர்க்கியைவதும் கடிவதுமன்றித் தம்பயனுக் காகவன்று. இவர்சீவகாருண்ணியரன்றே லிவையெற்றிற்கு. ஈசன்முத்தியிலு யிர்களைக்கூட்டுவான்வேண்டித் தனுகரணாதிகளைக்கொடுப்பித்துப் புசிப்பித்து த்தொலைப்பிப்பானென்பது பொய்யோ, மெய்யோ? பொய்யெனின், புடை பெயர்ச்சியில்லாதிருக்கவேண்டும். இருத்தலின், காணப்படானேனும் வினை முதலிருக்கவேண்டும். இல்லாதுயாதும்நிகழாது. ஆதலின், அவனன்றியோ ரணுவு மசையாதென்றனர்சான்றோர்பலரும். இதனை மறுப்பார் தாம்யா தால்மூன்றவத்தையினுமாறுதசைக்கப்படுவதுமெனக்கிஞ்சித்துமறியாதார், பி றர்கூறினுங்காதுகொடார். இவரைவிவேகியென்பாரிவர்போல்பவர். இந்தத் தனுகரணபுவனபோகம்வாய்ந்தது,அவரவர்வினையாலன்றியவனாலன்று. அவ னாலெனின், விதிவிலக்கெற்றிற்கு. எதுகாறுமெனின், அயலைத்தானென தென்னுதளவும். அப்பாலோவெனின், தானே தானுகில் விதிமதியெழற்கிட மின்றே ; இன்றாகவே, அனைத்துஞ் சின்மாத்திரமாவிளங்கும். விளங்கவே, மேல்கீழொப்பின்றியும் சுசாதியாதிமூன்றுமின்றியும் தான்மாத்திரமாகமிஞ் சிநிற்குதும். அப்பாலோர்செயலுமில்லை. இதுதனதுசுயகஷ்டத்தாலுணர்வ தன்றிப் பேச்சாற்பயனின்றியமையும்.

(க-து.) ஈசனைப்போல ஞானிகள்விவகாரமும், அதன்பயனுமுலகோ பகாரமாகமுடிவதன்றித் தமக்கன்றென்பது. இதனாலிவர்கிருதகிர்த்தியரொன் றாயிற்று. (கூ௫)

௲௬ - கவி. அ - கை.

[அனந்தவேதுக்களிலெந்தவேதுவினால் ஞானியீசனுக்கொப்பாவ

னோவென்ற வினாவிற்குத்தாயிக்கவியிற்கூறுகின்றார்.]

ஈசனு மாயரு வாயுரு வாகி யெழுந்தரு ளுங்குரு வே
யீசனு ஞானியு மொப்பென் றீரோ யெப்படி யொப்பென் று
ஈசனு ஞானியு மமதை யகந்தை யிகந்ததி னாலொப் பா
ரீசனு மாம்பல சீவரு டூமுல் கெல்லா மிவனா மே.

(இ - ள்.) ஈசனுமாயருவாயுருவாகி யெழுந்தருளுங்குருவே, எ - து. ஈசனாகியும், அருவமாகியும், உருவமாகியு மெளிதிலெம்பா லெழுந்தருளுங் குருமூர்த்தமே:— ஈசனுஞானியுமொப்பென்றீரோ யெப்படியொப்பென் றால், எ-து. ஈசனும்ஞானியுஞ்சமானமாவொன்று முன்னர்கூறினீரோ வெங் ஙனமொப்பாவொனக்கேட்டையாயின்:— ஈசனுஞானியுமமைதயகந்தைதயித ந்ததிறலொப்பார், எ-து. ஈசனும்ஞானியு மகமமதையற்றிருப்பதாலொப்பா வர். (இஃதன்றியும்):—ஈசனுமாம்பலசீவருமாமூலமெல்லாமிவனுமே, எ-து. இந்தஞானி ஈசனுகியும், சமஸ்தசீவர்களாகியும், சகலலோகங்களாகியுமிருப் பின், எ-று.

சலட்சணவிலட்சணமாயும், நிட்களமாயும், சகளமாயுங் குருவிருத்த லின், ஈசனுமாயருவாயுருவாகி யெழுந்தருளுங்குருவே. எ - ம், தன்னையு ன்றிச்செகசீவபரமின்றாதலின் ஈசனுமாம்பலசீவருமா மூலமெல்லாமிவனு மேயெனவுங்கூறினர். சீவன்முத்தர்பிரக்ஞாசொரூபமாகவிளங்கலி னிவை யெல்லாம்பொருந்தும். எங்ஙனமெனில், பிரக்ஞையன்றியிவைமூன்று முளவோ, இலவோ? உளவெனில், சோதனை ஞாயங்களாற்காட்டலாம். கூடாதெனில், இலையென்பமே. தோற்றுமாவெனின், ஓரணுவேனுஞ்சுயம் பாச்சோதனையிற்காட்டலாமே.கூடாதெனின்,இல்லையென்றேத்துக்கொள் ளலாமே, இதன்றியும், அறிவுதன்னையறிந்திச்சாஞானக்கிரியைபுரியுமாவெ னின், புரியும். எங்ஙனம். பொருளல்லவற்றைப்பொருளென்றுணர்தல், மருளோ, தெருளோ? தெருளெனின், அறிவுசலனமுறுமா? சுபாவமெ னின், சுபாவத்துக்குவிதிவிலக்கெற்றிற்கு. மருளெனின், பொருளல்லவற் றைப்பொருளென்றுணர்வதிறைலன்றே அறிவுமருளென்றாயிற்று.ஆகலாமா, ஆகக்கூடாதே அதனையுன்றதென்னே. தோற்றத்தைமெய்யென்பதூஉம், அறியாமையையறிவென்பதூஉம் நமதுபிழை. அதனைமறுக்குதும். தோற்று மாகின்றதும் மருளாகின்றதும் ஞெப்தியே வேறன்றெனவுணர்க. மருளில் பலவிவகாரமிலையயும்போது தெருளிலியையாதோ? கூறவேண்டுமோ.

(க - து.) இவன்ஞெப்திமாத்திரமாவிளங்கலி னிவனுக்கீசனையுவமித் ததி லென்னிழிவெனக்குறிப்பித்தாரென்பது. தன்னை மறந்தியற்றுவதினு மறவாதியற்றல், மிகச்சிரேட்டமாதலி னீசனுக்குவமிக்கப்பட்டதென்க. ()

நஎ - கவி. அ - கை.

[எல்லாச்சீவருமிவனுமெனவே, யதுகாரணமா, விஞதலை மிக்கவியிற் கூறுகின்றார்.]

எல்லாச் சீவரு மிவனு மென்றீ ரிவன்றன் முத்திய டைந்
தெல்லாச் சீவரு முத்தி பெறும விருப்பா னேனை யா
வெல்லாச் சீவரும் வெவ்வே றுழு லிவனெல் லாமல னே
யெல்லாப் பொருளு முணர்த்தருள் குருவே யிதைநீர் மொழிகுவீரோ.

(இ - ள்) எல்லாச்சீவருமிவனுமென்றீ ரிவன்றான்முத்தியடைந்தெல்லாச்சீவருமுத்திபெறாமலிருப்பானேனையா, எ-து. ஐயனே சமஸ்தசீவர்களுமிவனேயென்றுரைத்தீர், இவன்முத்தியடைந்ததுபோலெல்லாச்சீவரு முத்தியடையவேண்டுமே, அடையாததற்கேதென்னைகொலோ:—எல்லாச்சீவரும்வெவ்வேறானாலிவனெல்லாமலனே, எ-து. முத்தியடையாததால் எல்லாச்சீவரும்வெவ்வேறுமன்றோ. வெவ்வேறாகுமானால், இவனெல்லாச்சீவருமல்லனாமே:—எல்லாப்பொருளு முரைத்தருள்குருவே யினைதீர்மொழியீரோ, எ-து. அரியபொருளனைத்தையுமுரைத்தருளியகுருநாதனே யிதையும் நீர்விளக்கியருளும், எ-று.

இவனேயெல்லாச்சீவருமெனின், இவன்போலவை முத்தியடையாததென்னை. அடையாததா லுயிர்வெவ்வேறாகவேண்டும். வெவ்வேறாகுமெனின், இவனெல்லாச்சீவருமெனல்பொருந்தாதென்க. முத்தியடையவெனற்பாலது, முத்தியடைந்தென்றாயது ; "சொற்றிரியினும்பொருடிரியாவினைக்குறை" யென்பதனாற்காண்க. எல்லாச்சீவருமுத்திபெறாமலிருப்பானேனென்றவிடத்து ஞானிமுத்திபெற்றவனெனக் குறிப்பாற்கொள்ளவொட்டாது இவன்றான்முத்தியடைந்தென வெள்ளிடையாகக்கூறினார். இனிமுத்தியடைவானையடைந்தவனென்றது துணிவுபற்றி. இம்மையளவிற்பூர்வவாசனையாலேனு மாடியிற் பிரதிபிம்பம்போல வறிவிற்சடிதியிலெழுந்தடங்குந்தேகாதிபிரபஞ்சப்பாவைகளளவின்றே யெங்ஙனந்துணிவுபெறலாம். "களங்கமற்றகண்ணாடி தன்முன் வேறோர்களங்கமற்றகண்ணாடி காட்டும்போதென்ற" கவியிற்கூறியவாறிருப்பராதலி னங்ஙனங்கூறவேண்டுவதாயிற்று. ஆதலிற்பழுதின்றெனின், அங்ஙனமிருப்பினுமிப்போதே முத்தியென்னலாமா, இனியெய்தற்பாலதாகியநிரதிசயானந்தவாழ் விங்ஙனேயெய்தியதாலேயமென்னையெனின், இங்ஙனமேற்கோளுளவோ? "ஏட்டிலறிவின்றியிறைதன்னிலறிவின்றியிவ்வுடம்பினுடனே வீட்டிலுறைவானையினிவீடுபெறுமென்பதுவிளம்புகிலமே" என்றார்தத்துவராயர். "ஐயத்தினீங்கித்தெளிந்தார்க்கு வையத்தின்வானநணியதுடைத்து" என்றார்திருவள்ளுவர். இதுகிற்க.

(க - து.) இவன்போலெவ்வுயிரு முத்தியடையாததற்கேதென்னை யென்பது. (கூஎ)

ஙஅ - கவி. அ - கை.

[பொதுப்படச்சீவனெனினு மதுமலரகிதத்தாலான்மாவெனவும், சகிதத்தாற்சீவனெனவுங்கொளக்கிடத்தலின், ஆன்மா, ஏகமெனவும், சீவன்பலவெனவுமிக்கவியிற் கூறுகின்றார்.]

அகமெனு மான்மா பூரண மேக மநேக விதஞ்சீ வு
னகமெனு மந்தக் கரண வுபாதிக ளளவில யாதலினாற்
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசக் கிரர்பல வாஞ்
சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டி குடம்பல வால்.

(இ - ள்.) அகமெனுமான்மாபூரணமேகம், எ-து. நானென்னுமான்மா வானது பரிபூரணமாகவிளங்கலின், ஏகமெனவும்:—அனேகவிதஞ்சீவன்அக மெனுமந்தக்கரணவுபாதிக ளளவிலையாதலினால், எ-து. நானென்னுமந்தக் கரணோபாதிக ளளவின்றாதலின் சீவன்பலவித மெனவுமாம்:—சகமுழுதுங் குளிர்சந்திரனேகஞ் சலசந்திரர்பலவாம், எ-து. உலகமுழுதுங் குளிர்ச்சி செய்கின்ற வானசந்திரனேகமும், சலப்பிரதிபிம்பசந்திரர்கள் பலவுமாம்:— சகமிதிலேரிகுளஞ்சிறுகுழிசால்சட்டிகுடம்பலவால், எ-து. இவ்வுலகத்தின் கண் ஏரியும், குளமும், சிறுகுழிகளும், சாலும், சட்டியும், குடமும், இவை போல்வனபிறவும் பலவாயிருத்தலால், எ-று.

அகமென்பது, நான். தேகோகமுதல்சிவோகமீறாவுள்ள வகமென்னும் பேதங்களளவிற்புகாதன. இதிலந்தக்கரணவுபாதிகளுமடங்கின. அந்தக் கரணபிரதிபலனன் சிதாபாசனென்றிருத்தலானும், இவ்வந்தக்கரணமே வுபாதியாநிற்றலானும், இவ்வுபாதிபேதங்க ளளவைகடந்தனவாதலானும், இங்ஙன மளவுகடந்ததுபற்றி யனேகவிதஞ்சீவனெனப்பட்டது. அறிவு, உபாதியென விரண்டாம். மெய்யறிவுநானாகவிளங்கல், ஆன்மா. யாதானு மோருபாதியை யானெனவழங்கல், சீவன். இதுவுமறிவேனுங் கற்பிதத்தை யானெனலால், அறியாமையே. ஆதலினிதனைச்சிதாபாசனென்பர். அக மெனுமான்மாவென்றாற்போல, அகமெனுமுபாதியெனக் கூட்டிப்பொருள் கொள்க. அகமெனுமான்மாவென்றாற்போல, அகமெனுஞ்சீவனென்றுரையா தது, ஆன்மாபொருண்மாத்திரமாயும்; சீவன் சொன்மாத்திரமாயுமிருத்தல் பற்றியென்க. என்னை, "சீவனென்கின்றசொல்லும் பொருளுமாச்செறி ந்தவான்மா." என்றார்வசிட்டபகவான். அறிவையன்றி யானெனற்குப் பொருளின்மையின், ஆன்மாவெனப்பட்டது. மூன்றவஸ்தாவயமாகாதவற் றைச் சாட்சியாநின்றுணர்வதெவ்வறிவோ, அஃதான்மாவெனவும், அவஸ் தைதோறு மவ்வவ்வுபாதிவயத்தாகின்றுணர்வதெவ்வறிவோ, அதுசீவனெ னவுங்கொள்க. தன்னைச்சொப்பிரகாசமாக்காண்டல், ஆன்மா. தன்னையு பாதியாக்காண்டல், சீவன். எனவே, சொன்மாத்திரமாயும பொருண்மாத் திரமாயுமெனக் கூறியதிலையமென்னை. வானசந்திரன்போல்வதான்மா. சலசந்திரன்போல்வதுசீவன். வானசந்திரன்; எதார்த்தமாயும், ஏகமாயும், பிம்பமாயும் நிற்கும். சலசந்திரன்; கற்பிதமாயும், பலவாயும், பிரதிபிம்ப மாயும்நிற்கும். அதுபோல, ஆன்மா; எதார்த்தமாயும், ஏகமாயும், பிம்ப மாயும்நிற்கும். சீவன்; கற்பிதமாகவும், பலவாகவும், பிரதிபிம்பமாகவுநிற் கும். ஆதலினுவமைபொருந்தும். எழுவகைத்தோற்றமாகின் றுயிரெனப் பெயர்கொண்டு சுகத்தைநுகர்வதுடலோ, உணர்வோ? உடலெனின், தன் னைத்தானுணரவேண்டும். உணராதெனின், உடலன்று. உணர்வெனின், கன்மேந்திரியம், ஞானேந்திரியம், மனுதியந்தக்கரணங்கள், உயிர் இவை தன்னைத்தானறியாததா லிவையனைத்துமுணர்வன்று. தன்னைத்தானுணர்ற்

பாலதெத்துவோ வதுமெய்யுணர்வென்னப்படும். இந்தமெய்யுணர்வையான்மாவெனவும், அவைய்னைத்துங்கற்பித வுணர்வாதலின், சீவனெனவுங்கொள்க. தானுகிறவுணர்வையெட்டவறியார் கற்பிதவுணர்வைச்சீவனெனவும், ஆன்மாவெனவும் பாகுபாடு சற்றுமுணராது மீசிரிம்பித்துக்கூறுவர். இவர் மொழி வாய்மையன்று. எந்தவுயிரைச் சோதிக்கினும், அறிவாகவேமுடியுமாதலாலது இணைபாலிடங்கழன்றது, அதனை யான்மாவென்பதற்கையமென்னை. அவ்வறிவையுபாதியுளொன்றுமுடிக்கி னதனைச்சீவனென்பதற்கையமென்னை. அறிவொன்றேபல்லுயிராக்காண்டலி னிவ்வுவமைதன்னற் பாற்றன்று. இதனைமறுப்பார், தன்னைவிட்டுச்சோதிப்போர்.

(க - து.) இவன்போலவெவருமுத்தியெய்தாததென்னையென்ற வினுவிற்குத்தரங்கூறுவான்வேண்டி யிக்கவியிலுவமைகாரணமாக வுயிரொன்றெனற்கும் பலவெனற்குமிலக்கணங்கூறியதென்பது. (௩அ)

௩௩ - கவி. அ - கை.

[ஞானியேபலசீவரொனற்கும் இவன்போலவர்கள்முத்தி
யடையாததற்குமுதாரணமுகத்தாலிக்கவியி
லுத்தரங்கூறுகின்றார்.]

சட்டி குடங்களி லொன்று நசித்திட வதனுட் சலசந் த்ர
னொட்டு முதற்சந் திரனொடு கூடு மொழிந்தவை கூடா வே
கட்டு முபாதி நசித்திடு சீவன் காரண வான்மா விற்
கிட்டு மயிக்கிய முபாதி கெடாதவர் கேவல மாகா ரோ.

(இ-ள்.) சட்டிகுடங்களிலொன்றுநசித்திட வதனுட்சலசந்திரன்ஒட்டுமுதற்சந்திரனொடுகூடு மொழிந்தவைகூடாவே, எ - து. முன்னர்சட்டிகுடமுதலாகக்கூறிய வுபாதிகளுளோருபாதிநசிக்க வக்கணமே யதனுட்காணப்பட்டுகின்றசலசந்திரன் தனக்குமுதலாகவானத்தினின்றுள்ள பிம்பசந்திரனேடொட்டியேகமாகும். ஏனையபிரதிபிம்பசந்திரர்க ளங்ஙனமேகமாகக்கூடுமாகூடாவே. (அதுபோல): — கட்டுமுபாதிநசித்திடுசீவன் காரணவான்மாவிற்கிட்டுமயிக்கியம், எ-து. பந்தித்திருக்குங்காரணோபாதியை நசிக்கச்செய்தசீவன் எல்லாவுயிர்க்குமுதற்காரணமாகின்றுள்ள வதிஷ்டானவான்மாவிற்கலந்தேகமாவன்:—உபாதிகெடாதவர்கேவலமாகாரோ, எ-து. காரணோபாதியைநசிக்கச்செய்யாத வேனையசீவர்களையிக்கியமாகார், எ-று.

உபாதிநசித்திடுசீவன், உபாதிகெடாதவரென்னுமிடத் திவ்விருவுபாதிகளுந் தூலதேகமென்றருத்தங்கோடற்கன்றே; சட்டிகுடங்களி லொன்று நசித்திடவென்றுவமானித்தார். இங்ஙனமிருக்க. அவித்தையாகியகாரணவுபாதியென்றருத்தங்கொண்டதெற்றிற்கோ, சட்டிகுடசந்திரனென்னுஞ்சலசந்திரனென்றமையானும், சலாதாரத்துக்காகவன்றிச் சட்டிகுடங்களாதிகூறற்கவசியமின்றாதலானும், பிரதிபிம்பித்தற்காய தர்மஞ் சலத்திலிருப்பதானும், அந்தத்தர்மஞ்சடமுமன்று சலத்தையன்றிவேறுமன்று: சலமெனி

ன், சலப்பிரதிபிம்பமாகுமா; வேறெனின், சலத்தையன்றிவேறாகுமா; இங்ஙன முாறுமாதலானும், அந்தத்தர்மம்பேதாபேதமாகிற்குமாறுபோன்று, தூலான்மாவென்று தந்தக்கரணபிரதிபலன வான்மாவென்றமையானும், கரணுதாரத்துக்கன்றி யெவ்வகைதூலமுங்கூறற்கவசரமின்றாதலானும், பிரதிபிம்பத்திற்காயதர்மங்கரணத்திருப்பதானும், அந்தத்தர்மங்கரணமெனின், கரணம்பிரதிபிம்பமாகுமா? கரணத்தையன்றிவேறாகுமா; இங்ஙனமுரறு மாதலானும், அக்தத்தர்மம்பேதாபேதமாகிற்குமாதலானும், இதனையேய வித்தையெனக்கொண்டுவமானித்ததென்க. மகானிடத்துமேனையோரிடத்துங் கரணமிருந்துமையந்திரிபுநிற்றற்கும் அகறற்குமிடமின்மையின் நசித்திடவென்றதவித்தாவுபாதிக்கே தகுமெனவறிக, இதுநிற்க. தூலநாசம் முத்தியெனின், பிரளயமுத்தியாகக்கண்டிலமே. சூக்குமநாசம்முத்தியெனின், சர்வசங்காரம்முத்தியாகக்கண்டிலமே. ஆதலினுபாதியைக் காரணவுடலென்றனரொமதாசிரியர். காரணவுடல், அறியாமை. அதவது; செகசீவபரஞ்சுயம்பன்றியிருக்க விவற்றைச்சுயம்பென்றும், அநாதிநித்தியத்துவமென்றுமுணர்தல். எனவே, அறியாமையெனலெங்கெங்குளதோ, அங்கங்குளதுசீவன். இலதேலிலதென்றாயிற்று. ஆகவே, சீவன், அறியாமைவடிவனெனப்பெற்றாம். பாலையன்றித்தயிரோர்முதலன்றாமைபோல, அறிவையன்றி யறியாமையோர்முதலன்று. அறியாமைநசித்தவிடத்தஃதெங்ஙனமாம், தனதுமுதலாம். நசியாவறியாமை தனதுமுதலாகாது. ஓர்சந்திரனேபலசந்திரனுகக்காண்டல்போல, ஓரறிவேபலவறிவாகக்காண்கின்றது. அவை பலவுஞ்சந்திரர்களாயின், இவைபலவுமறிவுகளாகலாம். ஆகாவேலாகாவென்க. அவற்றுளோர்சந்திரனசிக்கில் முதல்சந்திரனேடொட்டும். அதுபோல, அவற்றுளோரறியாமைநசிக்கின் முதலறிவோடொட்டும். ஏனையவையங்கேயொட்டாவாறுபோன்று, இங்குமொட்டாவாம், ஆதலினிவ்வுவமைபொருந்தும்.

(க-து.) சீவன்முத்தனேபலசீவரொனலும், பலசீவருமுத்தியெய்தாரொனலு மேற்கவமைந்ததென்பது. (கக)

௬௦ - கவி. அ - கை.

[முன்னர் ஞானியீசனுமாமென்றதற் கொருவாற்றாலுத்தாங்கூறினீ, ரதனைப்பூரணமாகவேற்றற்குத்தடைகளுள, அவற்றிற்குவிடைதரவேண்டுமெனலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

இவனயன் மால்சிவ ளுகிய வீசரோ டெப்படி யொப்பா வன்
சிவன்முதன் மூவரு மகில சிருட்டித் திதிநா சங்கள்செய் வா
ரவர்பிறர் மதிகளு முக்கா லங்களு மறிவார் விபுவா வார்
தவமிகு குருவே யிவனுக் கவைபோற் சற்றுங் காணே னே.

(இ-ள்.) இவனயன்மால்சிவனுகிய வீசரோடெப்படியொப்பவன், எ-று. இந்தஞானவான், பிரமா, விட்டுணு, ருத்திரன், என்றீசுவரத்து

வம் வாய்த்தவரோ டெப்படியொப்பாவன்:(—எனெனில்) சிவன்முதன்மூவருமகிலசிருட்டி திதிசாசங்கள்செய்வார், எ-து. உருத்திரன்முதலியமூவருஞ் சமஸ்தத்தையுஞ் சிருட்டி, திதி, சங்காரங்கள்செய்யாநிற்பர்:—அவர்பிறர் மதிகளு மூக்காலங்களுமறிவார்விபுவாவார், எ-து. இன்னுமவர்கள் பிறர் நினைப்பவைகளையுந்திரிகாலங்களையுமறிவார்கள், அறிவதுமன்றி,விபுவுக்கெல்லாம்விபுவாவார்கள்: — தவமிகுகுருவேயிவனுக் கவைபோற்சற்றுங்காணேனே, எ-து. தவத்தில்மிகுந்தகுருநாதனே இந்தஞானவானுக்கந்தச் சாமர்த்தியங்களிலொன்று மிருக்கக்கண்டிலனே யிதென்னசிறுமை, எ-று,

மூவருக்குமீசத்துவஞ் சிருட்டியாதிதொழில்களால்வாய்த்தலி னீசனெனவும், குரு எல்லாத்தவங்களிலுமிக்கவராதலின் தவமிகுகுருவேயெனவுங் கூறினார்.

(க-து,) மும்மூர்த்திகோலமீசனுதலி னிவனுக்குஞானியொப்பாவனெனில், 'சிருட்டியாதிதொழில்களும், சர்வஞ்ஞத்துவமும், திரிகாலஞானமும், விபுத்துவமுமெங்கே, இல்லையேயென்பது. ஞானமானுலிந்நான்குமிருக்கவேண்டும். இன்றேல், ஞானமல்லவென்பார்பலரும்; இவ்வேதுகொண்டுகேட்டனனென்க. இந்நான்கும், ஞானத்தினதுசேட்டைகள் இது, புரிவானதுசேட்டைகளைப் புரிவானென்பதுபோலும். ஆகுமா? ஆகுமெனின், வினைமுதலேவினையென்னல்வேண்டும், அங்ஙனமெப்பாடையிலக்கணமுமின்றே, இதுநூதனவிலக்கணமாகவேண்டும், இங்ஙனமெங்குமின்றே, ஆதலிற்பொருந்தாது. பொருந்துமெனில், குதர்க்கம். குதர்க்கம், முறைவழுஞானமெனல், எல்லாச்சேட்டைகளுமற்றுத் தான்மாத்திரமாவிளங்கவலுன் போர் நுண்ணுணர்வோர். இவரோஞானியமொன்போர். இப்பேதந்தெரிவரிது, (௪0)

௪க - கவி. அ - கை.

[ஞானியுமீசனுமாயையாற்பேதமாவுரன்றி, யறிவாற்பேதமாகாதொன்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

தடத்து நீர்நிலாத் திரியெரி யுபயமுந் தழுவுமூர் தனைக்காக்குங், குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர் குடும்பமாத்திரங்காக்கு, மடுத்த மைந்தனே ஞானியு மீசனு மறிவினாற் பிறிவில்லை கெடுத்த மாயையின் குணங்களான் மேலென்றுங் கீழென்றும் பிறிவா மால்.

(இ-ள்.) தடத்துநீர்நிலாத்திரியெரியுபயமுந் தழுவுமூர்தனைக்காக்கும், எ-து. தடாகசலமும், மத்தாப்புமாகியவிவ்விரண்டும், ஏகமாநின்றுள்ளவோரூரைக்காக்கும்: — குடத்துநீர்விளக்கினிலொளி யிரண்டுமோர்குடும்பமாத்திரங்காக்கும், எ-து. கடசலமும் தீபவொளியுமாகியவிவ்விரண்டும்; ஓர்குடும்பமாத்திரங்காக்கும்:—அடுத்தமைந்தனேஞானியுமீசனு மறிவினாற்

பிறிவில்லே, எ-து. என்னைவிடாதடுத்தஞானபுத்திரா ஞானியும் ஈசனுமா கியவிவ்விருவரும், ஞானத்தினுற்சற்றும்பேதமிலராவர்;—கெடுத்தமாயை யின்குணங்களால் மேலென்றுங்கீழென்றும்பிறிவாமால், எ-து. ஒன்றுபடா மற்கெடுத்தமாயையின் குணபேதத்தால் மேலென்றுங் கீழென்றும்வேறு பாட்டையடையும், எ று,

தழுவுமூன்றது; வெவ்வேறுகாதேகமாகநின்றவூர். குடும்பத்தைக் காப்பது, ஊரைக்காக்காது. ஊரைக்காப்பது, குடும்பத்தையுங்காக்குமெ னப்பொருள்படலின், ஞானிகாத்தல், தன்மட்டும். ஈசன்காத்தல், ஞானி யுடனைத்தையுமெனக்கொள்க. இங்கேகாத்தல், தனுகரண புவனபோக ங்களை. இதும்மாயாசம்பந்தமாதலின், கெடுத்தமாயையின்குணங்களால் மே லென்றுங்கீழென்றும்பிறிவாமால், எ-ம், சமஷ்டிவியஷ்டியென்னும்பேத ங்களை யிருவருஞ்சின்மாத்திரமாக்கைாத்தலின், ஞானியுமீசனுமறிவினுற் பிறி வில்லையெனவுங்கூறினர். அறிவினுற்பிறிவில்லையென்பதைப் பிரமன் கூறியபிரமகீதையினும், விஷ்ணுபகவான்கூறியபகவத்கீதையினும், சிவன் கூறியசிவஞானபோதத்திலுங்காணலாம். இம்மூவரும்ஞானத்தையேபிரதி வாதித்தனர். ஆதலினிவர்மூவரும்ஞானியரோ. இவர் உபாதி குணந்தொ ழிலாற்பேதித்தாற்போல, ஞானியும்பேதித்தலின், இதுமாயாசம்பந்தமெ ன்றாயிற்று, தனுகரணபுவனபோகங்களைத் தனித்தனிசீவர்காக்கினும், பிரி த்தலுங்கூட்டலுமீசனுதலா லிவ்விரண்டுகாத்தலுமிவனுக்கே பொருந்தும்.

(க-து.) ஞானியுமீசனுமாயையாற்பேதமுறுவரன்றி யறிவாற்பேதமு றுரென்பது. மாயையென்பதறியாமை. அதுசெகசீவபரங்களைமெய்யென் றுணருமறிவு. இம்மூன்றுமறிவுக்கனர்த்தம், அறியாமைக்கருத்தம். இது மூடர்பாலது, அதுவிவேகியர்பாலது; அறிவுவொத்தலின் ஞானியையீச னென்பதேற்கும். (சக)

சஉ - கவி. அ - கை.

[மானிடரிற்சிறந்தோர்சித்தப்புருடர், பிறவியிற்சிறந்தோர்தேவர். அதுபோலப் பிரமபாவனையிற்சிறந்தோரெவர். என்ப தையிக்கவியிற்கூறுகின்றார்.]

நரான மன்னனைச் சித்தரைப் போல்வே நாரணன் முதலான
சுரர்கண் மாயைவல் லவரணி மாநிக டொக்கமா தவமிக் கோர்
தரணி மானிடர்க் கவைகளில் லாமையாற்றாழ்வுள ராணு லும்
பிரம பாவனை யாலிவ ரவரொனும் பேதமொன்றிலைபா ராய்.

(இ-ள்.) 'நரரின்மன்னனைச்சித்தரைப்போலவே, எ-து. மானிடர் களில் அரசனும், அரசனில் சித்தப்புருடனு மெங்ஙனமதிகாரத்தனும், மகிமையானுமேலிட்டார்களோ அவர்போலப் பிறவியில்;—நாரணனீமுத லானசுரர்கள் மாயைவல்லவரணிமாநிக டொக்கமாதவமிக்கோர் எ- து-

விட்டுணுமுதலியதேவர்கள் மாயாவல்லபமுடையோர், அணிமாதிசித்திகணி றைந்துள்ளமகத்தானதவத்திற்சிறப்புற்றோர்:— நரனிமானிடர்க்கவைகளி ல்லாமையால்தாழ்வுளராலும், எ-து. பூமியில்மனிதர்களுக்கவ்வல்லபங் களில்லாமையா லக்நிலைக்குத்தாழ்ந்தநிலையினராயினும்:—பிரமபா வனையா லிவரவரொனும்பேதமொன்றிலைபாராய், எ-து. பிரமமேநானெனச்செய் யும்பாவனையினால் மானிடரிவரென்றும், தேவர்களவர்களென்றும் கொள் ளும்பேதம் யாதானுமொன்றுளதோ? இல்லையே நீயேயிதனைச்சோதித்துக் காணுதி, எ-று.

பிரமபாவனைசெய்வோர் மானிடர்மாத்திரமன்று தேவருமாதலி னிவ் விருபேதமுமதிலுண்டோ? உண்டெனில், அதுபிரமபாவமன்று. நரரிலென் பதுபோலத் தேவரிலெனக்கூறலாமெனின் நாரணன்முதலானசுரர்களென் றிருக்கின்றதே, ஆதலிற்பிறவியிலெனவருவித்தாம். பிறவியிற்சிறந்தனரொன் றுணர்த்த எழுவகைத்தோற்றத்தில் தேவரைமுதலில்வைத்துவழங்குகின்ற தன்றோ? இதனாலுமுணர்க. மனிதரில் மன்னனும், சித்தப்புருடனு மென் சிறப்புறினும், மனிதரோ. அதுபோலப் பிறவியிற்சிறந்ததேவரில், இந்திர னும், பிரமனும், ருத்திரனும், நாரணனும், அணியணியாகவென்சிறப்புறினு ந்தேவரோ. இவர் பிரமபாவனையிலெவர் பேதமின்றாதலால், ஞானி தேவனு மல்லன், மானிடனுமல்லனென்றாயிற்று. சித்திபெற்றதாலுயர்வும், பெறாத தாலிழிவும், பிரமபாவனையிலெங்கே, யின்றாதலால், பிரமபாவனையாலிவரவ ரொனும் பேதமொன்றிலைபாராயென்றார்.

(க-து.) பிரமபாவனையில்பேதமின்மையின் ஈசனுஞானியுமொப்பமொ ன்ற தையமின்றியேற்கப்படுமென்பது. இதனைச்சோதனையாற்காண்க. (சஉ)

சங - கவி. அ - கை.

[அஷ்டமாசித்திகளு மிவ்வுலகில்முனிவர்பாலதாநிகழ யாங் கண்டிருக்க, இவையீசனதுசுதந்தரமென்றதென்னையென்றவினா விற்கு, இவர்கள்தத்தந்தவமுயற்சியாற் சிற்சிலவடைந்தனரன்றிச் சுதந்தரரல்லவென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக் கணிமா தி, சித் தி பூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ சனதென் றீர், புத்தி யொத்திட வுரைத்தரு ளென்றிடிற் புகழுமீ சனைவேண் டிப், பத் தி செய்திடுந் தவத்தினால் யோகத்தாற் பலித்ததென் றறிவா யே.

(இ-ள்.) முத்திநல்கியசற்குருவேபல முனிகளுக்கணிமாதி சித்திபூமி யிற்கண்டிருக்கவும், எ-து. முத்திசாம்பிராச்சியத்தைத யடியேனுக்களுக்கிர சித்தசற்குருநாதனே, பலமுனிகளுக்கணிமாமுதலிய சித்திகளுளவாகப் பூமியில்கண்டிருக்கின்றனமே யங்ஙனங்கண்டிருக்கவும்:—அந்தச்செல்வமீ சனதென்றீரே புத்தியொத்திடவுரைத்தருளென்றிடில், எ-து, அந்தமகா

செல்வமான திஸ்வரசுதந்தரமாமென்றுரைத்தருளினீர்; அஃதெங்ஙனம் அடியேன்புத்திக்கொத்திருக்கும்வண்ணந் தெரிவிக்கவேண்டுமெனக் கேட்பையாயின்:—புகழுமீசனைவேண்டிப் பத்திசெய்திருந்தவத்தினால் யோகத்தாற்பலித்ததென்றறிவாயே, எ - து. யாவரானும்புகழ்ந்தருச்சிக்கத்தக்க பரமசிவத்தைவேண்டி மிகுந்தபத்தியோடுசெய்யுந்தவத்தினாலும்; கிரியா யோகத்தினாலும் வாய்த்ததென்றறிந்துகொள்ளுதி, எ-று.

முன்கவியில் நாரணன்முதலியதேவர்கள் ; அணிமாதிகடொக்கமாதவமிக்கோரொனவும், இக்கவியில் பலமுனிகளுக் கணிமாதிசித்திகள் தவத்தினால் யோகத்தாற்பலித்ததெனவுங் கூறினதால் இருவருக்குந்தவங்காரணமாக அணிமாதிகள்வாய்த்தவென்றாயிற்று. இவர்களுக்குவாய்த்தவீசனால், அவர்களுக்குவாய்த்ததாராலெனின், அவ்வீசனாலெனவறிக. ஈசனென்னல் மாயாரகிதனை. ஏனையோர்மாயைவல்லவரொன்றதனால் மாயாசகிதரொனத்தானேயமைகின்றது. அவர்கள்மிக்கதவத்தா லணிமாதிகள் முழுதும்பெற்றனர், இவர்கள்தவத்தளவாகச்சிற்சிலபெற்றனர். அணிமாதிகளவர்கட்கேயுரிமை. இவர்கட்கிரவல். எனவே, ஈசனதமிசந்திரிமூர்த்திகளென்றாயிற்று. ஆயினீசனல்லர். இவர்களீசனுடையகோலமன்றோ, கோல்மாவீசன்? அல்லவே, இதுதிறம்.

(க-து.) ஞானிகள் சித்திகளைத்தவத்தினா லடைந்தனரொன்பது. சுதந்தரரன்று. (உரு)

௬௬ - கவி. அ - கை.

[இப்போதுஞானிகளுக் கவர்கள்போற்சித்திவாய்க்காததற்கேதென்னையென்றுவினாவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

சிவசொரூபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத் திகளிரண்டுந்
தவமுளோரடைகுவரொனி லவர்கள்போற் சகலரு மடையாரோ
வவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங் கண்டோ மே
யிவர்கண் ஞானிகளென்றிடிற் சித்திக ளிவர்க்கிலா வகையே தோ.

(இ - ள்.) சிவசொரூபமாந்தேசிகமூர்த்தியே சித்திமுத்திகளிரண்டுந் தவமுளோரடைகுவரொனிலவர்கள்போற் சகலருமடையாரோ, எ - து. சிவசொரூபமேகுருமுகூர்த்தமாக வெழுந்தருளியகர்த்தனே சித்திமுத்திகளென்னுமிரண்டினையுந் தவமுடையவர்களடைவார்களென்றுரைத்தால்அவர்களைப்போலச் சகலமுனிவருமதனையடையாததற்கேதென்னைகொலோ:—அவர்கள்பூருவஞ்சித்தியுஞானமு மடைந்ததுங்கண்டோமே. எ - து. அந்தஞானிகள் பூர்வத்திற்சித்தியையும், ஞானத்தையுமடைந்ததையுஞ் சுருதியாற்கண்டிருக்கின்றனமே:—இவர்கள்ஞானிகளென்றிடிற் சித்திகளிவர்க்கிலாவகையேதோ, எ - து. இப்போதிருக்கிறவர்களையும் ஞானிகளென்று

சொன்னாலிவர்களுக்குச்சித்திகளில்லாததற் கேதென்னைகொலோ, அறிகி லம், எ-று.

அவர்கள்போற் சகலருமடையாரோ, அடைவார்களெனின், இவர்க்கி லாவகையேதோ என்றுவினவவேண்டியது. இதைவிட்டு அடைவாரோ வெனப்பாடமோதி அடைவார்களாவென்றுரைகூறின், அடையமாட்டார் களென்றுகின்றதே, இதுவினவா ? அல்லவே. அடையாரோ இவர்க்கிலா வகையேதோ என்பதிரண்டுஞ்சீடன்வினா. அடைவாரோவென்றதுவிடை. இவ்விடைகுருவினதாகவேண்டும். இக்கவியில்வினாவையன்றி விடையொ ன்றுமின்றே யிதுதோன்றுமை. வழுவன்று. பின்கவி ஆசான்விடை. இக்கவி மாணாக்கன்வினா. இதையறிந்துரைகூறவேண்டும். இதுநிற்க.

(க-து.) பூர்வஞானிகள்சித்தியெய்தினரெனில், இப்போதுள்ளஞானி யரடையாரோ, அடையாததென்னையென்பது. இவை வினா. (சச)

சரு - கவி. அ - கை.

[முன்னர்தவமென்றார் அஃதிருவகையெனவும், அவற்றாலெய்தும் பயனினையவெனவு மிக்கவியிற்கூறுகின்றார்.]

காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென் றும்
பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமுந் தருமைந் தா
வாமி வற்றிலொன் றியற்றின லொன்றையே யடைகுவ ரிதுநீர் வை
யாமு ளைத்தவவ் விரண்டையு மியற்றின ரன்றுள பெரியோரே.

(இ-ள்.) காமியத்தவங்காமியமொன்றையுங் கருதிடாத்தவமென்றும் பூமியிற்றவமிருவகைசித்தியும் போதமுந்தருமைந்தா, எ-து. காமியத்தவ மெனவும், நிட்காமியத்தவமெனவும் பூமியிலிருவகைத்தவமுண்டு. ஞான புத்திரா ! இவைசித்தியையேனும் முத்தியையேனுந்தவறாதுதந்துவிடும்:— ஆமிவற்றிலொன்றியற்றின லொன்றையேயடைகுவரிதுநீர்வை, எ-து. இங் ஙனமாகநின்றுள்ள விரண்டினுள் தவமொன்றையேபுரிந்தோ ரதற்குரிய பலனொன்றையே யடைவார்க ளிதுநீர்ப்பாம்:—யாமுளைத்தவவ்விரண் டையு மியற்றினரன்றுளபெரியோரே, எ-து. யாமுன்னர்கூறியவவ்விருத வங்களையுஞ், செய்தவராகும் பூர்வத்திலுள்ளஞானிகள், எ-று.

ஒன்றிலிச்சைகருதிச்செய்யுந்தவம், காமியத்தவம். கருதாதுசெய்யுந் தவம், நிட்காமியத்தவம். காமியத்தவம் சித்தியையும், நிட்காமியத்தவம் முத்தியையுந்தருமெனக்கொள்க. ஒன்றியற்றில் மற்றோர்பயனுறாதென்பார், ஆமிவற்றிலொன்றியற்றின லொன்றையேயடைகுவரெனவும், முன்னர்சி த்திமுத்தியுடைந்தோ ரிருதவமும்முயன்றவராகுமென்பார், யாமுளைத்தவவ் விரண்டையுமியற்றின ரன்றுளபெரியோரேயெனவுங்கூறினார்.

(க-து.) இருவகைத்தவமுயற்சியாலன்றி யிவ்விருபயனுஞ்சித்திதமெய் தாதென்பது. இவ்விருபயனுங்கடவுளிட்டத்தாலெனின், யாவரிடத்துமோ ர்படித்தாங்கழவேண்டும். இன்றேல் பாரபட்சமுடையராம். இது கூடாது. சுபாவமெனின், முயற்சியும் விதிவிலக்குவழுவாதியற்றவேண்டுமென்பது மெற்றிற்கு. கண்டபடிநடக்கலாமெனின், மிருகங்களினுமென்சிறப்பு. மனு நீதிக்கொத்துநடக்குதுமெனின், மறுமைக்கெதற் கொத்துநடக்கவேண்டும். வேண்டுவதின்றேல், இதுவும்வேண்டுவதின்று. அரசனுக்கினைநேரிடுமேயெ னின், அதுவுமீசுராக்கினையா லிடுக்கணேரிடுமன்றோ, அதுபிரத்தியட்சமன் றேயெனின், இந்தப்பிரத்தியட்சத்தாற் கணிக்கவேண்டுமன்றோ? அன் றேல், மானிடத்தன்மைக்கென்சிறப்பு. ஆதலினவரவர்வினைகாரணமாகவே யவரவரின்பதுன்பநுகர்வர். ஒருவரின்பதுன்பம் பிறருக்கியையாததென் னை? இதுபற்றிக் கன்மகாண்டத்தில் விபரமாகக்காணலாம். இதுஞானகா ண்டமாதலின் வினைவழியேவந் தவைவசிவனாயென்றூர்சான்றோர். அவரி னுந்தெளிந்ததென்னை, இதனையுமறுப்பார், மக்கட்பதர். (சரு)

சசு - கலி. அ - கை.

[அந்தச்சித்திமுத்தியாற்பயனெய்தினோ ரினையறிவ
விக்கவியிற்கூறுகின்றூர்.]

அனக மைந்தனே முத்திஞா னத்தையே யடைந்தன ரல்லாமல்
சனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரா
வினிய சித்தியை விரும்பினோர் சிலர்சில ரிரண்டையு முயன்றூர்கள்
முனிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரு முத்தியைத் தாரா வே.

(இ-ள்.) அனகமைந்தனே முத்திஞானத்தையே யடைந்தனரல்லாமல் சனகன்மாபலிபகீரதன் முதலினோர்சித்திகள்படித்தாரா, எ - து. அகமம தையிறந்தஞானபுத்திரா? சனகமகாராசனும், மகாபலிச்சக்கிரவர்த்தியும், பகீரதராசனும் முதலியசான்றோர் முத்திவேண்டி ஞானத்தையேசாதன மாகவடைந்தனரன்றிச் சித்திகள்வேண்டிமுயன்றனரா இலரோ:—இனிய சித்தியைவிரும்பினோர்சிலர் சிலரிரண்டையுமுயன்றூர்கள், எ-து. கண்டுமகி ழ்தற்கினியதாயுள்ள வணிமாதிசித்திகளைமாத்திரஞ் சிலர்விரும்பிமுயன்றூர் கள். சிலர்சித்திமுத்திகளிரண்டையும் வேண்டிமுயன்றூர்கள்:—முனிவர்சி த்திகள்விநோதமாத்திரந்தரு முத்தியைத்தாராவே, எ-து. இவ்விருதிறத் தினருமுனிவரேயன்றிவேறல்லர், அஷ்டமாசித்திகளும்வாய்க்கில் விநோத மாக விளையாடல்புரிதல்மாத்திரந்தருமன்றி யைக்கியமுத்தியைச் சிறிதுந் தாரா, எ-து.

எனவே, சித்தி அதிசயானந்தத்தையும், முத்தி நிரதிசயானந்தத்தையு ந்தருமென்பதாயிற்று. சித்தி, காலம்போக்கல், முத்தி, காலாதீதமாதல்.

(க-து.) சிலர்முத்திக்கும், சிலர்சித்திக்கும், சிலரிருமைக்குமுயன்றன ரென்பது. இங்ஙனமனுபவமிருத்தல்பற்றிக்கூறியதென்க. (௬௬)

௬௭ - கவி. அ - கை.

[ஞானிகளிற்சிலர்பயனின்றெனத்தெரிந்துஞ் சித்திபற்றி வருந்திமுயன்றதெற்றிற்கென்றவினாவிற்குத்தர மிக்கவியிற் கூறுகின்றார்.]

யோக ஞானமே முத்தியைத் தருமெனி னொழிந்தசித் திகள்வேண்டி
மோக மாயுடல் வருந்தினர் சிலசில முத்தர்க ளேனென்றாற்
போக மாய்வரும் பிராரத்வ கன்மங்கள் புசித்தன்றோ நசித்தேகு
மாகை யாலந்தச் சித்திகள் பிராரத்வ மாகுமென் றறிவா யே.

(இ-ள்.) யோகஞானமேமுத்தியைத்தருமெனி னொழிந்தசித்திகள்வேண்டி மோகமாயுடல்வருந்தினர்சிலசில முத்தர்களேனென்றால், எ-து. ஞானயோகமேமுத்தியைத்தருமாயி னதுநீங்கலானசித்திக ளடையவேண்டிச் சிலசீவன்முத்தர்கள்மிகவுமதில்மோகமுற் றுடலம்வருந்தினர்களே யஃதியாதுக்கெனின்:— போகமாய்வரும்பிராரத்வகன்மங்கள் புசித்தன்றோ நசித்தேகும், எ - து. போகநிமித்தநேரிடும்பிராரத்வகன்மங்களை யனுபவித்தாலன்றோ வவையொழிந்துபோகும்:—ஆகையாலந்தச்சித்திகள் பிராரத்வமாகுமென்றறிவாயே, எ-து. ஆதலினந்தச்சித்திகள் பிராரத்வ கன்மபலனென்றுணர்தி, எ-று.

கிரியாயோகம் ஞானயோகமென்றிருத்தலின் யோகஞானத்தை ஞானயோகமென்றாம். மோகமாயுடல்வருந்தல் ; அதிகமோகங்கொண்டு கனலிடையிலும் ஒற்றைக்காலாற்கழுத்தளவுநீரிலும் ஊசிமுனையிலும் காற்றுப்பட்சணையிலும், இன்னுமிவைபோன்ற வரியவிடுக்கண்களிலும் புற்றாய்க் கல்லாய்மரமாய்ப் பன்னாள்நின்றறியகடுந்தவமுயறலை. சித்திகள்வேண்டியுடல்வருந்தல் இச்சைபற்றியாதலின், இச்சாபிராரத்துவமென்க. பிராரத்வகன்மங்கள்புசித்தல் தனுகரணபுவனபோகங்களிலொன்றாதலின், போகமென்றார். யாவருமனுபவித்துத்தொலைப்பதெல்லாம் பிராரத்துவமென்றுணர்த்தப் பிராரத்வகன்மங்கள்புசித்தன்றோ நசித்தேகுமெனப்பட்டது.

(க-து.) ஞானிகள்மிகமுயன்றெய்தியசித்திக ளிச்சாபிராரத்துவமென்பது. இது; இச்சை அனிச்சைபரவிச்சையென்னும் பிராரத்துவத்துளொன்று. (௬௭)

௬௮ - கவி. அ - கை.

[இங்ஙனமுரைத்தருளிய வாசிரியரைப்புகழ்ந்து துதித்தலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

இலக்க மாயிரஞ் சுருதியா லுகத்தா லென்மன மசையாமல்,
நிலைக்க வேண்டுமென் றருள்குரு வேயகப் பிராந்திபோய்த் தெளிவா

னேன், துலக்க மானகண் ணுடியை யடிக்கடி துலக்கினுற் பழுத
ன் றே, யலக்கண் மாற்றிய தேவரீ ரொனக்குரை யமுதங்க,டெ
விட்டா வே.

(இ-ள்.) இலக்கமாயிரஞ்சுருதியானுகத்தா லென்மனமசையாமல் பில
க்கவேண்டுமென்றருள்குருவேயகப் பிராந்திபோய்த்தெளிவானேன், எ-து.
எண்ணிறந்தசுருதிகளாலும், யுத்திகளினுலும், என்மனமானது கலங்காது
றுதிபெறவேண்டி யனுக்கிரகஞ்செய்தருளியகுருநாதனே! எனதுமனமய
க்கநீங்கித்தெளிவுற்றனன்:—துலக்கமானகண்ணுடியை யடிக்கடி துலக்கி
னுற்பழுதன்றே, எ-து. களங்கரகிதமானகண்ணுடியை யடிக்கடி துலக்கிக்
கொண்டுவந்தாற் குற்றமுண்டோ? இல்லையே:—அலக்கண்மாற்றியதேவரீ
ரொனக்குரையமிர்தங்கடெவிட்டாவே, எ-து. துயரங்களனைத்தையு மொரு
ங்கேயொழித்தருளியதேவரீ ரடியேனுக்குச்சொல்லிக்கொண்டுவரு மமிர்
தானுபவங்கள் தெவிட்டவில்லையே, எ-று.

அகிலாண்டகோடியெல்லாமென்கிறவிடத்தில், அகிலாண்டகோடியெ
ன்பது; கணக்கின்மையெனப்பொருள்படுதல்போல, இலக்கமாயிரஞ்சுரு
தியென்பது; கணக்கிறந்தசுருதியெனப்பட்டது. பலக்கவென்பது, பிலக்க
வெனமரீஇயது. அகப்பிராந்தி, சித்தப்பிராந்தியை. தெளிவாதல், சங்கற்ப
த்தைத்தவிரச் சகமின்றெனத்தெளிதலே. அமிர்தங்கள், சுருதியாதிமூன்றை
யுமெனப்பன்மைகொடுத்தார். இது, உவமையாகுபெயர். அறிவேயானந்த
மாகமுடிதலின், தெவிட்டாவேயென்றார்.

(க-து.) தேவரீரருளியசுகப்பேறுகள், தெவிட்டாவமிர்தம்போல்பவெ
ன்பது. இதனுல், மூன்றுமொத்துத்தெளிந்தனனெனக் குறிப்பிக்கப்பெற்
றும். (சஅ)

சகூ - கவி. அ - கை.

[அவரவருந் தத்தம்வினைகளை யனுபவித்தே தீரவேண்டுமென்
றும், அவைஞானக்கினியானீறுமென்றும், வேதங்கூறில், யா
ன் துணிவதெங்ஙனமென மாணுக்கன்வினவலை யிக்கவியிற்
கூறுகின்றார்.]

கைத வங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லெனை
யா ளு, மைய னேகுரு வேயெவ ராகிலு மனுபவித் தாலன் றிச்
செய்த கன்மங்கள் விடாதென்ற வசனமுஞ் சென்மசஞ் சிதம்
வே வத், துய்ய ஞானத்தீச் சுடுமென்ற வசனமுந் துணிவதெப்
படிநா னே.

(இ-ள்.) கைதவங்களைச்சாத்திரஞ்சொல்லுமோ கருணையாலெனையா
ளுமையனேகுருவே, எ-து. கிருபையோடென்னையாள வெழுந்தவையனே

குருநாதனே! பிறழ்ந்துகூறுமொழிகளைவேதஞ்சொல்லுமா? அஃதியாதெனில்:—எவராகிலு மனுபவித்தாலன்றிச் செய்தகன்மங்கள்விடாதென்றவசனமும், எ-து. யாவராயினுந்தான்தான்முன்செய்தவினைகளைத், தாமேயனுபவிக்கவேண்டும், அனுபவித்தாலன்றிவிடாதென்றவசனமும்:—சென்மசஞ்சிதம்வேவத் தூய்யஞானத்தீச்சுடுமென்றவசனமுந் துணிவதெப்படிநாதனே, எ-து. பிறவிக்குகாரணமாகின்றுள்ள சஞ்சிதவினைவேகும்படி யதனைப்பரிசுத்தஞானாக்கினி நீறாக்குமென்றவசனமுமாம். இவ்விருவசனங்களிலிஃதுண்மையென யான்துணிவதெங்ஙனம் அதனைத் தெரித்தியருளும், எ-று.

கைதவம்; உறுதியின்றியமொழியெனினுமமையும். எவராகிலுமென்றது, எவ்வளவுயர்ந்தநிலையினராயினுமென்பதை. இவர்திரிமூர்த்திகளெனினுமமையும், நாரணன்முதலானசுரர்க ளணிமாதிகடொக்கமாதவமிக்கோரென்பதனுலென்க. நாரணன்முதலினரும் செய்தமாதவமிகுதியாலன்றே, தொக்கவணிமாதிகளென்றார். அணிமாதிசித்திமுழுது மிவர்களுக்குவாய்த்தல், பிராரத்துவம். யாதுமுயற்சியால், தத்தந்தவமிகுதியாலென்றுயிற்று. ஆகவே, இவர்களும்வினையனுபவித்துத் தீரவேண்டுமென்பதுபெற்றும்.

(க-து.) எவரேனும்வினையனுபவித்துத் தீரவேண்டுமென்றும், அவ்வினை ஞானக்கினியானீறுமென்றும், வேதங்கூறுவதில்யாதுண்மையென்பது. செய்யுங்கன்மமென்னுது செய்தகன்மமென விறந்தகாலத்தாற்கூறியதால் சஞ்சிதவினையென்றேகொள்ளவேண்டும். (சுக)

ரு௦ - கவி. அ - கை-

[அவ்விருவிற்குவிடைகூறுவான்வேண்டி வேதங்கள்கூறும் பூர்வ பட்சம் சித்தாந்தம் இனையவென விக்கவியிற் கூறுகின்றார்.]

சீவ பேதங்க ளளவில்லை மைந்தனே செய்கையு மளவில் லை
யாவ வாமவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக் கிப்
பூவ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோற் பூருவஞ் சித்தாந் தங்
காவல்வேதங்களிரண்டையும்வசனிக்குங்காண்டமூவகையாலே.

(இ-ள்.) சீவபேதங்களளவில்லைமைந்தனே செய்கையுமளவில்லை, எ-து. ஞானபுத்திரா! சீவபேதங்களளவுபடாததா லவர்கள்முயற்சிபேதங் களுமளவுபடாவாம்:—ஆவவாமவரவரதிகாரங்க ளறிந்துபக்குவநோக்கி, எ-து. அவசியமாகவேண்டுவனவாகிய வவரவரதிகாரதாரதம் மியங்களையுற்றுணர்ந்து தக்கபக்குவங்களையுநோக்கி;—பூவுலர்ந்துபின்பலங்கள்காட்டுவனபோல், எ - து. விருட்சங்கள்முன்னர்புஷ்பித்து பின்னர்பலன்தருமாறுபோன்று:—பூருவஞ்சித்தாந்தங் காவல்வேதங்களிரண்டையும் வசனிக்குங்காண்டமூவகையாலே, எ-து. நமக்குவிதிவிலக்காற்காவலாகின்றுள்ள வேதங்கள்; பூர்வபட்சம், சித்தாந்தமென்னுமிரண்டுவிஷயங்களையும், கன்மம் பத்தி ஞானமென்னுமூன்றுகாண்டங்கள் காரணமாகத்தெரிவிக்கும், எ-று.

சைதன்யம்; உபாதிசகிதத்தாற்சீவனெனவும், உபாதிகளெண்ணிறந்த னவாதலின் சீவனுமெண்ணிறந்தனவாயிற்று. இங்ஙனமாதல்பற்றிச் சீவபேதங்களளவில்லையெனவும், அச்சீவர்கள் சுகம்வேண்டிப் பற்பலகிருத்தியங்களியற்றுகிற்றலின், செய்வகையுமளவில்லையெனவும், அதிகாரம், ஆளுகை. அறிந்து, திறமறிந்து. எனவே, அவனவனாளுகைத்திறமறிந்து பூர்வபட்சத்தைச்சித்தாந்தமாகவும், சித்தாந்தத்தைப்பூர்வபட்சமாகவும், மூன்றுகாண்டங்களாலே வேதங்கள்பிரதிவாதிக்குமென்பார், ஆவவாமவரவரதிகாரங்களறிந்து பூருவஞ்சித்தாந்தங் காவல்வேதங்களிரண்டையும் வசனிக்குங்காண்டமூவகையாலேயெனவுங்கூறினார். பலங்கள்காட்டுவனவிருட்சங்களாதலினிவ்விருட்சங்களைத்தோன்றுவெழுவாயாக்கிவருவித்தாம். அறிந்துவசனிக்குமெனவும், நோக்கி அலர்ந்து காட்டுமெனவுமுடிகக. மூன்றுகாண்டங்களையு மாங்காங்குமுத்தியெனவேதங்கூறலினிதுபற்றிப் பூர்வபட்சஞ்சித்தாந்தமென்றேற்கலாயிற்று. பட்டிமாடுபோற்றிரிவானைக் கன்மகாண்டவிதிவிலக்கு வயப்படுத்தவேண்டி யிதுமுத்தியெனல், சித்தாந்தம். முன்பட்டிமாடுபோற்றிரிந்தது பூர்வட்சம், சமஸ்தத்தையுமீஸ்வராற்பணம்பண்ணுதலேகமேயான்மா போகமேமுத்தியென்றிருத்தலி னிதன்மேற்பழுதுறைத்தல், பூர்வபட்சம். அதனைச்சுத்தமாக்கல், சித்தாந்தம். அங்ஙனமீஸ்வராற்பணம் பண்ணினுந் திரிபுடியறுதற்பாலதன்றுமையி னதனைச்சோரவிடல், பூர்வபட்சம். அறுத்தற்பாலதுண்மைஞானமாதலி னதனைவிடாதுபற்றல், சித்தாந்தம் இதுபற்றியிவ்விரண்டும். வேண்டுவதாயிற்று.

(க-து.) முன்கவியிற்கூறியவிரண்டுவசனம்பற்றித் துணிவுகூறுவான் வேண்டி யிக்கவியில்பூர்வபட்சசித்தாந்தங்களைக் கூறியதென்பது. பூர்வபட்சம், அன்றெனல். சித்தாந்தம், ஆமெனல். (ருo)

ருக - கவி. அ - கை.

[அவசரம்பற்றியவ்விரண்டுவசனமு மேற்றற்பாலதென இக்கவியிற்கூறுகின்றார்.]

ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானு லுந்
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய் யோ
வீன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானு லு
ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினல் வீடுண் டே.

(இ - ள்.) ஆனபாவிகளடைவனநரகங்க ளவசியமானாலும், எ - து. கொடியபாதகங்களையேவிரதமாகச் செய்தற்குரியபாவிக ளவசியமடையவேண்டியதுநரகங்களையே, அங்ஙனமாயினும், (அவைகள்,) :—தானமந்திரவிரதவோமங்களாற் றவிருமென்பதுபொய்யோ, எ-து. தீர்த்தங்களிலமிழ்ந்தும்ஸ்தானங்களினாலும், மந்திரங்களினாலும், விரதங்களினாலும், யாகங்களினாலும் நீங்கிவிடுமென்றுவேதங்கூறுவதுபொய்யாகுமோ;—ஈனமாம்

பலசென்மசஞ்சிதவினையெத்தனையானாலும், எ - து. இழிவுக்கிடமாவுள்ளபலசென்மசஞ்சிதவினைகளெத்தனைபற்பலவிகற்பமாயினும்:—ஞானமாங்கனல்சுடுமென்றமறைமொழிநம்பினால்வீடுண்டே, எ - து. அவற்றைஞானமாகிறவக்கினிநீறாக்கிவிடுமென்று கூறும்வேதவசனத்தைத் திரிகரணமொத்துநம்பி யனுட்டிக்கின்முத்தியுண்டாகுமே, எ - று.

நரகங்கள்; மந்திரமுதலியவற்றாற்றவிருமென்பதும், சஞ்சிதவினைகள்; ஞானக்கினியானீறாமென்பதும் வேதமாதலாலிதனைநம்பிப்புரியாவிடத்துப் பொய்யாம். நம்பிப்புரிந்தவிடத்துப்பொய்யாமா வீடாமேயென்பார், மறைமொழிநம்பினால்வீடுண்டேயென்றார். இரண்டுவீடெனினும், ஆதுபதவிமுத்தியும், இஃதயிக்கமுத்தியுமாம். ஞானமாங்கனலென்பது, விர்த்திஞானத்தை. அதனால்நரகங்கள்தவிரும், இதனாலினிப்பிறப்பதுதவிரும். இதனையனுபவத்தாற்காண்பதன்றி வறுமொழியாலன்று. ஞானமாங்கனலுருவகம்.

(க - து.) அவ்விரண்டுவசனமுமவசரம்பற்றி மெய்யென்றேற்கப்படுமென்பது. தானம், ஈகையெனினுமமையும். (ருக)

ருஉ - கவி. அ - கை.

[சென்மசஞ்சிதத்தை நீறாக்குவது ஞானமாயிருக்கக் கன்மத்தை விரும்பிமுயல்வ தெற்றிற்கெனவினாவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

என்மனந்திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினையையே ரறுத்திடுந் தேவரீர் மெய்ஞ்ஞானந்
தன்ம யந்தரு மகிமையை விபுதரர் சகத்துளோ ரறியா மல்
கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற காரண முரையீரே.

(இ - ள்.) என்மனந்திருக்கோயிலாத்தினங்குடி யிருந்தருள்குருமூர்த்தி, எ து. என்மனதையேசிறந்தவாலயமாகத் தினமுங்குடிகொண்டெழுந்தருளியகுருமூர்த்தியே:—சென்மசஞ்சிதவினையையேரறுத்திடுந் தேவரீர்மெய்ஞ்ஞானம், எ-து. தேவரீரருளியமெய்ஞ்ஞானமானதுசென்மசஞ்சிதவினையை வேரோடுகெல்லிவிடும்:—தன்மயந்தருமகிமையை விபுதரர்சகத்துளோரறியாமல், எ-து. சமஸ்தமுந்தன்மயமாகும்படியாகவுஞ்செய்யும், இங்ஙனமாயநிலையைத்தரத்தக்கமகிமையைத் தேவருஞ்சகத்திலுள்ளமானிடருமறியாமல்:—கன்மமாங்குழியினில்விழுந்தழிகின்றகாரணமுரையீரோ, எ-து. கிரியாமார்க்கமென்னும்படுகுழியில் வீழ்ந்தழிகின்றகாரணம்யாதுக்கோ, அதனைத்தெரித்தருளும். எ - று.

துரியாதீதநிலையேசிந்தையனாதலின் என்மனந்திருக்கோயிலாத்தினங்குடி யிருந்தருள்குருமூர்த்தியெனவும், சங்கற்பமெழுந்தோறு மதனைச்சின்மாத்திரமாக்குமகிமையனாதலின் மெய்ஞ்ஞானந்தன்மயந் தருமகிமையென

வும், சமஷ்டிவியஷ்டிகளை யாண்டானடிமையெனக்கொண்டு பூசிக்கின் உபாதியன்றோ சிவனீசனுமா ஆகாதே ஆகாதளவும் பூசிப்பதிலென்பயன், பராக்கிலழிவரன்றோ? அழிவது பற்றிக்கன்மமாங்குழியினில் விழுந்தென்வுங் கூறினார். இதுபடுகுழியென்றறியா ததனைச்சிறப்பென்றுன்னுவோர் தேவருமனிதருமாதலின், இவர்களைவிபுதரர் சகத்துளோரெனப்பட்டது. இங்கே கன்மமென்றது, சரியைகிரியைகளை. இவற்றாற்பயன், சித்தசுத்தியன்றிநிரதிசயானந்தமன்று. இவற்றையே மேலெனத்திடமுற்றோ ரெங்ஙனஞானமொன்றுளதாக் கருதியனுட்டித்துத்தெளிவர். இன்றாதலினழிவரெனப்பட்டது. சரியைகிரியைகளைப்புரிவது தோடமன்று, சித்தசுத்திக்கிடம். இடமாயினும், அவ்வளவோடொழிதலின்றி, மேற்கிரியாயோகத்துக் கிடம்பெறவேண்டும். இடம்பெறின்; ஞானயோகத்துக்கிடம்பெறும். இடம்பெறின்தானேதானுதற்கியையும். இம்முறையறியார், யோகத்தையும், ஞானத்தையும் பழுதுகூறுகிற்பர். இதுகற்க.

(க - து.) ஞானனுட்டானஞ்செய்வது சித்தாந்தமாயிருக்கக் கன்மானுட்டானம் புரிவதெற்றிற்கென வினவியதென்பது. கன்மமேபுரிவார்பலருமாதலின் இவ்வையந் தவிர்தற் காசிரியனைவினவினனென்க, கன்மத்தைக் குழியென்றது, மனுவலவுக்கொழிவின்மைபற்றி. (ருஉ)

ருந - கவி. அ - கை.

[அதற்குவிடை கூறுவான்வேண்டி யந்தர்முகம்பகிர்முகமெனப் பிரித்துஅவற்றின்பய னிதனையவெனவிக்கவியிற்கூறுகின்றார்.]

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சேர் வார்
வழிந டப்பவர் பராமுக மாகினன் மலாந்தகண் ணிருந்தா லுங்
குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங்கொண்டுகா மிகளானோர்
பழித ரும்பிற விக்கட லுழலுவார் பரகதி யடையா ரே.

(இ - ள்.) அழிவிலாததற்பதந்தனைமைந்தனே யகமுகத்தவர்சேர்வார், எ-து. ஞானபுத்திரா அழிவின்றிச்சதோதயமாகவிளங்குந் தானுகியபதத்தை யந்தர்முகமாகநின்றவரெவரோ அவரேயடைவார்:—வழிநடப்பவர் பராமுகமாகினல் மலர்ந்தகண்ணிருந்தாலுங் குழியில்வீழ்வர் காண், எ - து. வழிநடப்பவர்கள் பராமுகமாகச்செல்வி லவர்கள் கண்கள்மூடாது திறந்திருக்கினுந் தப்பாதெதிரினின்றபள்ளத்திலவசியம் விழுவார்கள், அதுபொய்யோ நீயேகாணுதி:—அப்படிவெளிமுகங்கொண்டுகாமிகளானோர், எ - து. அவ்வாறுபகிர்முகமே தமக்குப்பயனுகக்கொண்டு விடயவிச்சைமேலிட்டுழலுங்காமிகள்:—பழிதரும்பிறவிக்கடல்மூழ்குவர் பரகதியடையாரே, எ-து. பழியையேதாற்பாலதாகிய பிறவிசாகரத்தில்மூழ்குவரன்றிப் பரகதியாகிய முத்தியையடையவேமாட்டார்கள், எ-று.

அழிவிலாதபதந்தனையென்றது தற்பதமென்றதனால், தானுகியபதமென்றாம். தொம்பதந்தற்பதமென்பவற்றின் ; தற்பதம், பிரமமெனினு

மமையும். ஆயினும், தத்துவக்குழாமனைத்துந் தானல்லதானல்லவெனவிலக நியதிகளையமிஞ்சிநின்றது தானோ, அயலோ? அயலெனின், உடலாதிதத்து வக்குழாங்களை யயலெனக்களைவதெற்றிற்கு. பிரம மயலோ? தானாயின், சீவேஸ்வரராகியவாரோபங்கட்குக் கூடஸ்தபிரமமதிஷ்டானமெனக் கூற வரலாமா? கூறவந்தது தானெனும்பதமதிட்டானமெனற்கு. எங்ஙனம், தானதிட்டானம், தனக்குக்கூடஸ்தபிரமமாரோபம். இவற்றிற்குச் சீவேஸ் வரர் ஆரோபம். எனவே, கூடஸ்தபிரமம் சீவேஸ்வரர்களுக் கதிட்டானமெ னவும், தானெனுநிலைக்காரோபமெனவும் பெற்றாம். சீவேஸ்வரராகநின்ற துங் கூடஸ்தபிரமமாகநின்றதுந் தானே. தானென்பதைத்தள்ளி யிருப்பான் குசைதன்யமுமெங்கே. தானின்றான்குமன்று. தன்னைத்தவிரவுமில்லை. ஆத லின்தானயலன்று. இதுபற்றித்தானாகிய பதமெனவுமாகொண்டாம். அறி வேதானெனக் காண்பாரகமுகத்தவர். அயலேதானெனக்காண்பார் வெளி முகத்தவர். அதற்குப்பயன் சிதாகாசமாதல். இதற்குப்பயன் பிறவியாதல். இதுபற்றி யவர் தற்பதந்தனைச்சேர்வரெனவும், இவர் பிரவிக்கடலுழல்வ ரெனவுங்கூறினார். உயர்வுபற்றியழிவிலாததற்பதமெனவும், இழிவுபற்றிப் பழிதரும் பிறவியெனவு மடைகொடுத்ததென்க. வெளிமுகமாதலுக்குவமை பராமுகம். அகமுகமாதலுக்குவமை யெங்கே. இன்றேனுமிசையெச்சத் தாற் பராமுகமாகாமையெனக்கொள்க. என்னை, "பிறவிப்பெருங்கடனீந்து வர்நீந்தா ரிறைவனடிசேராதார்." என்னுங்கவியில், நீந்துவரொன்னும் வினை முற்றிற் கெழுவாயின்றேனு மிசையெச்சத்தாற் சேர்ந்தாரெனவருவித்தாற் போலும்.

(க-து.) அகமுகத்தவர் தானாவர், பகிர்முகத்தவரயலாவரென்பது. இவ் விருமுகமுஞ் சொலலாலறிவார்க் கென்பயன். (ருங)

ருச - கவி. அ - கை.

[தற்பதமடைவதும் பிறவியடைவது மீசச்செயலாலன்றிச் சீவச் செயலாலன்றேயென்பானைநோக்கி யிதுமூடர்வசனமாகு மென் றிக்கவியிற்கூறுகின்றார்.]

சிறந்த நன்மையுந் தீமையு மீசனார் செய்விக்குஞ் செயலன் றோ, பிறந்த சீவர்க ளென்செய்வா ரவர்கள்மேற் பிழைசொ லும் வகையே தோ, துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற் பொருண் மார்க் கம், மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே யதுகே ளாய்.

(இ - ள்.) சிறந்தநன்மையுந்தீமையுமீசனார் செய்விக்குஞ்செயலன்றோ எ-து. சீவர்கள் சிறந்த சற்கிருத்தியஞ்செய்வது மிழிந்ததுற்கிருத்தியஞ் செய்வதும் ஈஸ்வரன்செய்விக்குஞ் செயலினாலல்லவா:—பிறந்தசீவர்களென் செய்வா ரவர்கள்மேற்பிழைசொலும் வகையேதோ, எ-து. அவன்பிறப்

பிக்க வதனாற்பிறந்த சீவர்கள் சுதந்தரவீனராயிற்றே யவர்களென்னசெய் வார்கள் அவர்கள் மேற்பிழைசொல்லும்வகையாதோ:—துறந்ததேசிக மூர்த்தியேயென்றிடில், எ - து. சகலபற்றினின்றுநீங்கிய வாசிரியமூர்த்தமே யெனக் கேட்பையாயின்:—சுருதிநூற்பொருண்மார்க்கமறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனேயதுகேளாய், எ - து. வேதசாஸ்திரங் களிற்கூறிய வர்த்தமார்க்கங்களைமறந்த மூடர்களெவர்களோ வவர்கள் பித ற்றுமபக்கவசனமேயன்றி யறிஞர்கூறும்வசனமன்று ஞானபுத்திரா! இதனை ப்பற்றி யான்றெளிவாகக் கூறுது மதனைக்கேளுதி, எ - று. காண், அசைநிலை.

பிராந்தி, ஒன்றையொன்றாகக்கொண்டு பிதற்றும்வசனம். ஆட்டுவிப் பானையன்றி யாடுவோர்க்கென்னசுதந்தரமுண்டென்பார்போலச் சீவர்களெ ன்செய்வாரவர்கள்மேற் பிழைசொலும்வகையேதோவெனவும், உயிருமுட லுங்கூட்டலும்பிரித்தலுஞ் சீவத்தொழிலன்றே இரண்டுங்கூட்டியவிட்த்தி யங்குமியக்கமுஞ் சீவத்தொழிலாமா ஆகாதேயெனமறுத்ததென்னில், ஒரு வன் தன்மண்பெண்பொன்னைப் பிறனபகரிக்கி லிவன்சம்மதியான் பிறர் பொருளையிவன்கவர்தற்குச் சம்மதிப்பதென்னை இதுஞாயமாவெனவிவனைக் கேட்கில் நானென்செய்வன் சிவனிப்படிக்குப்புத்திகொடுத்தானென்பன் அவனுமங்ஙனஞ்சொல்வானன்றே? அதற்குமறுமொழியென்னையுள, ஆதலி னிவையெல்லாஞ்சிவன்செயலேயன்று சீவன்செயலேயென்பதை மறந்தவர் பேசுமொழியென்பார், சுருதிநூற்பொருண்மார்க்க மறந்தமூடர்கள்வசனி க்கும் பிராந்திகாணெனவுங்கூறினார்.

(க - து.) அனைத்துஞ்சிவன்செயலன்றென்பது. (ருச)

ருரு - கவி. அ - கை.

[முன்கவியிலனைத்துமீசச்செயலன்றெனவே சீவச்செயலென்ப தாயிற்று அப்பேதங்களையிக்கவியிற்கூறுகின்றார்.]

திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும் வெவ்வே றே
சகந்த னிற்பொது வீசனார் சிருட்டிகள் சராசரப் பொருளெல் லா
மகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைக ளிவையெல் லா
நிகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாகுங்கா ணிமலனார்செயலன் றே.

(இ - ள்.) திகழ்ந்தவீசனார்சிருஷ்டியுஞ் சீவனார்சிருஷ்டியும்வெவ்வே றே, எ-து. எங்குந்தானவிளங்குமீசசிருட்டியும் சீவசிருட்டியுமனுபவமாயிரு க்க வீசனதென்பதுகூடாது, வெவ்வேறாம்:—சகந்தனிற்பொதுவீசனார்சிரு ட்டிகள் சராசரப்பொருளெல்லாம், எ-து. (எங்ஙனமெனில்) உலகத்திற்பொ துவாகிற்பன ஈஸ்வரசிருஷ்டிகள். அசையாசராசரமாகினின்றுள்ளபொருள்க ளனைத்தும். இது சீவச்செயலன்று:—அகந்தையாமபிமானங்கள்கோபங்க

ளாசைகளிவையெல்லா நிகழ்ந்தசீவனார்சிருட்டிகளாகுங்கா ணிமலனார்செயலன்றே, என்-து. உலகத்தில் மிகவுந் தம்மைமறந்து தமதிட்டப்படிநிகழ்வன, சீவசிருஷ்டிகள். அவை; அகந்தையாகிய வபிமானங்களும் கோபங்களும் ஆசைகளும் இவைபோல்வனபிறவுமாம். இஃதுநின்மலமான வீசச்செயலன்று. ஆதலின் சிருஷ்டி யிருவகையாகும், எ - று.

சகத்தையிருவழியுமொட்டுக. பொதுவென்றதனாற்சிறப்பெனவும், நிமலனார்செயலன்றே யென்பதனால், சீவர்னார்செயலன்றேயெனவும் வருவித்தாம். சீவனார்சனாிவை மரூஉமொழி. பொது; தனுகரணபுவனங்கள். சிறப்பு, போகம். போகமென்பது, இன்பதுன்பங்களை. போகநுகர்தலுக்குத் தனுகரணபுவனமின்றேற்கூடாது. ஆதலினிம்மூன்றையும்பொதுவெனவும், தத்தமுயல்வாலன்றிப்போகமெய்தாது, ஆதலிற்போகமொன்றையுஞ்சிறப்பெனவுங்கண்டாம். சராசரமென்பன, இங்கேயுடல்களை. சீவனெனின், சிருஷ்டிபேதம்பிரிப்பானேன்? சராசரந்தனுவாகுழி, பொருளெல்லாமெனலேனைய கரணபுவனமென்றாயிற்று. புவனமென்றது, பூமிமாத்திரமன்று. சகலவண்டாண்டகோடிகளையும், கயிலாயமுதலியபதவிகளையு மெனக்கொள்க. இதுபற்றிச் சராசரமும் ஏனையபொருளிடங்காலமுமென வும்மைத்தொகையாக்காது, சராசரமாகியபொருளெல்லாமெனப் பண்புத்தொகையாக்கின் முரணும்.

(க - து.) செய்கைபேதத்தாற் சிருஷ்டிபேதந்தெரிவித்தனரென்பது. அச்செயலாலாயவை, சராசரப்பொருளெல்லாம். இச்செயலாலாயவை, அகந்தையபிமானமுதலியன. (ருரு)

ருசு - கவி. அ - கை.

[சராசரமுதலியனமுத்திசாதனமெனவும், அபிமானமுதலியன பந்தசாதனமெனவும், சராசரமாதிநசிக்கிற பிறவிநசியாவெனவும், அபிமானமாதிநசிக்கிற் பிறவிநசிக்குமெனவு மிக்கவியிற் கூறுகின்றார்.]

மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தனமாகுஞ்
சீவனாது சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகுந்
தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சநநங்கணசியாவாங்
கோப மாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள்போ மே.

(இ - ள்.) மூவராம்பரன்சிருட்டிக ளுயிர்க்கெலாமுத்திசாதனமாகும், எ - து. மும்மூர்த்திகோலமாநின்றுள்ள வீஸ்வரசிருஷ்டியாலாயவை யெல்லாவுயிர்களுக்கு முத்திசாதனமாயிருக்கும்:—சீவனாது சிருட்டிகடங்களைச் செனிப்பிக்கும்பிணியாகும், எ-து. சீவசிருஷ்டியாலாயவை தங்களைச் செனிப்பிக்கத்தக்க வியாதியாநிற்றலி னிவைபந்தசாதனமாயிருக்கும்:—

தாவராதிகணசித்திடி லொருவர்க்குஞ்சனனங்கணசியாவாம், எ-து. விருட்சமுதலியசராசரப்பொருள்கணசித்திடில் யாதோருயிர்க்குஞ்செனனங்கணசிக்கமாட்டாவாம்:—கோபமாதிகணசித்திடிற் பந்தமாங்கொடும்பிறவிகள்போமே, எ - து. கோபமுதலியவை நாசமாகுமாயின் பந்தமாகின்றுள்ள கொடியபிறவிகளுநசமாம், எ - று.

சிருட்டியாலாயவைகளைச் சிருட்டிகளென்றது, தொழிலாகுபெயர். ஈசகாரியம், தாவராதிகள். சீவகாரியம், கோபமாதிகள். முத்திசாதனம், இருக்கினுமழியினும், கோபமாதிகணசியாவிடத்தென்பயன். எனவே, ஈசன்மேற்பழியின்றென்பதாயிற்று. தாவராதிகள்பெரும்பாலும் பந்தசாதனமாயிருக்க, முத்திசாதனமென்றது; தவம்புரிவோர்க்குணவுக்கிலைகாய்கனி கிழங்குகளும் தங்கற்குவனம் குகையாதி யியைந்தவிடமும் தாகந்தணிதற்குச்சுனையாதிநீருமாயிருத்தல்பற்றி. கோபம் கௌதமரிடத்தும், காமம் கிஷ்ட்ணபகவானிடத்தும், இருந்தும் கொடும்பிறவிபோய தென்றதென்னை? துஷ்டநிக்கிரகத்திற்கும் முன்னர்கூறிவந்த வேற்பாட்டிற்கும் எழுந்ததேயன்றித் தம்பொருட்டாகவன்று. குணமென்னுங்குன்றேறிநின்றார் வெகுளிகணமேயுங்காத்தலரிதெனவும், நித்தியபிரமசாரியெனவும் வழங்குவதெற்றிற்கு.

(க - து.) பிறவிக்கிடம், பந்தம். பந்தத்திற்கிடம், காமவெகுளிமயக்கம். இவற்றிற்கிடம் சீவச்செயலென்பது. இவ்வடிக்குநழுவின், பிறவிநசிக்கும். காமாதிமூன்றுமீசச்செயலாயின், தாவராதிகள்சீவச்செயலென்பம். அன்றேல், சொன்னவாறுகேளுதி. (ருசு)

ருஎ - கவி. அ - கை.

[காமாதிகள்சீவச்செயலன்றி யீஸ்வரச்செயலன்றென
விக்கவியிற்கூறுகின்றார்.]

ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந்தார் க
டேச காலதே காதிக ளிருக்கவுஞ் சீவகா ரியமோ க
நாச மாகியவ் விவேகத்தி னுயிரொடு ஞானமுத் தர்களா னார்
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன் றே.

(இ - ள்.) ஈசகாரியம்பிரளயத்தொழியவு மெவர்பவமொழிந்தார்கள், எ - து. ஈஸ்வரசிருஷ்டியாலாய பூதபௌதிககாரியங்கள் பிரளயகாலத் தொழிந்தும் பவமொழிந்தவரெவர் கண்டிலமே:—தேசகாலதேகாதிகளிருக்கவுஞ் சீவகாரியமோகநாசமாகி யவ்விவேகத்தினுயிரொடு ஞானமுத்தர்களானார், எ - து. தேசமும் காலமும் தேகாதிவஸ்துக்களும் சிறிதுமழியாமலிருக்கவும் சீவசிருஷ்டியாலாய மோகாதிகாரியங்கள் மயமாகாது விவேகத்தாலுசமுற்றுயிரிருக்கவும் அவ்விவேகங்காரணமாக வைக்கியமுக்கியடைந்தனர்:—பாசமோகங்கள்பசுக்களின்செயலன்றிப் பசுபதிசெயல

னறே, எ - து. பாசத்துக்கியைந்தமோகாதிகாரியங்கள் சீவசிருஷ்டியாலாயதன்றி யீஸ்வரசிருஷ்டியாலாயதன்று, எ - று.

சீவன்காரியம் சீவகாரியமென்றாற்போல. ஈசன்காரியம் ஈசகாரியமென்பதில்வழுவென்னை. ஈசகாரியமிருக்கவு மெவர்பவமொழிந்தார்களெனப் பொருட்ர ஒழியவுமென்றார். ஒழியவுமென்பதிலுள்ளவும்மை, இறந்ததுதழீஇயது. இதுசாத்தனும்வந்தானென்பதுபோலும். இருக்கவுஞானமுத்தர்களானொன்பதனால் இருக்கவுமென்ப திருமுகத்ததாகும். ஆதலின் இஃதரிமாநோக்கெனப்படும். இதுபற்றியிம்மொழியையிரட்டித்துக்கூறுதொழிந்தனர். பசுசமோகங்கள் இரண்டாம்வேற்றுமையுருபும்பயனுந்தொக்கதெனினுமமையும். பாசத்துக்கிடமாதலின் பாசமோகங்களெனவும், பசுவுக்குப்பதியாதலின், பசுபதியெனவுங்கூறினார். பசு உயிர். ஞானமுதிர்ச்சிக்கு, ஞானமுத்தரெனினுமமையும்.

(க - து.) காமாதிகள்விளை வீசச்செயலாலன்றென்பது. பந்தமுழுத்தியும்; காமாதிகள்விளைவினாலும், ஒழிவினாலுமெய்துமென்றாயிற்று. இவ்விருமுயற்சியு மீசனதன்றென்க. காமாதிகள்விளைவே, பந்தம். பந்தவிளைவே, பிறவி. காமாதிகளொழிவே, பந்தநாசம். பந்தநாசமே, பிறவிநாசம். இஃதெவர்முயற்சி. (ருஎ)

ருஅ - கவி. அ - கை.

[சீவேசநிலைமையித்தகையதென் றுணர்த்த உவமையாலிக் கவியிற்கூறுகின்றார்.]

அச்சு வத்தமென் றொருமர மதிலிரண் டரும்பற வைகள்வா ழு
நச்சு மங்கொரு பறவையம் மரக்கனி நன்றுநன் றெனத்தின் னு
மெச்சு மங்கொரு பறவைதின் றதென வியங்கியப் பொருளா க
வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவா யே.

(இ - ள்.) அச்சுவத்தமென்றொரு மரமதிலிரண் டரும்பறவைகள்வாழும், எ-து, அரசெனப்பெயருள்ளவிருட்சமொன்றுளது, அவ்விருட்சத்தில், அரியபட்சிகளிரண்டுவாழாநிற்கும்:— நச்சுமங்கொரு பறவையம்மரக்கனி நன்றுநன்றெனத்தின்னும், எ-து. யாவரானும்விரும்பத்தக்க வங்குள்ளபறவைகளிலொன்று, அம்மரக்கனிகளைக்கண்டுகொத்திக்கொத்தி நன்றாயிருக்கின்றதுநன்றாயிருக்கின்ற தெனத்தின்னாநிற்கும்:—மெச்சுமங்கொருபறவை தின்றதென வியங்கியப்பொருளாகவைச்சு, எ - து. யாவரானுந்துதிக்கப்பெற்றவங்குள்ளமற்றோர்பட்சி யக்கனிகளைத்தின்றதென்றுபெருமைதந்து அந்தப்பட்சிகளைக்குறிப்பொருளாகவைத்து:— மாமறைசீவனையீசனைவகுத்தவாறறிவாயே, எ - து. மகத்தானவேதங்கள் சீவனையுமீசனையும்வகுத்துக் கூறிய்முறைமையையறிந்துகொள்ளுதி, எ - று.

அச்சுவத்தம், தலைகீழதாவுள்ளமாயாவிருட்சம். எனவே, எமதறியாமை யென்றாயிற்று. ஆகவே, சீவேஸ்வரர்கள் கற்பிதமெனக்கொண்டாம். கொள்ளவே, கனிகள்விடயமெனவு மவற்றைநுகர்வதுசீவனெனவும், தின்னாத தீசனெனவும்பெறறாம். இங்ஙனம்வகுத்ததுயாமன்றென்பார், மாமறைவகுத்தவாறறிவாயே யென்றார். இங்கே யறியாமையி லறிவறியாமை. இவ்விருவருந் தன்னைத்தானறியாராதலினிவரறிவு, அறியாமை யென்னப்படும். ஆதலினிதனை மாயாவிருட்சமெனவும், தன்னைத்தானறியாத கடுந்துறவி போறலி னீசனையறிவெனவும், கடுந்துறவியல்லார்போறலிற் சீவனையறியாமையெனவும், இவ்வேதுபற்றி யம்மரக்கனியைத் தின்னுமெனவுந் தின்னாதெனவும், இவ்வறிவறியாமை மூடத்திலாதலி னிம்மூடஞ் சத்தன்றாமையாம், இவ்வசத்தில் பரஞானமபரஞானமாகவும், அபரஞானம்பரஞானமாகவும்,மாறிக்காண்டலானும், அச்சுவத்தமென்றது; தலைகீழதானவிருட்சமெனவும், இதுமாயையெனவுங் கூறியவாறுகாண்க. அனிர்தசடதுக்கத்தைச் சச்சிதானந்தமெனக்காண்டல் மாறாயவுணர்வாதலினிதனைத் தலைகீழதெனவும், சுயம்பல்லாததைச் சுயம்பெனக்கோடல் தேகாதிகளையாதலி னிதுவுந்தலைகீழதெனவும், நிரவயவமானதன்னைச் சாவயவமாககாண்டலும், அவஸ்தாரகிதமானதன்னை யவஸ்தாமயமாகக்காண்டலும், காரணகாரியரகிதமானதன்னைக் காரணகாரியமாகக்காண்டலும், தந்தையாதியகற்பனையிறந்த தன்னைத் தந்தையாதியாகக்காண்டலுமாகிய விவையனைத்துந் தலைகீழதெனவும், பிறப்பிறப்பற்றதன்னைப் பிறப்பிறப்புடையனாகக்கோடல் தலைகீழதெனவுங் கொள்ளினுமமையும். இன்னுமிவைபோல்வன பிறவுங்கொள்க. இன்னுநீணோக்கிற்பெருகும். என்னை, "சொற்றவற்றியலான்மற்றையபிறவுந், தெற்றெனவுணர்தல் தெள்ளியோர்கடனே" யென்றார் சான்றோர். ஆதலின் தலைகீழதான மாயாவிருட்சமென்பது தடையின்றியமையும்.

(க-து.) சமஸ்தமுமித்தைதயெனக்காட்டியதில் சீவேஸ்வர தாரதம்மியமினையவெனவுணர்த்தியதென்பது. அறிவையன்றிச் சீவேசரின்மையானும், அவ்வறிவுபொருளல்லவற்றைப் பொருளாயறிவதானும், இவ்வறிவைநிதானமெனல்கூடாமையானும் தலைகீழதான மரமாகவுவமித்ததிலென்பிழை. மறுப்பார்தன்னறிவைச்சத்துஞ் சோதித்தறியார்போலும். தத்தெரிசனத்தாலன்றிக் கல்விஞானம் திரிகாலஞானமுதலியவற்றானிமிராஞானமாதலி னிதனை யச்சுவத்தமென்றதை மூடத்தால் மறுக்கிலென்பயன். (௫அ)

௫கக - கவி. அ - கை.

[காமாதிசேட்டைகள் தம்மால்விளைந்ததெனக்கண்டார், அவற்றையங்ஙனேகளைய்த்துணிவர். ஈசனால்விளைந்ததெனக் கொண்டார், களைதற்குச்சற்றுமெண்ணமுறா ரென்பதை யிக்கவியிற் கூறுகின்றார்.]

இந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லா ம
லந்தத் தேவனால் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார் க

ளிந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லா ம
லந்தத் தேவனா லன்றெனும் விவேகியே யமலவீ டடைவாரே.

(இ - ள்.) இந்தச்சீவனால் வருமறுபகையெலா மிவன்செயலல்லாமல், எ-து. இந்தச்சீவனால்விளையுங் காமக்குரோதாதிகளென்னும் பகையனைத்து மிவன்செயலா லுண்டாயினவென் றுணரவேண்டுவதன்றி:—அந்தத்தேவனால்வருமென்ற மூடர்களதோகதியடைவார்கள், எ - து. அந்தத்தேவனால் விளையுமென்ற மூடர்கள் நரகமேயடைவார்கள்:—இந்தச்சீவனால் வருமறு பகையெலா மிவன்செயலல்லாமல், எ - து. இந்தச்சீவனால்விளையுங்காமக் குரோதாதிபகைகளனைத்து மிவன்செயலா லுண்டாயினவென் றுணரவே ண்டுவதன்றி:—அந்தத்தேவனாலன்றெனும்விவேகியே யமலவீடடைவாரே, எ-து. அந்தத்தேவனால்விளைந்ததன்றென வூகிக்கத்தகும்விவேகியொவரோ அவரோவின்மலமுத்தியையடைவார், எ-று.

அணிமைபற்றி யிந்தச்சீவனாலெனவும், சேய்மைபற்றி யந்தத்தேவனா லெனவுங்கூறியதென்க. அணிமைசேய்மை; காமாதிகள் தனதுவிகற்பபுத்தி யேயெனக் களைதல்காறு நீங்காமயல். அறுபகை; காமக், குரோத, லோப, மோக, மத, மாச்சரியமென்பன. இவற்றைப்பகையென்றதுவுமையாகு பெயர். அதோகதி; எவற்றினுங்கீழாயகதி. அதாவது; தேவகதி, மனுடகதி, விலங்கின்கதி, நரககதியென்பவற்றுள் நரககதி. விவேகியேயென்பதிலேகா ரம் பிரிநிலை. "திரிவிதவுலகத்தர்தொருஞானி" யென்றலினருமைபற்றி விவேகியேயென் றொருமையாக்கியதென்க. அறுபகையுந்தமதுவிளைவென் பார், அவற்றைநசிக்கத்துணிவர். அவன்விளைவென்பார், அவற்றைறவினோத மாகக்கொள்வர். இவனைமூடனென்பதும், அவனைவிவேகியொன்பதும் குற் றமோ? குற்றமெனின், அவர்கட்குமனோசலனமும் இவர்கட்கின்மையும்வ ரற்கிடமின்மை, ஆதலிற்பொருந்தாது.

(க-து.) காமக்குரோதாதிவிளைவு தமதுசெயலாலெனக்கண்டார் விடு வனென்பது. இவன்செயலென்னுமலெனப்பாடமுமிருக்கின்றது. இவன் செயலாலாயதென்னுமலெனப்பொருள்படும், இதுவுங்கூடும். காமக்குரோ தாதிவிளைவையும், அவற்றாலாயவின்பதுன்பத்தாக்கையு மீசச்செயலென்னு தாரெங்கணுமரியர். இதுபற்றிவனையறுத்ததென்க. இம்மூடபாத்திரர் மதத் தர். அல்லாதாரத்துவிதிகள். அவர்களயலேநானென்போர். இவர்களறிவை நானென்போர். ஆதலினவனைமூடனெனவும், இவனைவிவேகியெனவுங் கூறப்பட்டது. அயற்கோடற்பாலதன்றாமையின், நானெனலறிவென்றாம். அல்லவென்பார் மூடனெனற்குரியர். இவர்வாதமே மாயாவாதமெனப்படு வது. இதுதன்பாலதெனச்சற்றுந் தெரியாதயலார்மேலேற்றினாரோ. இவ னைமிருகமென்னாது பிறப்பால் மனிதனென்பதிலென்சிறப்பு. முன்கவியிற் சீவனென்போரிவனெனத் தெரிவித்தற்கிக்கவியிலிங்ஙனங்கூறியதென்க. இவ ர்களே நாஸ்திகராஸ்திகனென்பவரும், யுத்திக்கொவ்வாதுகூறும் வேதாந்தி யருமென்பதிற் சிறிதுமையுங்கோடற்க. (ருக)

சுo - கவி. அ - கை.

[ஈஸ்வரசிருஷ்டிபொதுவெனல் முரணுவதென்னையென்றதற்கு விடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

நலமெய் யையனே யெல்லவர்க் குந்தெய்வ நாயகன் பொதுவா ஞற், சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதே னென்று யேற், குலவு மைந்தரைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்து துட் டரைக்காய் வன், கலைக ணல்வழி வரச்செய்யுந் தண்டமுங் கருணையென் றறிவா யே.

(இ-ள்.) நலமெய்யையனே யெல்லவர்க்குந் தெய்வநாயகன்பொதுவா ஞல், எ-து. நன்மையேமெய்வடிவாயமைந்தகர்த்தனே ! யாவருக்குமீஸ்வரன்பொதுவாயிருப்பனுயின்:—சிலரைவாழ்வித்தல் சிலரொடுகோபித்தல் செய்வதேனென்றுயேல், எ - து. சிலரைவாழ்வித்தலும் சிலரைக்கோபித்தலுஞ் செய்வதெற்றிற்கெனக்கேட்பையாயின் :—குலவுமைந்தரைத்தந்தைபோற் சிட்டரைக்குளிர்ந்து துட்டரைக்காய்வன், எ - து. குலவிக்கொண்டிருக்கும் புத்திரரைத் தகப்பனெப்படிநேசிப்பதுங் கோபிப்பதுமோ அதுபோலச் சிவன் சிட்டபரிபாலனமுந் துட்டநிக்கிரகமுஞ்செய்வன்:—கலைகணல்வழிவரச்செய்யுந் தண்டமுங்கருணையென்றறிவாயே, எ - து. துன்பமுறத்தண்டித்தலும்; வேதாகமசன்மார்க்கநெறியில் வரும்படிசெய்யுங்கிருபையென்றறிதி, எ-று.

சிட்டரைக்குளிர்ந்துதுட்டரைக்காய்வனென்பது; சிட்டரைநேசித்துத் துட்டரைவெறுப்பனென வுரைகொளற்கியையும். தண்டித்தலுங்கருணையென்றதனுல் பகையாகவன்றென்பதாயிற்று.

(க-து.) ஈசன், எவர்பாலுமிரக்கமுடையனென்பது. இதனுல்பட்சபாதனல்லனெனப்பெற்றும். நீதிவான்தண்டித்தல் ஒழுக்கநெறிசேறற்கு. இதுபோலுமெனின், யாதோர்காரணமாகவேனு நடுநிலைமைசற்றுநழுவினுநழுவுமெனத் தந்தையையுபமானித்தார். (சுo)

சுக - கவி. அ - கை.

[இன்னுமவர்பட்சபாதரல்லரெனலை வற்புறுத்தவிக்கவியினு முபமானபூர்வமாகக்கூறுகின்றார்.]

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்களல் புனன்மூன்றுந், தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளு, மனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வா னகன்றவர்க் கருள் செய் யா, ளினைய குற்றங்க ளெவற்குற்ற மாகுமென் றெண்ணிநீ யறிவா யே.

(இ - ள்.) மனைவிலங்கறமைந்தனே கற்பகமரங்கனல்புனல்மூன்றும், எ-து. குடும்பவிலங்கைத் தறித்தெறிந்தஞானபுத்திரா! கற்பகவிருட்சமும் அக்கினியும் சலமுமாகியவிவைமூன்றும்:—தனையடைந்தவர்வறுமையுஞ்சீத மூந் தாகமுந்தவிர்த்தாலும், எ-தி. தன்னையடைந்தவரெவரோவவரது, தாரித்திரியத்தையும் குளிரையும் தாகத்தையுநீக்கி யிரட்சிக்கும்:அனையவீசனு மடைந்தவர்க்கருள்செய்வா னகன்றவர்க்கருள்செய்யான், எ - து. அத்தகையதாகவீசனுந் தன்னையடைந்தவர்களுக்கனுக்கிரகிப்பன் அடையாதவர்களுக்கனுக்கிரகிக்கான்:—இனையகுற்றங்க ளெவர்குற்றமாகுமென்றெண்ணி நீயறிவாயே, எ - து. இப்படிப்பட்டகுற்றங்க ளெவர்குற்றங்களாகுமென்று நீ சிந்தித்துத்தெரிந்துகொள்ளுதி, எ-று.

கற்பகமாதிமூன்றும் வறுமையாதிமூன்றும் நேர்நிரனிறை. இவ்வுவமையேற்பதற் கையஞ்சிறிதுமின்றெனக்கொள்க. மூன்றுமென்பது; தொகையொருமையாதலின் தனையடைந்தவரென்றொருமையிற்கூறினார். பாரபட்சனல்லனெனக்குறிக்க அனையவீசனென்றார். இவ்வளவுதெரியாதாரவரிஷ்டமென்பர். இவர்கள்குருத்தன மையமகலாமைக்கிடமாம். எங்ஙனமெனில், சீவர்களென்செய்வ ரவர்கள்மேற்பிழையேதோவென்பதையும், ஈசன்பாரபட்சமுடையனென்பதையும், அல்லனென முரணின்றிக்கூறவகையின்மையையும், அவனைவெறுத்துக்கொள்ளுதற் கிடமாமென்பதையும் வற்புறுத்துகின்றது. இனியங்ஙனமாகாமல் விதிவிலக்கியற்றினரெனில், இப்போதவரிஷ்டமெனவந்ததற் கேதென்னையோ இனியுமவரிஷ்டப்படி நடத்துவரெனத் தானேபொருள்படுகின்றதே, ஆதலின்விதிவிலக்காலென்பயன். இனி விதிவிலக்காற்பயனுளதெனின், அப்போதெந்தசென்மத்திற்செய்த விதிவிலக்காற்சிலரின்பமும் சிலர்துன்பமு மனுபவித்துக்கொண்டிருக்கின்றனர், இதுவகையறுதபோ தஃதெங்ஙனம்வகையறும். இவையெல்லாஞ் சந்தேகவிபரீதமறுதவேற்பாடாம், இதுநிற்க.

(க-து.) சற்கருமங்காரணமாகவின்பத்தையும் துற்கருமங்காரணமாகத் துன்பத்தையுந்தருபவனீசனென்பது. இஃதனுதிதொட்டெனவறிக. அனுதியிற்சீவர்கள் கன்மம்புரிவானேனெனின், இப்போதுபுரிவானேன். இனிவரும்பயனுக்கெனின், இப்போதுவந்தபயனுக்கெப்போதுசெய்தது. அவரிஷ்டமெனின், கூறியதுகூறலாற் கூடாதி. முன்பின்முரணுறுதுகூறவகையறியாதா ரத்துவிதிமுன் னென்செய்வர், இவணொரண்ணற்க. (கக)

சுஉ - கவி, அ - கை.

[ஐயனே விடாதுயிர்களியற்றுமிருவினைக்கீடாக வின்பதுன்பங்
களையீசன்தருவனெனி னிதற்குமுடிவுதானின்றேவெனின்,
உண்டெனவிக்கவியிற்கூறுகின்றார்.]

ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுனைத்துமா னிடர்க்
கீச, னன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்தால் லவர்பின்னே,

சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமாயையைத் தள்ளி, நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிது தானே.

(இ-ள்.) ஒன்றுகேண்மகனேபுமான்முயற்சியா லுரைத்துமானிடர்க்கீசன், எ-து. அங்ஙனமாயின் ஞானபுத்திரா! யான்கூறவேண்டுவதுறுதிமொழியொன்றுள தததனைக்கேளுதி. அதாவது; புருடப்பிரயத்தனத்தினலன்றி வேறொன்ருலாகாதெனமுன்னர்கூறிப் பின்னரீசன்மனிதர்களுக்கு:—நன்றுசெய்யவேகாட்டியநூல்வழி நடந்துநல்லவர்பின்னேசென்று, எ-து. மிக்கவுபகாரஞ்செய்யு நிமித்தமாகவே யேற்படுத்திக்காட்டியவேதாகமநூல்கள்கூறும் விதிவழியேதவருது நடந்து சற்சனரைவிடாதவர்பின்சென்று:—துட்டவாதனைவிட்டுவிவேகராய்ச் செனித்தமாயையைத்தள்ளிநின்று,எ-து. துட்டசேட்டைகளையும் அதுகாரணமாகப்பற்றுந் துட்டவாதனைகளையு மொருங்கேயொழித்துவிட்டு விவேகபாத்திரராய் முன்னர்புத்திவிகற்பத்தாற்றமதிடத்திற்செனித்த பிராந்திரூபமானமாயையென்பதைத் தள்ளவேண்டியவாறுதள்ளி மனஞ்செல்லுழிச்செல்லாதுநின்று:—ஞானத்தை யடைந்தவர்பவங்கள்போ நிச்சயமிதுதானே, எ-து.ஞானமினையதென வுணரவேண்டியவாறுணர்ந் ததனைத்தாருகவனுட்டித்தடைந்தவர்களெவர்களோ வவர்கள்பவத்துக்கேதுவானசஞ்சிதவினைகளனைத்து மொருங்கேயொழிந்துபோம் இதிலையமென்னை இன்ருதலானிதுவேநிச்சயமாம், எ-று.

விவேகியாயெனினுமமையும், ஆயினிதுபலர்பாலைத்தாராமைபற்றி விவேகராயென்ருர். நடக்குதலும் செல்லுதலும் விடுதலும் விவேகராதலும் தள்ளுதலும் அடைதலும் புருடப்பிரயத்தனமன்றிக் கூடாமையின், புமான்முயற்சியாலெனவும், ஏனையவுயிர்கட்கன்றென்பார் மானிடர்க்கெனவும், ஏனையவுயிரையொழித்தது; பெரும்பாலுந் தேவர்புண்ணியகன்மத்தராதலின் சுகத்துக்கிடாயபோகத்துக்கேயுரியர். மிருகாதியைவகைத்தோற்றவுயிர் பாபகன்மத்தராதலின் துக்கத்துக்கிடாயபோகத்துக்கேயுரியராதலினென்க. மனிதர் மிசிரகன்மத்தராதலினிவ்விரண்டிற்கிடாய போகத்துக்கேயுரியராதலைப் பற்றியும், சுகதுக்கநிலையைக்கலந்தனுபவித்தலி னிவர்களந்நிலையைக்கணித்தொழிப்பரொன்பதுபற்றியும், இவரொழித்தற்கியைந்தவராதலின் ஞானமெய்துவரொன்பதுபற்றியுந் தெரிந்தவனீசனுதலி னீசனுரைத்தெனவுங்கூறினர். முத்தியெய்தற்பாலரிவராதலி னிவர்கட்கே நன்றுசெய்யவேகாட்டியநூலெனத்தகும். பொதுப்படமானிடரெனினும், சாத்துவிதகுணமிக்காரையெனக்கொள்க. ஏனையகுணமானிடரை மத்திமவதமத்திற்கூட்டுக. நூல்வழிநடப்பதினல் விதிவிலக்குக்குக்கட்டுபடுதலும், நல்லவர்பின்னேசெல்லுதலா லவரதுநல்லொழுக்கம்படிதலும், ஞானத்தையடைதலால் தானன்னியமாகாது ஞானமாய்விளங்கலுமாம். இது கிருதகிருத்தியமாதலா லினிப்புண்ணியபாவவினைக் கிடமின்றெனவுணர்க.

(க-து.) ஞானகாரமேசங்கற்பநாசமெனவும், சங்கற்பநாசமேயிருவினைநாசமெனவும், இருவினைநாசமேபுண்ணியபாவநாசமெனவும், புண்ணியபாவநாசமே சுகதுக்கநாசமெனவுங் குறிப்பிற் றெளிவித்தாரென்பது. இதுசீவன் வினைபுரிதற்கும், ஈசனிதற்கிசைந்தபலன்தருதற்கும், ஞானகாரமுடிவாதலாலிதுமுடிவிடங்கூறலென்னுமுத்தி. பொதுவாகஞானத்தை யிங்கேசொல்லியினியிதனையேசொல்லப்புகுதலால் நுதலிப்புகுதலென்னுமுத்தி. பவமகற்றத்தக்கதுஞானமெனவே, பொருளைப்பொருளாகக்கொள்ளுமெய்யுணர்வென்பதாயிற்று. இதுபரிச்சின்னதோடமற்றது. (சுஉ)

சா௩ - கவி. அ - கை.

[இந்தஞானமுதிக்குமாறெங்ஙனமென்றவினாவிற்கு விடை விசாரத்தாலெனவிக்கவியிற்கூறுகின்றார.]

இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா விசாரத் தால்
வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுதியாஞ் சரீரத்தி
லிந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டுமொன்றுக்கூடும்
பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசா ரமதா மே.

(இ - ள்.) இந்தஞானந்தான்வருவதெப்படியெனி லிடைவிடாவிசாரத்தால்வந்தடைந்திடும், எ-து. இந்தஞானமுதிக்குமாறுதா னெங்ஙனமெனவினுவில், கணநேரமுமிடைவிடாது விசாரிக்கும்விசாரத்தினுல்வந்துகிடைக்கும்:—விசாரந்தானேதெனின் மனுதியாஞ்சரீரத்தில், எ - து. ஆயின்விசாரமென்பதுதான்யாதோவெனின், மனமுதலாக நின்றுள்ளதேகங்களிலிருக்கின்ற:—இந்தநானெவன்சித்தெதுசடமெதுவிரண்டுமொன்றுக்கூடும் பந்தமேதுவீடேதெனவுசாவுதல்பகர்விசாரமதாகும், எ - து. இந்தநானென்பவனெவன் சித்தெனலுஞ்சடமெனலும்யாது இவ்விரண்டுமொன்றுகச்சம்பந்தித்த சம்பந்தம்யாது இனிச்சம்பந்தமுறாததற்குவிடுதியாது என்றேயாது விசாரணைபண்ணிக்கொண்டிருத்தலே முன்னர்கூறியவிசாரமாவதென்றறிந்துகொள்ளுதி, எ-று.

மனுதியாஞ்சரீரமென்றது; சூட்சுமதூலகாரணமென்றாயிற்று. உசாவுதல்; சான்றோரிடத்திவற்றைவிளங்கவிசாரித்தலை.

(க - து.) ஞானம்; விசாரத்தாலன்றியெய்தாதென்பது. இங்ஙனமாயவிசாரமின்றியெய்த லக்ஷ்யபரஞானம், இங்ஙனம்விசாரித்தல் விதிவிசாரம். ஏனையவிசாரம் பந்தவிசாரம். விசாரமென்றறிவாயேயென்னுது பகர்விசாரமதாமேயெனப் பாடமோதியதென்றெனின், மோனைபகரம்யோலவியைபுபகரங்ஙனமென்றியாலென்க. என்னை, "எழுவாயெழுத்தொன்றின் மோனைவிழுமிழைய" யென்பதனுற்காண்க. விசாரமினையதெனவுணர்த்தியது விசார

மதாகுமென்றது பகொன்றமிலையால்,* ஐயந்திரிபகற்றத் தக்கோனிடத் தென்றாயிற்று. (௬௩)

௬௪ - கவி. அ - கை

[ஞானத்தைப்புண்ணியபரிபாகந்தராதாவென்ற வினாவிற்கு விடை யிக்கவியிறகூறுகின்றார்.]

போன சன்மங்க டமிலனுட் டித்தநற் புண்ணிய பரிபாக
ஞான மாக்குமே விசாரமே னென்றிடி னுமுறைத் திடக்கே ளா
யான புண்ணிய மீசுராா பணஞ்செயி னசுசிபோஞ் சுசியா கு
மான தம்பினை விசாரிதது ஞானதனதை மருவுமென றறிவா யே.

(இ - ள்.) போனசென்மங்கடமிலனுட்டித்தநற் புண்ணியபரிபாகம், எ-து. முன்னனேகசென்மங்களில் யாமனுட்டித்தநல்லபுண்ணியபரிபாகமானது:—ஞானமாக்குமேவிசாரமேனென்றிடினுமுறைத்திடக்கேளாய், எ-து. ஞானத்தையும்விளைவிக்குமேஇஙஙனமிருக்க,விசாரணைபண்ணுவதெற்றிற்கு விவர்த்தந்தானேயெனக்கேட்பையாயின, மெய்யே யதுபற்றியாமுரைக்க வேண்டுவதொன்றுள ததனைக்கேளுதி —ஆனபுண்ணியமீசுரார்ப்பணஞ்செயினசுசிபோஞ்சுசியாகும், எ-து. அஙஙனமாயபுண்ணியங்களை யீஸ்வரப்பிரீதிசெய்தா லசுத்தநீங்கும் அசுத்தநீங்கவே சித்தசுத்தியுண்டாகும்:—மானதம்பினைவிசாரித்து ஞானத்தைமருவுமெனறறிவாயே, எ - து. சித்தசுத்தியுண்டாயபின்ன ரஙஙனமாயமனமானது தன்னையுள்ளவாறுவிசாரணைசெய்துண்மைஞானத்தைத்தானுகவடையுமெனறுணர்தி, எ - று.

இச்செனனமுளதாதலின் போனசென்மங்களுமுண்டு. இச்செனனத்திலனுட்டிக்கும் புண்ணியர்க ளாங்காங்குள ரதனைக்காண்கின்றோம். இதுபோல, முன்னருமுளவொன்பதற்கையமென்னை. புண்ணியபரிபாகம்; புண்ணியமேலீட்டாலாயபக்குவத்தை. புண்ணியபரிபாகம்; மேலாயபோகபாக்கியத்தைத்தருவதன்றியு ஞானமுமாக்குமே எனக்கொள்ளவேண்டுவதாதலாலிதிலும்மைதொக்கது. விசாரத்தால்ஞானம்வருமென முன்கவியிற்கூறி யிக்கவியில்புண்ணியபரிபாக ஞானமாக்குமேயெனக்கூறில், அதுகருவிப்பொருளுமிதுகர்த்தாவுமாகின்றதேயெனில், மெய்யே ஒருபிறிதிஞானமாக்குமேயெனவும் மற்றோர்பிறிதிஞானமாகுமேயெனவு மிருப்பதற்கென்செய்தும். புண்ணியபரிபாகஞானமாகுமேயெனப்பாடமோதி புண்ணியபரிபாகத்தால் ஞானமெய்தலாகுமேயென வெமதாசிரியருரையிட்டன ரதுவேபொருந்துமெனினுமங்ஙனமாக்குக. புண்ணியமீஸ்வரார்ப்பணஞ்செயினெனவே பாவமன்றென்பதாயிற்று: பாவத்தையெனின், அசுசிபோய்ச்சுசியாகாது. ஆயின் பாவமன்னிப்பென்றதெற்றிற்கு? இடைவிடாதுபாவஞ்செய்தற்கு. அன்றேல் மன்னிப்பெற்றிற்கு. தானேவிட்டுவிடலாமே, தன்னைப்புனிதனெனப்பிறர்சொற்கோ, பயனென்னை.

(க-து.) புண்ணியபரிபாகத்தால்மனஞ்சுத்தமாம், அந்தச்சுத்தத்தால் விசாரணைக்கிடமாம், அந்தவிசாரணையால்ஞானம்வரும், அந்தஞானத்தால் முத்திகைகூடும், இங்ஙனமிருக்கப் புண்ணியபரிபாகம்ஞானமாகுமேயெனக் கூறலாமா? இதுமுறையன்றென்பது. புண்ணியம்-சற்கருமம். அது, திரிகரணமுமொத்துப்புரிதல். இங்ஙனம்புரிதலைவிட்டுச்செய்தல, புண்ணியப்போலி. இதனையாவர்மாட்டுங்காணலாம். (கூச)

கூரு - கவி. அ - கை.

[கருமம் விசாரம் என்பவற்றுள், விசாரம் கருமத்தைப்போல
வெல்லாந்தரவலியதா அல்லவே கருமம் ஞானத்தையுந்
தராதாவென்றவினவை யிக்கவியிற்கூறுகின்றார்.]

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமா தி
சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியானமுஞ் சாரூ ப
முத்தி யுந்தரும விசித்திர கருமங்கண் மோகமாத் திரந்தள் ளும்
புத்தி யுந்தர லருமையோ விசாரமேன் புண்ணிய குருமூர்த் தி.

(இ-ள்.) பத்தியும்வயிராக்கியமும்பரலோகமுமணிமாதி சித்தியுந்தவநிட்டையும், எ - து. ஈசுரபத்தியையும் நிராசையையும் சுவர்க்காதிலோகங்களையும் அணிமாமுதலியவஷ்டமாசித்திகளையும் காமியத்தவத்தையும் நிட்காமியத்தவமாகியநிட்டையினையும்:—யோகமுந்தியானமுஞ் சாரூபமுத்தியுந்தரும்விசித்திரகருமங்கள், எ-து. இருவகையோகங்களையும் மூர்த்தியாதிய தியானங்களையும் சாரூபபதமுதலியவையும் தரததருந்தவிநேதகருமங்கள்:—மோகமாத்திரந்தள்ளும் புத்தியுந்தரலருமையோ விசாரமேன்புண்ணியகுருமூர்த்தி, எ-து. தருமசொரூபியாகிய குருமூர்த்தியே! அஞ்ஞானத்தைமாத்திரந்தள்ளத்தகுந்த ஞானத்தையுந்தருதலவற்றிற்கருமையா? அல்லவே, விசாரமெற்றிற்கு. இதென்னவியப்பு, எ-று.

(க-து.) பத்தியாதிமுத்தியிறுவாக்கிடந்த வொன்பதுபேற்றையுந் தரவலியுள்ளகருமத்துக்கா ஞானத்தைத்தருதற்கு வலிமையில்லை, யிதென்னவியப்பென்பது. விசித்திரகருமங்களெனப்பன்மையாக்கியது; விநோதவித்தைகளனவின்மையினதுபற்றியென்க. மோகந்தள்ளுமபுத்தியென்றது மாத்திரமென்மிகைபடக்கூறியது, வலியற்றதெனக்காட்டற்கு. இவ்வொன்பதையுந்தரவலியுள்ளகருமம் புத்தியுந்தருமேயெனப்பொருள்படவின், புத்தியுமென்பதிலும்மை யிழிவுசிறப்பாயிற்று. ஏனையவொன்பதுவலகையும்மை யெண்ணும்மை. விசாரமேயதெனத்தெரிவித்துங் கன்மவழுத்தம்விடவில்லையே எனையொன்னம்விவேர். சென்மம்பலவேண்டும். விசாரமில்லாவிடத்து முற்றத்துறந்து மென்பயனென்பதை யிவனறியான்போலும். அறிவிலு மாசான்மொழியாற்றிதுமென்ன விறுவியதாகலாம். ஆதலினிஃதறிவிறு. இது பரிட்சிப்பதன்றேவெனின், தெரியினு மின்னும்விடையாதளதோவென்று

மையத்தாற்கேட்டதாகக் கொள்ளலாகாதோ? ஆதலின் பரிட்சிப்பதற்கன் றென்க. இங்ஙனமாகவரும்விளுவனைத்தும் அறிந்துமறியாவினு. (கூடு)

சுசு - கவி. அ - கை.

[இதுவிசாரத்தாலன்றிக் கருமத்தாலாகுமாவென யுத்தியா லுபமானபூர்வமாக விக்கவியிற்கூறுகின்றார்.]

வேட மாறிய பேர்களை யறியவே வேண்டினன் மகனே கேள்
கூட மாமவர் சுபா வங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியா ம
லோடி யுங்குதித் துந்தலை கீழ்நின்று முயர்ந்தகம் பத்தே றி
யாடி யும்பல கன்மங்கள் செய்யினு மவருண்மை தெரியா தே.

(இ-ள்.)வேடமாறியபேர்களையறியவேவேண்டினல்மகனேகேள், எ-து. சற்றுமொழிவின்றி வேடத்தால்மாறியபேர்களை யிளையரென்றறியவேண்டு தற்கே யெண்ணங்கொண்டு கண்டுபிடிக்கவிருப்பங்கொள்ளில் யாமோர்தந் திரங்கூறுதும்ஞானபுத்திரா ! அதனைக்கேளுதி:— கூடமாமவர்சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந்தறியாமல், எ - து. இரகசியமாயுள்ளவவர்கள் சுபா வநடைகளையும் ஒழுக்கங்களையும் குறிகளையும் ஆராய்ந்துணர்வதைவிட்டு:— ஓடியுங் குதித்தும், எ-து. நாளொன்றுக்கேழுரோடியும் மருள்கொண்டார் போலாவேசம்வந்துகுதித்தும்:—தலைகீழ்நின்று முயர்ந்தகம்பத்தேறி யாடி யும் பலகன்மங்கள்செய்யினு மவருண்மைதெரியாதே, எ - து. தலைகீழதாக நின்றுதவஞ்செய்தும் மிகவுமுயர்ந்தகம்பத்தின்மேலேறிக்கூத்தாடியும் இன் னுமிவைபோன்றபலவிநோதகன்மங்கள்செய்தாலும் அவ்வேடதாரிகளினை தார்த்தவடிவ மெங்ஙனந்தெரியும் தெரியமாட்டாதே, எ - று.

கூடம் மறைவு. தேசவுளவுகாண வரசனுலேவப்பட்டோனதுமாறு வேடந்தன்னியவனையிளையனெனக்காணப்புகுந்தமற்றொருவ னவனோடுகூடி யுறவாடிநின்றுபழகி லவனுண்மை வடிவங்கண்டுபிடிக்கலாம். இங்ஙனஞ் செய்தலைவிட்டு, அவனுண்மைவடிவங் காணவேண்டிப் பலவிடத்தோடுத லும் குதித்தலும் தலைகீழதாநிற்றலுமாகிய விவைபோன்ற பலகோரனை நடிப்புகள்செய்யினுங்காணுமா காணுதேயிதுபோலக் கைலாயமுதலியதேச வுளவுகாண வஞ்ஞனென்னுமரசனுலேவப்பட்டோன்அவனெழுவகைத்தோ ற்றவேடத்தால் மூடப்பட்டெண்பதுநான்குலக்ஷசெனனங்களுக்குட்பட்டு மூடப்பட்டெங்ஙேரமுங்கரந்துள்ளான், அவனதுமாறுவே டந்தன்னி யவனையிளையனெனக்காணப்புகுந்த விவேகப்போலியென்போ னொருவன் பகிர்முகமாகாதாங்காங்குசிந்தைமறந்து சிதருதனித்தவனோடு பலகாலனிர்விகற்பத்தாற்பழகி லவனுண்மைவடிவங்கண்டுபிடிக்கலாம். இங் ஙனமாயவறிருக்குமவராய்தலைவிட்டு இவனுண்மைவடிவங்காணவேண்டிச் சந்நியாசம்பூண்டுமீண்டுஞ்செல்லாது நாளொன்றுக்கேழூர் சுற்றவிளைசவா கவோடியும் பரவசமாகிக்குதித்தும் தலைகீழதாநின்றரியதவம்புரிந்தும் வெளி முளைபோன்ற உயர்ந்தகம்பத்தேறியாடியும், இன்னுமிவைபோன்ற அரிய பற்பல சற்கருமஞ்செய்தும்பயனென்னை, இன்றுதலாலாராய்தலேதகுதி.

ஆராய்தலானவெளிப்படுத்தும், சற்கருமங்கள் மனதைப் புனிதமாக்கும். இஃதனைச்செய்யாது, அஃதினைச்செய்யாது. கருமம்புரிவோர்க்காராய்தல் தோடம். ஆராய்தல்செய்வோர்க்குக்கருமந்தோடம். இதுமுறையாதலால் வழுவன்று. ஆராய்தல்செய்வோர்பிறர்க்குபகாரமாகக் கன்மம்புரியினும் புரிவர். கன்மம்புரிவோர்புகழ்வேண்டி யாராய்தல்செய்யினுஞ்செய்வர். உபகாரமும் புகழுந் தன்னைவிளக்கற்கன்று. ஓடியும் குதித்தும் தலைகீழ்நின்றும் கம்பத்தேறியும் ஆடியும் பலகருமங்கள்செய்து மவருண்மைதெரியாதெனமுடிக்க. செய்தமென்றதைசசெய்யினுமென்றது காலமயக்கம். ஐந்துவினையுமிறந்தகாலமாயிருக்க வொருவினையெதிர்காலமாதலைப்பற்றியென்க.

(க - து.) ஞானோதயத்துக்குவிசாரமேதக்கதென்பது. இதனினுஞ்சந்திரம் வேறில்லையென்பதருத்தாபத்தி. (கசு)

கஎ - கவி, அ - கை.

[விசாரமின்றியக்கன்ஞானமெய்தலுந் தன்னைத்தானறிதலுங்கூடாதென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத் தால்வே தஞ், சொன்ன ஞானமும விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்தா லு, மன்ன தானங்க டவங்கண்மந் திரங்களா சாரங்கள் யாகங் க, ளென்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற நிலைகளா லவ் வாரா தே.

(இ - ள்.) இன்னவாறந்தப்பிரமத்தை யறிவிக்குமிலக்கணத்தால்வேதஞ்சொன்னஞானமும்விசாரத்தால்வருமன்றி, எ-து. இவ்வண்ணமேயந்தப்பிரமசொரூபத்தை யறிவிக்கத்தக்கவிலக்கணத்தினால் வேதஞ்சொல்லியஞானமும் விசாரத்தால்வந்தெய்துவதன்றி:—சுருதிநூல்படித்தாலும் அன்னதானங்கடவங்கள் மந்திரங்களாசாரங்கள் யாகங்களென்னசெய்யினும், எ-து. அன்னதானங்களையும் தவங்களையும் மந்திரங்களையும் ஆசாரங்களையும் யாகங்களையும் இங்ஙனமாகவென்னகிரியைகள் செய்யினும்:— தன்னைத்தானறிகின்றநிலைகளால்வாராதே, எ - து. இக்கிரியைகளால் தன்னைத்தானறியுமறிவுவாராதே, எ-று.

விசாரத்தினாலன்றிக் கருமத்தினால் ஞானத்தையடையக்கூடாது. கருமத்தினால்ஞானமெய்தலாமெனி னிங்ஙனமெய்தினோரிங்கு ளுண்டேல், அநுபவமுண்டாகுமேலேற்கப்படும்.

(க - து.) கருமசித்தசுத்திமாத்திரந்தரவல்லதன்றி, ஞானத்தையுந்தரவல்லதன்றாயின் சிரவணாதிகளெற்றிற்கென்பது. இதனுசொன்னதுமற்றொருவாய்மையைத் தரசெதென்பதுபெற்றும். மேலே விசாரமேஞானத்துக்குதக்கதென்பதாயிற்று. ஆதலே முமுக்ஷுத்தாரதம்மியமிவைபடுதலக்கண் (கஎ)

௬அ - கவி. அ - கை.

[கருமமேதக்கதெனவதற்கியைந்த வுபமானபூர்வமாக வுபமேயம் மாணாக்கன்கூறுவதை யிக்கவியிற் கூறுகின்றார்.]

துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினற் போ
மன் றி, விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினர் விமலதே சிகமூர்
த் தி, களங்க மாகுமஞ் ஞானமு மப்படி கருமத்தாற் கழுவாம, லுள
ங்கு றித்தஞா னத்தி லெப்படி யொழியுமீ தருள்வீ ரே.

(இ-ள்.) துளங்குதர்ப்பணமழுக்கறக் கைக்கொண்டு துலக்கினற்போமன்றி, எ - து. பிர்காசிக்கின்றசெப்புக்கண்ணாடியைக் களிம்பறக்கையினல் துலக்கினற் போகுமேயல்லாமல்:—விளங்குபுத்தியாலுலகிலார் துலக்கினர் விமலதேசிகமூர்த்தி, எ - து. நின்மலமானகுருமூர்த்தியே! துலக்கமாயுள்ள புத்தியினல் துலக்கினவர்களெவர்கள், (அதுபோல):—களங்கமாகுமஞ்ஞானமு மப்படிகருமத்தாற்கழுவாமல், எ - து. அசுத்தமாயுள்ளவஞ்ஞானத்தையு மவ்வண்ணம் புண்ணியகருமத்தினற்சுத்தஞ்செய்யாமல்:—உளங்குறித்தஞானத்தி லெப்படி யொழியுமீதருள்வீரே, எ-து. உள்ளத்தின்கண்ணினையதெனக்குறித்துக்கொண்ட ஞானத்திலெங்ஙனமொழியு மீதென்னைகொலோ விதனையறிந்தில னிதுவிளங்கத்தெரித்தருளும். எ-று.

கையால்துலக்கினலன்றிக் களிம்புநீங்கிச்செம்புக்கண்ணாடிவிளக்கமாகாது, (அதுபோல). திரிகரணமுமொத்துச்செய்யும் புண்ணியகருமமேலீட்டாலன்றி யஞ்ஞானநீங்கிஞானம்விளங்காது. இங்ஙனமிருக்க, மனதினிச்சயித்துக்கொண்ட நிச்சியஞானத்தி லஞ்ஞானமெங்ஙனநீங்கும். ஞானமெங்ஙனங்கைகூடுமென்றானென்க.

(க-து.) அஞ்ஞானவொழிவுக்குப் புண்ணியகருமமேதக்கதாகத் தோன்றுகின்றதேயென்றானென்பது. செம்புக்கண்ணாடி, பளிங்குக்கண்ணாடியென்றிருபாலது. முன்னர்பெரும்பாலும் பளிங்குக்கண்ணாடிவழங்குதலினமையு மிப்போது செம்புக்கண்ணாடிவழங்குதல்சிறிதுமின்மையுமாம். ஆயினுமிந்நூலாசிரியர்காலத் திவ்விருவகையாடியும், வழங்கியதாகக்காண்கின்றது. இவன்செம்புக்கண்ணாடிபூர்வமாகச் சித்தாந்தப்படுத்தலும், அவர் பளிங்குக்கண்ணாடி பூர்வமாகச் சித்தாந்தப்படுத்தலுமாயிருத்தலினென்க. ஆயினுமிவன்கருமமேமுக்கியமென்பன், அவர்விசாரமே முக்கியமென்பர். இதுபற்றியினிவருங்கவிகளாற்காணலாம். (௬அ)

௯௯ - க்வி. அ - கை.

விசாரமேதக்கிதனைக்குறிப்பிக்க வதற்கிவையேந்தவுபமானபூர்வமாக வாசிரியரதனேமறுப்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசமா தலின்
மைந தா, கற்ப ளிங்கினிற் கருநிறஞ் சகசமாக் கறுத்ததன் று
ரோ பந், தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டினுற் சாதனத் தொ
ழில்வேண் டும், கற்ப ளிங்கிலா ரோபமே கறுப்பெனக் கண்டிட
மனம்போ தும்.

(இ-ள்.) தர்ப்பணத்தினிற் களிம்புவாஸ்தவமலஞ் சகசமாதலின்மைந் தா, எ - து. ஞானபுத்திரா ! செம்புக்கண்ணாடியிலுள்ளகளிம்பான ததற்குரி யவுண்மையழுக்காம், அன்றியுஞ்சுபாவமாம், ஆதலால்:— (இதுபோல) கற்பளிங்கினிற்கருநிறஞ்சகசமாக் கறுத்ததன்றுரோபம், எ - து. படிகக்கல் லிற்றோற்றா நின்றகருநிறமானது சுபாவமாக்கறுத்ததுமன்று, உண்மையும ன்று தோற்றன்மாத்திரப்பொருளாம்:— தர்ப்பணத்தினிலழுக்கறவேண்டி னுற் சாதனத்தொழில்வேண்டும், எ - து. செம்புக்கண்ணாடியிலுள்ளகளிம்ப கலவேண்டில் கீரமுதலியகருவிகளாற்றுடைக்குஞ் சாதனத்தொழிலவசிய ம்வேண்டும்:—கற்பளிங்கிலாரோபமேகறுப்பெனக் கண்டிடமனம்போதும், எ-து. படிகக்கல்லிற்றோற்றாநின்றகருநிறமானது தோற்றன்மாத்திரப்பொரு ளௌனவறிதற்குச்சாதனத்தொழில்வேண்டுவதின்று மனமேபோதும், எ-து.

செம்புக்கண்ணாடியழுக்கு வாஸ்தவம் சுபாவம். படிகக்கல்கருநிறவழு க்குண்மையுமன்று சுபாவமுமன்று. அதனைப்போக்கச்சாதனத்தொழில் வேண்டும், இதனைப்போக்கவறிதலேபோதும். அசுத்தமுமஞ்ஞானமுமொ ன்றென்கை யவன்கொள்கை. வேறென்கையிவர்கொள்கை. அவனிவ்விர ண்டுநசித்தற்குக் கருமமேபோதுமென்கை. இவரசுத்தநசித்தற்குக் கரும மும், அஞ்ஞானநசித்தற்கு விசாரமும்போதுமென்கை. புண்ணியகன்மங் களிலும் பாவகன்மங்களிலுமெய்ப்பெழலசுத்தநீக்கம். பொருளல்லவற்றை ப் பொருளெனக்கோடலிலெய்ப்பெழ லஞ்ஞானநீக்கம். களிம்பைப்போக் கப்போக்க, மீண்டுமீண்டெய்தல் செம்புக்கண்ணாடிக்கியல்பு. நீலநிறத்தை யிதுதோற்றன் மாத்திரமெனக் காணக்காண விடாதுமெய்போலத்தோற்று தல் படிகக்கல்லுக்கியல்பு. அதனைப்போக்கற்குக்கருமம்பலதாமும், இத னைப்போக்கற்குவிசாரமொரேதரமும் வேண்டுமென்க. இதுபோல,மனதைச் சுத்தமாக்கச்சுத்தமாக்க மீண்டுமீண்டசுத்தமாதல்மனதுக்கியல்பு. அறிவை விளக்கி யதிற்சகசீவபாத்தை யிவைதோற்றன்மாத்திரமெனக் காணக்காண விடாதுமெய்போலத்தோற்றுதலறிவுக்கியல்பு. அசுத்தம்போக்கற்குப் புண் ணியகருமம்பலகாலமும், பிராந்திபோக்கற்குத்தீர்ந்தவிசார மொரேதரமி டுமும்வேண்டுமென்க. அனுபவத்தாலன்றியிவைவிளங்காவாம். (௯௯)

௭௦ - கவி. அ - கை.

[உபமேயபூர்வமாகவதனை யிக்கவியிலாசிரியர்கூறுகின்றார்.]

இங்கு மப்படி சச்சிதா னந்தத்தி லிடர்சடம் பொய்மூன் றுந், தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன் றே, பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக் குந் துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப் பா மே.

(இ-ள்.) இங்குமப்படி சச்சிதானந்தத்தி லிடர்சடம்பொய்மூன்றும், எ-து. உபமேயத்திலு முபமானத்திற்சொலியபடி சத்து, சித்து, ஆனந்த மென்னுமூன்றிலுள்ள பொய்யாகியவசத்தும், சடமாகியமூடமும், இன்பம் போற்காணுந் துன்பமுமாகியவிம்மூன்றும்:— தங்குமாயையின்கற்பிதமன் றியே சகசவாஸ்தவமன்றே, எ-து. காற்றிற்சலனம்போற் பிரமத்திற்றங்கிய மாயையினாலாய கற்பனைவடிவமேயல்லாமல் சுபாவமுமன்று, எதார்த்தமு மன்று:— பங்கமாகுமஞ்ஞானத்தைக் கருமங்கள்பகைசெயாதுறவாக்கும், எ-து. அசுத்தமாகின்றுள்ளவஞ்ஞானத்தைப் புண்ணியகருமங்கள்கெடுக்கா மலதனைவிர்த்தியாக்கும்:—துங்கஞானமேகருமவஞ்ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே, எ-து. எல்லாநிலையினுமேலாயபரஞானமே, கருமமேதனக்கு வடிவாகின்றுள்ள வறியாமையைத்தகிக்கத்தக்கவக்கினியாம், எ-று.

சச்சிதானந்தத்தி லநிர்தசடதுக்கமெனவே, சத்தேயசத்தும், சித்தே சடமும், ஆனந்தமேதுக்கமுமென்றாயிற்று. சச்சிதாநந்தம் பிரமத்தின்சுயம் பெனவும் சகசமெனவும், வாஸ்தவமெனவுந்தோன்ற, இடர்சடம்பொய் மூன்றுந் தங்குமாயையின்கற்பிதமன்றியே சகசவாஸ்தவமன்றென்றார். சச் சிதானந்தத்திலிடர் சடம்பொய்யெனல், எதிர்நிரனிறைப்பொருள் கோள். உதாரணம்; களிறுங்கந்தும்போல, நளிகடற்கூம்புங்கலனுந்தோன்றும், தோன்றன் மறந்தோர்துறைகெழுநாட்டே. இதுபெயர்ச்சொற்களும் பெயர் ப்பயனிலைகளுமாகின்றவெதிர்நிரனிறை. அறிவு முதற்காரணங்கருதாதுசத் தெனவறியச் சகஞ் சத்தாக்கானும். சுயம்புயாதெனவறியப்புகச் சகமசத் தாக்கானும். காரணங்கருதாமைமூடம், கருதுதல்தெளிவு. இம்மூடத்தா லன்றோ சகஞ்சுகமெனக்காண்டல். மூடங்காரணமாகவெழல்சுகமாகுமா, ஆகாதே, துக்கமே சுகமாகக்காண்டலெனவுணர்க, சுகமெனின், மூடமன் றிக்காட்டவேண்டும். இன்றேல், துக்கமாம். சகத்தைச்சத்தாவறிதலுஞ் சுகமாச்சுகித்தலு மறிவையன்றியின்மையானும்; பிராதிபாஸிகசத்தைய ன்றிச்சகத்தும், அறிவையன்றிப்பிராதிபாஸிகசத்தும், இன்றாதலாலறிவேச த்து, செகமசத்து. மூடமன்றிச் செகத்துண்மையும், அறிவையன்றிமூடமு மின்றாதலால், அறிவேசித்து, செகம்மூடம். செகந்தனதுபிரிதிபலனமெனக் காணுமையா லெழுஞ்சுகமாதலி னிச்சுகமறியாமையின்பலனு. அறிவேய

றியாமையாதலின், அறிவே சுகமீ, செகம் துக்கம். எனப்படுவதினுனும் அறியாமையன்றிச் சுகமாதிமூன்றுமின்மையாலும்; இம்மூன்றும்மாயாகாரியமெனப்படலா லறியாமையே மாயையெனப்படுமாதலினுனும்; அறிவே பிரமமெனவும், அறியாமையேமீாயையெனவும், அறிவுக்குச்சச்சிதானந்தமெனவும், அறியாமைக்கநுர்தசடதுக்கமெ னவும், அறிவையன்றி யறியாமையின்மையின் சச்சிதானந்தமே யநுர்தசடதுக்கமெனவுங்கொள்ளக்கிடந்ததெனவறிக. அறிவாஇனை யறியாதது புண்ணியகன்மம்,ஆதலின் பங்கமாகுமஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக்குமெனவும், சச்சிதானந்தவிலக்கணமினையவெனக்கண் டொருமையாக்கியதெளிவே தெளியாமையையுகெடுக்குமாதலின், துங்கஞானமேகருமவஞ்ஞானத்தைச் சுடுகின்றநெருப்பாமேயெனவுங் கூறியதை மறுப்பதற் கெக்காலத்துமெண்ணவலியுளது.இன்றுதலா லிவ்வுவமேயம்பொருந்துமெனவறிக. விசாரஞானத்தாலெய்துவது விருத்திஞானமாதலி னிதனைநெருப்பென்றதெனக்கொள்க.

(க-து.) ஞானத்துக்கஞ்ஞானமபேதமாதலின் விசாரஞானத்தாலன்றிக் கருமத்தாலஞ்ஞானநசியாதென்பது. இதுபெறுமெனமாட்டலால் மாட்டெறிந்தொழுகலென்னுமுத்தி. அஞ்ஞானத்தைக்கெடுத்தற்பாலது கருமமன்று விசாரஞானமென்றலின், இன்னதல்லதிதுவென மொழிதலென்னுமுத்தி. சச்சிதானந்தமறியார், சகசீவபரமனுநித்தியமென்பர். அறிந்தார்க்கயலேது. ஒன்றுமற்றென்றுத்தோன்றலேயேழாம்வேற்றுமையாக்கல், வேற்றுமைமயக்கம். இங்ஙனமருவிவழங்கலால் மரூஉ. (எ0)

எக - கவி. அ - கை.

[அறிவறியாமை நினைப்புமறப்பெனக்காட்டத் தன்மறதியைக்
கெடுப்பதுதன்னினைவிலுலன்றி யயலாலன்றென
விக்கவியிற்கூறுகின்றார்.]

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடனு றழுதா லு
நினைத்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த நிருமல வான்மா வு
மநர்த்த மானதன் மறதியைக் கெடுக்குந்தன் னறிவினுற் கானு மற்
கனத்த கன்மங்க ளூறுகஞ் செய்யினுங் காணுமோ காணு தே.

(இ - ள்.) மனைக்குள்வைத்தபண்டங்களை மறந்தவன்வருடனுறழுதாலு நினைத்துணர்ந்தபின்கிட்டும், எ-து. ஒருவனோர்வீட்டினுள்வைத்த பொருள்களைமறந்துவிட்டான்; அங்ஙனமறந்தவன் காணேமேயென்று வருடனுறழுதாலுங்காணுமா, இவனுக்கேநினைப்புவந் தின்னவிடத்தில்வைத்தோமல்லவாவென்றுணர்ந்தபின்னரன்றேவவைகிட்டும், அல்லாமற்கிட்டுமா கிட்டாவே :—அப்படியிந்த நிருமலவான்மாவு மநர்த்தமானதன்மறதியைக்கெடுக்குந் தன்னறிவினுற்கானுமல், எ-து. அங்ஙனமிந்தநின்மலரூபமானவான்மபுருட

னும் அசேத்தரூபமான தன்மறதியைக்கெடுப்பது தன்னினைவேயாதலால், அதனையுமறியாது அதனால் தன்னையுங்காணாமல் :—கனத்தகன்மங்களாறுகஞ் செய்யினுங்காணுமோகாணாதே, எ-து. மேலானயாகாதிகிருத்தியங்களாறு கஞ்செய்தாலுந் தன்னுண்மைவடிவம்விளங்குமா விளங்காதே, எ-று.

செகசீவபரஞ்சுயம்பேனல், விகாரத்தை, அல்லவெனில், சோதனையி லொவ்வொன்றும் விகாரமெனமுடியாது காரணகாரியரகிதமாக் காட்ட லாம். கூடாதெனின், இவை மூன்றுமர்த்தரூபமென்னலாமா, அநர்த்தரூபமெ ன்னலாமா? அர்த்தரூபமெனின், ஒவ்வொன்றிற்குஞ் சுயம்பிஃதெனக்காட்ட வேண்டும். கூடாதேல், அநர்த்தரூபமென்பதற்குச் சற்றுமையமின்று. ஆத லின், சகமாதிமூன்று மநர்த்தரூபமெனத்தகும். இவை தன்னைமறந்தவிடத் தில் தோற்றுபவாதலினானும், மறதிநீக்கத்தின்றாதலினானும், மறதியேயிவை மூன்றுமென்றால் வழுவென்னை, இன்றாதலா லநர்த்தமானமறதியெனவும், நினைப்புமறப்புரகிதமானவான்மா தன்னைமறந்ததுபோலவுந் தன்னைநினைத் துக்கொண்டதுபோலவுந்தோற்றலின், தன்மறதியெனவும், தன்னறிவென வும், அவஸ்தாவயப்படாம லவற்றைச் சாட்சியாநின்றுணர்த்தல், ஆன்மா. அவஸ்தைகடோறு மந்தந்தவுபாதிவயப்பட் டின்பதுன்பநுகர்தலாகக்காண் டல், சீவன். ஆதலினின்மலவான்மாவெனவும், தன்னைத்தானெட்டுங்காலத்து த்தான்சேய்மைத்தாயினு மயலையுணர்த்தத் தானணித்தாநிற்றலி னகத்துச்சு ட்டாலிந்தவான்மாவெனவும், தன்னைமறந்தது தன்னாலன்றியயலாலன்று, இங்ஙனமிருக்கத் தன்னையறிவதுந் தன்னாலன்றியயலாலாகுமா ? ஆகுமெ னின், தன்னைமறந்ததுமயலாலென்பம். திரோபவசத்தியால்மறப்பும், அனுக் கிரகசத்தியால்விடுதியுமெனின், இவ்விருவகைசத்தியுமார்பாலது ? மயேஸ் வரன், சதாசிவன்பாலதெனின், ஆன்மாவுக்கென்னைசுதந்தரம். ஈனெனி னின், இங்ஙனமாட்டுவிப்பானேன்? வினைக்கீடாயெனின், திரிபதார்த்தமு மநாதியாயிருக்க வுயிர்க்குவினைவருவானேன்? சுபாவமெனின், இடையிலி வர்கள்முயற்சியானீங்குமா, கூடுமோ? இதுவுஞ்சுபாவமெனின், நாஸ்திகனிலு மிஃதென்சிறப்பு, இன்றாதலாலிது மறுக்கற்பாற்று. தன்னைத்தான் விசாரித் தறியின்றித் தன்னைத்தான்காணக்கூடாதென்பார், ஆன்மாவுந் தன்மறதி யைக்கெடுத்துத் தன்னறிவினாற்காணாமல் கனத்தகன்மங்களாறுகஞ்செய் யினுங் காணுமோ காணாதேயெனவுங்கூறினார். ஆன்மாகன்மம்புரிதற்பா லது பலனும்புரிதற்பாலதோவெனின், இம்மையிலொருவன்தீங்கேபுரியில் துன்பத்தையும், அவனேயதைவிடிலின்பத்தையு மனுபவிப்பதுபிரத்தியட் சமன்றே, இவ்வினைகட்குப்பயன்றர மற்றொருவன்வேண்டுமோ, அவ்வவ் வினையே யவ்வவற்றின் பலனாகின்றதியல்பாயிருக்க, இங்ஙனங்கேட்பது வினாவன்று, வினாவழு. இம்மையிலேனு மறுமையிலேனு மவனவன்வினையே யதற்குரியபயனைத்தந்தேவிடும். இதுபற்றித் "தான்றாமுன்செய்தவினை தாமேயனுபவிப்பரொன்றார்சான்றோர்" தீவினைவிடிலதன்பயனும், தீவினை

விடலதன்பயனும், இவ்விரண்டுமொருங்கேவிடலதன்பயனுந்தானேயகலு ம், இதற்கொருவனெற்றிற்கு. இங்கேயொருவன்வேண்டியதாகக்கூறியது, அவனே்வேண்டிப் பூசித்தற்கென்க. எனெனில், பயபத்திவரவேண்டுவதை பற்றியாதலினுனும், இன்பமூர்த்தன்பமுமவன்தருவதாக ஐதீகமிருத்தலினு னும், அவனன்றியோராணுவுமசையாதெனும்பழைய வாப்தமொழியிருப்பதி னுனும், அவன்தரிலார்தடுப்பவனொன்றிருத்தலின்றுமென்க. அங்ஙனமெவர் வேண்டினு மவரவர்வினைக்களவாகவன்றித் தன்னிட்டப்படிதரான், தரின், பாரபட்சன். இதுநிற்க. தன்னைத்தவிரவெங்கேயன்னிய மின்றே வதுபர ஞானம். ஈசனேனுமுளதேலஃதபரஞானம். பரஞானத்திலேலற்போனிடுவோ னெங்கே. தன்னைமறந்ததுந்தன்றேலே, தன்னையறிவதுந்தன்றேலே,யாதலின் தன்மறதியைத்தவிரகவென்பதாயிற்று.

(க - து.) ப்ரக்ஞைக்கயலாகத்தோற்றுஞ் சகமாதிமூன்றுமனார்த்தரூப மாகலா லவைதன்மறதியெனத்துணிகவென்பது. தன்மறதியேதனக்கயலெ ன்லதிண்ணம். தனக்கயல்தோன்றுமளவுந்தான்விளங்காது; தன்னையுன்னி டில் தான்விளங்குமென்க. (எக)

எஉ - கவி. அ - கை.

[சுகந்தருவதுஞானமெனவும், கன்மமெனவும் வேதங்கூறுகின்ற
தே யிதில்யாதுதுணிவு, கூறுகவெதற்றிற்கென மாணுக்
கன்வினவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

நன்மை யாங்குரு வேசுகந் தருவது ஞானமே யெனும்வேதந்
தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண்மாந்தர்
சென்ம மாகுவ சாதியா சாரமே செய்தவஞ் சுகமென்று
கன்ம காண்டத்தில் விதிப்பதென் விதித்துள காரண முளாயீரோ.

(இ - ள்.) நன்மையாங்குருவே சுகந்தருவது ஞானமேயெனும்வேதம், எ-து. நன்மையேவடிவாயுள்ளசற்குருவே! ஞானகாண்டத்தில், சுகத்தைத் தருவதுஞானமேயென்று விதித்தவேதமானது:—தன்மபாவமிச்சிரங்களாற் றேவர்கடருவிலங்குகண் மாந்தர்சென்மமாகுவ, எ - து. புண்ணியகன்மம், பாவகன்மம், மிசிரகன்மமெனுமூன்றும். இம்மூன்றுகன்மங்களில்; புண்ணி யகன்மத்தால்மேலாயதேவசென்மமும், பாவகன்மத்தால் கீழாயவிருட்சம் விலங்குபறவைமுதலியசென்மமும், மிசிரகன்மத்தால்நடுவாயமனிதசென் மமுமாம்:— (இவற்றிற்கேதுவாய) சாதியாசாரமேசெய்தவஞ்சுகமென்று கன்மகாண்டத்தில்விதிப்பதென் விதித்துளகாரணமுளாயீரோ, எ - து. வரு ணாசிரமத்துக்குரிய விதிவிலக்கிகளாதொழுகுமொழுக்கமே செய்கின்றதவ மாம். இங்ஙனமாயதவமே சுகத்தைத்தருமென்று கன்மகாண்டத்தில் விதி த்ததெதற்றிற்கு, அங்ஙனம்விதித்ததற்குக் காரணம்யாது தெரிகின்றிலனித னைத்தேவரீர்தெரித்தருளவேண்டும், எ - து,

(கு-ரை.) வேதமானது ஞானகாண்டத்தில் ஞானமேசுகந்தரற்பாலதெனக்கூறிக், கன்மகாண்டத்தில் வருணாசிரமவொழுக்கமேசுகந்தருமெனக்கூறுவானேனென்ன மாணாக்கன்வினவினனென்பது. ஞானமேயென்றதினால் செய்தவமேயென்றும். ஆசாரத்தையன்றித் தவம்வேறன்றெனற்கு, ஆசாரமே-செய்தவமென்றார். சாதிகூறியதுபற்றி யாசிரமம்வருவித்தாம். புண்ணியகன்மமுதலியமூன்றினாலாய பிறவிபேதங்களைப்பற்றி விரிவாகமுன்னரே கூறியிருக்கின்றன மதனாற்காண்லாம். (எஉ)

எங - கவி. அ - கை.

[கருமஞ்சுகந்தருமென்றதோரவசரம்பற்றியன்றி ஞானம்
போல்வதன்றெனக்குறிப்பிக்க விக்கவியி
லறம்புரியுமாறுகூறுகின்றது.]

தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர் காட் டிக், கனம ருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணையாந் தாய்போ ல, மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்ந்த வா சகஞ்சொல் லு, நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகளந்த நிர்ண யந் தெரியா ரே.

(இ - ள்.) தினமுமண்ணுகர்பிள்ளைநோய்க்கிரங்கியே தீம்பண்டமெதிர்காட்டி, எ - து. தினந்தோறுமண்ணைக்கரந்துண்கின்ற குழந்தைக்குநோய்மிக வதனைக்கண்டிரக்கமுற்று மதுரமானவஸ்துவையோர்கரத்தேந்தி யந்தக்குழந்தைக்கெதிரோகாட்டி:— கனமருந்துகளொளித்துவைத்தழைக்கின்ற கருணையாந்தாய்போல, எ-து. மேலானவவிஷதங்களை மற்றோர்கரத்தேந்தித் தன்பின்னேயொளித்துவைத்துக்கொண் டக்குழந்தையையழைக்கின்ற விரக்கமுள்ளதாயைப்போல:— மனையறங்கள்செய்மகங்கள்செய் நன்றென்று மலர்ந்தவாசகஞ்சொல்லும், எ - து. இல்லறங்களைச்செய், யாகாதி கிருத்தியங்களைச்செய், எனெனில், இனியவைடயும்பிறவிக்கிதுநன்றென்று வேதமானதினியமொழிகளாற்றெரிவிக்கும்:— நினைவுவேறுகாண் சுவர்க்ககாமிகளந்தநிர்ணயந்தெரியாரோ, எ-து. தெரிவிக்கினும், கருத்திஃதன்றுவேறுதான், அக்கருத்தைச் சுவர்க்காதிபோகத்துக்கே யங்காந்துதிரியுங்காமிகள் சற்றுமுணரார், எ-று.

மண்தின்னுதல்குழந்தைப்பருவம், ஏனையபருவமன்று, விடயநுகர்தலஞ்ஞானப்பருவம், ஏனையபருவமன்று, மண்தின்னலாலாயநோய் காமாலைமுதலியன, விடயநுகர்தலாலாயநோய் பிறவிமுதலியன. தீம்பண்டமெதிர்காட்டல்போல் பதவிப்பேறுகளையெதிர்காட்டல். காமாலைதீர்க்கத்தகுமருந்துபோல்வது பிறவிதீர்க்கத்தகுமருந்து. தாயானவள் தீம்பண்டங்காட்டல் சொல் மருந்தொளித்துவைத்தல், கருத்து. அதுபோல, வேதமாதாவும், சுவர்க்காதிபயன்காட்டல் சொல், அனைத்தையுமொருங்கேவிடவேண்டுமெனல்கருத்து.

(௧ - து.) எல்லாவெண்ணங்களையு மொருங்கேமறந்துவிடலே, பிறவி நோய்க்குத்தக்கமருந்து. அவளொளித்துவைத்ததந்தமருந்து, இவளொளித்து வைத்ததிந்தமருந்து, அந்தமருந்தைக்காட்டினால்குழந்தைவராது, இந்தமருந் தைக்காட்டினால் மக்களுயிர்வராது.

ஆதலாலொளித்துவைத்தெனவும், இவளழைத்தல்போல் வேதமாதா வழைத்தலே யினிவருங்கவிகளாலுங்காணலாம். அவளுக்குக்கருணைதன்குழந் தைமேல், இவளுக்குக்கருணைமக்களுயிர்மேல். குழந்தைக்குத்தாயவள். மக்க ளுயிர்க்குத்தாயிவள். அவள்சொல்லையுங்கருத்தையுங் குழந்தையறியாவாறு போல, இவள்சொல்லையுங் கருத்தையு மக்களுயிரறியாது. ஆதலால், நினைவு வேறுகாண்சுவர்க்ககாமிக ளந்தநிர்ணயந்தெரியாரோவெனவுங்கூறினார்.

(௧ - து.) வேதம்; கருமமேசுகந்தருவதெனக் கூறினதாகக்கொள்ளின், சொல்லுங்கருத்துமொத்தன்றோ கூறவேண்டும், அங்ஙனங்காணோமேயென் பது. இதுபூர்வபட்சமாகத்தகுவதாதலின் சித்தாந்தமன்று. அந்தநிர்ணயந் தெரியாரோவென்பதினால், கருமமேசுகமெனப்புரிவரென்பதாயிற்று. தேக போகத்துக்கியைந்தகருமமேமுக்கியமன்றி விசாரஞானமங்ஙனமன்றென மறுத்தல்தானேகெடவுபமானங்கூறியதென்க. (௭௩)

எச - கவி. அ - கை.

[போகநுகர்தற்கன்றோ மனையறங்கள்செய் மகங்கள்செய் யென்றது, இஃதுயிர்கட்கியல்பாயிற்றே யிதனைவிதிப்பானேனெ ன்ற சங்கைக்குத்தரமிக்கவியில் வேதம் மூடமன்றெனக்கூறுகி ன்றார்.]

போக மாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகா
ணாக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெரியாதோ
காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ
வேக வாயுவே யசையென வொருவரும் விதித்திடல் வேண்டாவே.

(இ - ள்.) போகமாருயிர்கண்டதையுண்பதும் புணர்வதுமியல்பேகா ண் ஆகமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோ, எ - து. உயிர்கள்தமக்குப்போ கமாகக் கண்டதையெல்லாமுண்பதும், போகிப்பதுமியல்பாயிருக்க, இந்த ச்சுபாவத்தை வேதாகமங்களும்விலக்கா திதனைவிதிக்குமா, இஃதென்னை கொலோவெனின்:—அத்தனைதெரியாதோ காகமேகறுத்திடுநெருப்பேசுடு கசந்திடு வேம்பேநீவேகவாயுவேயசையென வொருவரும்விதித்திடல்வேண் டாவே, எ - து. வேதாகமங்களுக் கவ்வளவுயூகித்துணர்த்தல்தெரியாதா, அத்தனைமூடமா, காகமேநீகறுத்திடுகவெனவும், நெருப்பே நீ சுடுகவெனவும், வேம்பேநீகசந்திடுகவெனவும், வேகமாயுள்ளகாற்றேநீயசைகவெனவுமொருவ ர்கட்டளையிடல்வேண்டுமோவொருவரும்வேண்டுவதின்றே யதுசுபாவமாயிற் றே, எ - று.

உயிர்களிட்டத்தின்படி கண்டுசெல்லுந்தோறு மப்போதப்போதவ்வவ ற்றுளேரிடு மிடுக்கண்களைக்காட்டல்வேண்டும், அங்ஙனங்காட்டாவிடில் தோடந்தோன்றாது, தோன்றாவிடில், இடுக்கணியல்பென வப்போகங்களிலேயே யுழன்றழியும். அங்ஙனமுழன்றழியக்காணல்நன்று, ஆதலின் பையவவ்வுயிரினிட்டப்படிசென்று, ஆங்காங்குள்ளகுற்றங்களைக்காட்டி [illegible]ட்கவேண்டும். இங்ஙனமாயதந்திரத்தைவிட்டு, நீதிரும்பென்றால்திரும்புமா, அதுபலவத்காரமன்றோ, அதுமுற்றுநிற்குமா, நில்லாதே, இதுவிவேகமா, அல்லவே. இதுபற்றியன்றோவேதமும், மனையறங்கள்செய்மகங்கள்செய்நன்றென்று மலர்ந்தவாசகஞ்சொல்லும். இதனையறியாதிங்ஙனம்விளுவல்முறையன்று. முறைவழுவென்பார், அத்தனைதெரியாதோவென்றார். காகமாதிகள்சுபாவத்தை யொருவரும்விதித்திடல்வேண்டாவேயென்றது; சுபாவத்தைவேதம்விதிக்குமாவெனக்காட்ட. அத்தனைதெரியாதோவென்றது, இதனைமறுக்க. விதித்தது; உயிர்கள்வழிச்சென்றவைகளைத் தம்வழிமீட்க. இவ்வுண்மையறியாதார் விடயமோகிகள். இவர்கள்தான்வேதத்தின்கருத்தறியாது வேதத்தின் சொல்வழிச்சென்றறம்புரிவோர். வேதமானது சுபாவத்தைவிலக்குவான் வேண்டியே விதித்ததென்க.

(க - து.) வேதத்தின்கருத்தறியாதுமறுத்தல் பிழையென்பது. (எச)

எரு - கவி. அ - கை.

[பட்டிமாடுபோற்கட்டுக்கடங்காரைக் கட்டுக்கடங்கக் கன்மம்
புரியவிதித்ததேயன்றி வேறுக்கன்றெனவிக்
கவியிற்கூறுகின்றார்.]

கள்ளு மூனுநீ விரும்பினுன் மகங்கள்செய் காமத்தின் மன தாளுற், கொள்ளும் பெண்டொடு கலவிசெய் யெனிலிவன்குறை யெலாந் தொடானென் றே, தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சக லமுந் தவிர்வதே கருத்தா கும், விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ நியமமாம் விதியன் றே.

(இ - ள்.) கள்ளுமூனு நீவிரும்பினுல்மகங்கள்செய் காமத்தின்மனதாளுற்கொள்ளும்பெண்டொடுகலவிசெய்யெனில், எ-து. கள்ளருந்தவும், மாமிசந்தின்னவும் நீயாசைகொள்ளில், யாகாதிகிருத்தியங்களைச்செய்திடுக, புணர்ந்தனுபவித்தலாகியகாமத்தில் மனதெழுமாளுல் நீமணம்புரிந்துகொண்டமனைவியோடுகூடிப்புணர்ந்திடுகவென்றுசொன்னுல்:—இவன்குறையெலாந்தொடானென்றே தள்ளும்வேதத்தின்சம்மதஞ் சகலமுந்தவிர்வதேகருத்தாகும், எ-து. இவன்மற்றவைகளையெல்லாந்தொடவேமாட்டானென் றெண்ணங்கொண்டதன்றோ, இதுபற்றித்தொடானென்றேயவற்றைத்தள்ளிவிடும். ஆயினிதற்குவேதத்தின்சம்மதமெனில், உயிர்கள்சமஸ்தபற்றுக்களையு மொருங்குவிட்டுவிடற்கேதனைதெண்ணமாம்:—விள்ளுமிவ்விதியென்

னெனில் பூருவவிதியமமாம்விதியன்றே, எ-து. இங்ஙனஞ்செய்யெனக்கூறிய விவ்விதியாதுக்கெனக்கேட்டையாயின், பூர்வபட்சமாகத்தகுந்ததேயன்றி நிச்சயமானவிதியன்று, எ - று.

நிச்சயமானவிதி, சித்தாந்தம். எனவே, பூர்வபட்சம், சித்தாந்தபட்சமெனவிரண்டாம். பூர்வபட்சம், கலைதற்பாலது. சித்தாந்தபட்சம், நிலைத்தற்பாலது. இவ்விதிநிலைத்தற்பாலதன்றென்பார், பூருவமென்றார்.விரும்பினால்மகங்கள்செய், காமத்தின்மனதானால்கலவிசெய்யெனவே. விரும்பாமற்போனால்செய்யவேண்டாம், மனதில்லாமற்போனால்செய்யவேண்டாமென்றாயிற்று. ஆகவே, இதுகன்மிகளுக்குவிதித்ததென்பதுபெறற்கும். பெறவே, பூர்வபட்சமெனக்கண்டாம்.

(௧ - து.) விதிக்கடங்காதார்க்கு விதித்ததந்திரமிஃதென்பது. இங்ஙனமாயதந்திரங்களைக் கன்மகாண்டத்திலறிக. குறையெலாந்தொடுதலாவது; கடைகடோறுஞ்சென்று போதைமிகுதியாலவமானப்படலும், நல்லோராலிகழப்படலும், பிறர்மனைநயத்தலும், அவமானமெய்தலும், நடுக்கமகலாமையுமாம். சகலமுந்தவிர்வதேகருத்தாவதெற்றிற்கு, ஆன்மாக்களெப்பற்றுமகன்றிருக்கிற் பிறவியகன்றிருக்குமென்பதுபற்றியென்க. ஆன்மாவறிவாதலிலறிவாமாத்திரிற்க ஞானகாண்டத்திற்பிரதிவாதிக்கின்றதே. இதனாற், கன்மகாண்டத்தில் பற்றுக்களகறற்குத்தந்திரமும், ஞானகாண்டத்திலறிவாவிளங்கற்குத் தந்திரமுங்கூறுமெனக்கண்டாம். இதுகாருணியத்தைவிளக்குகின்றது. (எ௩)

எ௪ - கவி. அ - கை.

[மெல்லமெல்லப்பற்றுக்களகறற்குத் தந்திரங்களைவேதங்
கூறுதலையறிந்து கருமம்புரிதலையொழிந்திடுக
வென விக்கவியிற்கூறுகின்றார்.]

மதுவி றைச்சிக ளுண்ணென்ற சுருதியின மணந்துபா ரெ
னல்பா ராய், மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்
பென்ற விதிபா ரா, யிதையும் விட்டொழி யதிகயிட் டிகவன்னி
க் கிழ்ச்சியற் றதும்பா ரா, யதைய றிந்துகன் மங்களா சைக
ளொழிந் தானந்த மடைவா யே.

(இ - ள்.) மதுவிறைச்சிகளுண்ணென்றசுருதியின் மணந்துபாரெனல்பாராய், எ-து. மதுமாமிசங்களைப்புசியென்றவேதமானது பின்னர்மோந்துபார்புசியாதேயென்பதைப்பார் :—மிதுனவிச்சையும் புத்திரோற்பத்தியால்விரும்பென்றவிதிபாராய், எ - து, புணர்ச்சியாசையும் புத்திரோற்பத்திவேண்டுமாதலா லதுபற்றிவிருப்பங்கொள்ளென்று கூறும்விதியினைப்பாராய்:—இதையும்விட்டொழியதிகயிட்டிகவன்னிக் கிழ்ச்சியற்றதும்பாராய், எ - து,

மதுவிறைச்சியோடு புணர்ச்சியையும் ஒருங்கேவிட்டொழிந்தசந்நியாசிக்கும், நயிஷ்டிகபிரமசாரிக்கும் யாதோர்பழிப்புமற்றதென்பதும்பாராய் :— அதையறிந்துகன்மங்களாசைக ளொழிந்தானந்தமடைவாயே, எ - து. இங்ஙனங்கூறுமவ்வேதத்தின் கருத்தையறிந்து புண்ணியகன்மங்களில்வைத்த, வாசைகளினின்றுநீங்கிப் பிரமானந்தத்தைஞானத்தினாலடைதி, எ-று.

முதலி னுண்க புணர்க வென்றவேதம் கடையில் முகர்க, புத்திரோற்பத்தியால் விரும்புகவென்றது; பற்றறுத்தற்கென்க. முதலில்கூறியதுயிர்வயப்படற்கும்,கடையில்கூறிய துயிர்கேவலமாதற்கு மெனவறிக. புத்திரோற்பத்தியால்மிதுனவிச்சையும் விரும்புகவென்றது; புத்திரன்குடும்பங்காக்கும்யோக்கியம்வரில் புணர்ச்சிவிருப்பம்விட்டுத் தவத்துக்குவனத்துக் கேகவேண்டுமென்றபொருள்படநின்றது. இகழ்ச்சியற்றதென்பதுவென்னு இகழ்ச்சியற்றதுமெனக்கூறலின், என்பதெனல்சொல்லெச்சம். கன்மங்களாசைகளொழிந் தானந்தமடைவாயேயென்பதினால், கன்மஞ்சுகந்தருமெனல் பூர்வபட்சமெனவும், ஞானஞ் சுகந்தருமெனல் சித்தாந்தமெனவுங்கொள்க·

(க-து.) இவ்விரண்டில் ஞானமேசுகமெனத்துணிந்தாமென்பது· இதுவொருதலைதுணிதலென்னுமதம்· இதுகாறுங்கருமமேசுகமெனக்கொண் டிங்கேமறுத்தலி னிதுபிறர்தம்மதமேற்கொண்டு களைதலென்னுமதம்· கருமமேசுகமென்பாரிக்கருத்தறியாதார்· அறியி னக்கணமேவிடுவர்· (எசு)

எஎ - கவி· அ - கை·

[சுக மிருவகையுள் கருமசுக மோரவசரம்ப ற்றிக் கூறியதாக வேற்றனன், இதுநிற்க. முன்னர், எ௦· கவியில்பங்கமாகுமஞ்ஞானத்தைப்பகைசெயா துறவாக்குமென்பதைப்பற்றி யையஞ்சிறிதுள ததனையகற்றல்வேண்டுமெனவினவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழிகூடும்
பலவு மானவஞ் ஞானமு ஞானமும் பகையென்ப துளதா ளுல்
னிலவி லேமறுப் போலவஞ் ஞானமு நிமலஞா னத்தோ டே
குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி.

(இ - ள்.) உலகமானவஞ்ஞானமுங் கருமமுமுறவென்றவழி கூடும், எ-து. சகத்துருவமா நின்றுள்ள வறியாமையும், யாகாதிகிருத்தியமு முறவாகுமென்று தேவரீர்கூறியவழியேற்றற்பாலதே:—பலவுமானவஞ்ஞானமு ஞானமும் பகையென்பதுளதானால், எ-து. சகத்துருவமாகவன்றியு மின்னும்பற்பல விநோதரூபமாகவுமிருந்துள்ள வறியாமையும், அறிவும் பகையென்பதுண்மையானால்:—நிலவிலேமறுப்போல வஞ்ஞானமு நிமலஞானத்தோடேகுலவிநின்றிந்தச் சிருட்டிகள்செய்யவுங் கூடுமோகுருமூர்த்தி,

எ-று. குருமூர்த்தியே! நிலவிற்களங்கமுறவாயிருப்பதுபோல, அறியாமை யும் நின்மலமானவறிவோடுகூடியுறவாகின்று, இந்தச்சிருஷ்டியாதிகளைச் செய்யுந்தான்கூடுமோ கூடாதே, எ-று.

உலகமானவஞ்ஞானம் பலவுமானவஞ்ஞானமென்பன ; அஞ்ஞானத் தைமுதற்காரணமாக வுலகமுமின்னும்பிறவும்பெறுமிற்றலின் காரியத்தைக் காரணமாக வுபசரிக்கப்பெறுகின்றன. நிற்கவே, அபேதகாரணகாரியமெ னப்பெற்றாம். பெறவே, அறியாமையே சகமாதிமூன்றுமென்றாயிற்று. இத்துணிபுபற்றியே காரியத்தைமுன்னருங் காரணத்தைப்பின்னருங்கூறிய தென்க. அறியாமையேசெகமாதிமூன்றெனலே ஞாயமாதியாலுணர்த்து தும். இங்ஙனமுணர்த்தவலியில்லார், யாதுகூறினுந்துவிதமாகமுடியும். முடியின், பிறவிநாசமின்றாம். பயனென்னை, இதுநிற்க. களங்கத்துக்கு நிலவிடமாதல்போல, அறியாமைக்கறிவிடமாயிற்று. ஆகவே, அறிவு பூரண மும், அறியாமையேகதேசமுமெனக்குறிக்கின்றது. நிமலமின்றாதலினஞ் ஞானமென்றார். நிமலஞானமென்றது ; பொருளைப்பொருளாகவுணருமவ சரத்தை. சக்கரவர்த்திக்குறவாகின் றவனிலத்தையாளக்கூடும், பகையா நின்றாளக்கூடுமோ? அதுபோல, ஞானத்துக்குறவாகின் றதின்கண்ணஞ்ஞா னஞ் சிருட்டியாதிகள்செய்யக்கூடும், பகையாகின்றுசெய்யக்கூடுமோவென் பான், அஞ்ஞானமுஞானமும்பகையென்பதுணதாலனல்நிலவிலேமறுப்போல வஞ்ஞானமு நிமலஞானத்தோடேகுலவிநின் றிந்தச்சிருஷ்டிகள்செய்யவுங் கூடுமோவென்றான்.

(க-து.) ஞானத்துக்குப்பகையாக வதினின்றஞ்ஞானஞ்சிருஷ்டியாதி கள் செய்வதெங்ஙனமென்பது. பலவுமென்றதனால், செகமோடேனைய விரண்டும்வருவித்தாம். உள்ளதென்பது உளதெனவிடைக்குறை. செய் யவுமென்பதிலும்மை யிழிவுசிறப்பு. கூடுமோவென்பதிலோகாரம், எதிர் மறை. பலவெனல், உயிரையும்பரத்தையும். என்னை, "ஒன்றல்லனபல தமிழ்நடைவடநூலிரண்டல்லனபலவென்றிசினோரே" என்பதினாற்காண்க. பலவுமென்ப திறந்தது தழீஇய வெச்சவும்மை. (௭௭)

௭௮ - கவி. ௮ - கை.

[பொதுப்பட ஞானமென்றாரேனு மதுசொரூபஞானம் விருத்தி ஞானமெனவிரண்டாம். அஞ்ஞானத்துக்குச் சொரூபஞானமுற் வும், விருத்திஞானம்பகையுமென் விக்கவியிற்கூறுகின்றார்.]

சொரூப ஞானமும் விருத்திஞா னமுமென்று சோதிஞா ன மதிரண் டாஞ், சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாத் தோ ன்றும்வே றிலேமைந் தா, சொரூப ஞானமஞ் ஞானசத் துருவன் று சுழுத்தியிற் கண்டா யே, சொரூப ஞானத்தின் மருவுமஞ் ஞா னத்தைச் சுடும்விருத் தியின்ஞா னம்.

(இ-ள்.) சொரூபஞானமும் விருத்திஞானமுமென்று சோதிஞானமதி ரண்டாம், எ-து. சோதிஞானமானது, சொரூபஞானமெனவும் விருத்திஞா

னமெனவுமிரண்டாகிற்கும்:— சொரூபஞானமே விருத்தியின்ஞானமாத் தோன்றும்வேறில்லைமைந்தா, எ-து. ஞானபுத்திரா! சொரூபஞானமேவிருத் திஞானமாத் தோன்றுவதேயன்றி யஃதோர்பொருளாகத் தனித்தெங்கனு மில்லை :— சொரூபஞானமஞ்ஞானசத்துருவன்று சுழுத்தியிற் கண்டாயே, எ-து. சொரூபஞானமானதஞ்ஞானசத்துருவேயன்று, இதனைத்தினசுழுத் தியிற்காண்கின்றனையே:—சொரூபஞானத்தின்மருவுமஞ்ஞானத்தைச் சுடும் விருத்தியின்ஞானம், எ-து. சொரூபஞானத்திலுறவாமருவிநின்றுள்ள வஞ் ஞானத்தை விருத்திஞானமானதெரித்துவிடும், எ-று.

∴ என்றெனலேயீரிடத்துமொட்டுக. சுழுத்தியிற்செகந்தோற்றவில்லையெ ன்றங்கேயுறிய விடாதெவ்வுயிர் கேவலத்தின்கண்ணு மறிவிருத்தலி னது சொரூபஞானமெனவும், தனித்துந் தன்னைத்தான்காணவொட்டாத தறி யாமையாதலி னதனையஞ்ஞானமெனவும், அறிவுமறியாமையுமபேதமாயா ங்குறவாகிற்றலின் சொரூபஞானமஞ்ஞானசத்துருவன்று சுழுத்தியிற்கண் டாயேயெனவும், சமாதியிலுதிக்குஞானம் விருத்திஞானமெனவும், ஞான வான்கள் சிந்தையாவிளங்குவது சோதிஞானமெனவும் கொள்க. சொரூப ஞானமஞ்ஞானசத்துருவென்றெனப்பாடமோதில் மறுபடியும். மறுபாட்டு முரணுதலுக்கென்செய்தும். வலிந்துரைகோடலிற் பிறர்பழிப்புக்கிடமாம், இதனைவிடுதெனன்றி. சுழுத்தியில் மூடவயமாகாது தானறிவாகவிருந் தம் மூடத்தை யெதிரிட்டறிதலைப்பற்றிச் சத்துருவென்றதெனின், சுழுத்தியி லஞ்ஞானக்கே டெய்தியதுண்டா? முத்திபெற்றாருண்டா, விசாரமெற்றிற் கெனவரும் இங்ஙனமாய வினாவுக்கெல்லாமென்செய்தும். உரைக்குப்பாட் டன்று, பாட்டுக்குரையாதலிற் பாட்டுசெல்வழிச்செல்லல்வேண்டும்.

(க-து.) விருத்திஞானமும், அஞ்ஞானமுமுறவன்றென்பது. எனவே, சொரூபஞானமுமஞ்ஞானமுஞ் சத்துருவன்றென்பதாயிற்று. விருத்திஞா னத்தோடன்றிச் சொரூபஞானத்தோடுறவாமளவுஞ் சிருட்டியாதி நடக்கு மெனக்குறிப்பித்ததாம். சோதிஞானத்தையன்றிச்சொரூபஞானமும் சொ ரூபஞானத்தையன்றிவிருத்திஞானமு மின்றெனக்கூறவந்தது, அஞ்ஞானஞ் சிருட்டியாதிகள்செய்தற் குத்தரங்கூறவேண்டியென்க. விருத்திஞான மெழி லஞ்ஞானமிருந்தாலன்றோ சேட்டையுண்டாம், இன்றாதலா விதுவே யஞ்ஞானநாசத்துக் கெல்லையென்க. அவனேயிவனென்றாற்போலச் சொ ரூபஞானமே விருத்தியின்ஞானமென்றிருத்தலின், ஏகாரந்தேற்றம். (எஅ)

எகூ - கவி, அ - கை.

[அஞ்ஞானஞ்சொரூபஞானத்தாலெரிபடாது விருத்திஞான
த்தாலெரிபடுவதை யுபமானபூர்வமாக விக்கவியிற்
கூறுகின்றார்.]

துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாதது சொரூபஞானந்தானே
விருத்தி ஞானமாச் சுட்டதெப் படியெனில் வெய்யிலா லுலகெங்கும்
பரித்த சூரியன் சூரிய காந்தத்திற் பற்றியக்கினியாகி
யெரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்குமென்றறிவாயே.

(இ-ள்.) துருத்திமாயையைச்சுழுத்தியிற்சுடாதது சொரூபஞானந்தானே விருத்திஞானமாச் சுட்டதெப்படியெனில், எ-து. துருத்திபோல்வதாவுள்ளமாயையாகிய வஞ்ஞானத்தைச் சுழுத்தியவஸ்தையி லெரிக்காதது சொரூபஞானந்தானே, அதுவிருத்திஞானமாகின் றெரித்ததெங்ஙனமோ வதனைத்தெரிவிக்கவேண்டுமெனில்:— வெய்யிலாலுலகெங்கும்பரித்த சூரியன் சூரியகாந்தத்திற்பற்றி யக்கினியாகியெரித்தவாறுபோல், எ-து. உஷ்ணகிரணத்தினா லுலகமுழுவதுஞ்சுமந்தசூரியனாவன் சூரியகாந்தக்கல்லிற்பற்றி யக்கினிவடிவமாகின் றினைத்தையுமெரித்துவிட்ட தன்மையைப்போல,—சமாதியில்விருத்தியா லெரிக்குமென்றறிவாயே, எ-து, நிட்டையின்கண் விருத்திஞானக்கினியாயெழுந் ததனாலஞ்ஞானத்தையெரித்துவிடுமென்றறிதி, எ-று.

துருத்திபோல்வது, உச்வாசநிச்வாசம். அதனையுடையதுடல், அவ்வுடனெனலறியாமை, அவ்வறியாமையேமாயை, இந்தமாயையேயஞ்ஞானம், ஆதலின்துருத்திமாயையென்றார். துருத்தியென்பதுதுந்துருத்தி. இது போன்றதுமாயையெனப்பொருள்படும், படுதலாலுவமைத்தொகை, பண்புத்தொகையன்று. இது; காரறுத்தானென்றாற்போலும். தனதுசக்கினையினா லுலகைச்சுமக்கின்றவ னரசனென்றாற்போல, வெய்யிலாலுலகெங்கும் பரித்தசூரியனென்றிருத்தல்முறை. வெய்யிலாலென்பது பரித்தவென்னும் வினைகொண்டுமுடிய, எரித்தவென்னும்வினைகொண்டு முடித்தற்கிடமின்று. எரித்தலுக்காக்கின், பரித்தலுக்கேதுவெங்கே, இதுநிற்க. சூரியன் தானே பஞ்சையெரிக்காமல் சூரியகாந்தத்திற்பட்டெழுந்த தனதம்சாக்கினியாலெரிப்பன். அதுபோல, சொரூபஞானமானது தானேயஞ்ஞானத்தையெரிக்காமல் சமாதியில்தனிப்பட்டவிடத்துதித்த தனதம்ச விருத்திஞானத்தாலெரிக்குமெனமுடிக்க: இதனாலஞ்ஞானத்திற்குறவுசொரூபஞானமும், பகை விருத்திஞானமுமேயென வற்புறுத்தியதாகப்பெற்றாம்.

(க-து.) விருத்திஞானமே யஞ்ஞானநாசமென்பது. சொரூபஞானம் சூரியன். பரிபாகவறிவு, சூரியகாந்தம். விருத்திஞானம், அக்கினி. மாயாகாரியத்தைமாயையென்றது, காரணவாகுபெயர். வெய்யிலாலுலகெங்கும் பரித்தசூரியனென் றடைகொடுத்தது, வெய்யிலா லெரிக்காமலென்னுநயந் தோன்றற்கென்க.

(௭௧)

அ0 - கவி. அ - கை.

[விருத்திஞானமு மனத்தொழிலாலாயது, இதுவுங் கருமமன்றே, இஃதஞ்ஞானத்தைக்கெடுக்குமன்றே? இங்ஙனமிருக்க, கருமம், அஞ்ஞானத்தைக்கெடுக்காதென்ற தென்னையெனவினவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல்லாங்
கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரணகா ரியமன்றே
வுரிய கன்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென் றேதிறு லாகா தோ
பெரிய ஞானமென் றதற்கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரோ.

(இ-ள்.) அருளுமையனேதிரிவிதகரணத்தா லாகியதொழிலெல்லாங் கருமமல்லவோ, எ-து. சகலார்த்தத்தையு முணர்த்தியருளியகர்த்தனே! மனோவாக்குக்காயத்தாலாகிய கிரியையனைத்துங்கருமமல்லவா: — விருத்திஞானமுமந்தக்கரணகாரியமன்றே வுரியகன்மமஞ்ஞானத்தைக் கெடுக்குமென்றேதிறுலாகாதோ, எ-து. விருத்திஞானமென்பதும் மனதின்காரியமல்லவா, இங்ஙனங்காரியமாக்கற்குரிய விருத்திஞானமென்னுங்கன்ம மஞ்ஞானத்தைக்கெடுத்துவிடுமென்று சொன்னுலாகாதோ:— பெரியஞானமென்றதற்கொருபெயரிட்ட பெருமையையுரையீரோ, எ-து. மேலானஞானமென்றதற்கொருபெரிய பெயரிட்டமகிமையைத் தேவரீர் தெரிவித்தருள வேண்டும், எ-று.

சமாதியாயினுந் திரிவிதகரணமொத்துச்செய்தலன்றே, செய்தல்தொழிலன்றே, இந்தத்தொழிலாலாயது விருத்திஞானமன்றே, இந்தவிருத்திஞானமும், அந்தக்கரணத்தாலாகியபயனன்றே, இந்தப்பயன், அந்தக்கரணகாரியமன்றே, இதனுல் விருத்திஞானம் கருமமாயிற்று. இதைக்கருமமாக்கி, இந்தக்கருமத்தாற்கெடு மஞ்ஞானமென்றாலென்னவழு, இங்ஙனமிருக்க, இதற்குப்பெரியஞானமெனப் பெயரிடுவதென்னை.

(க - து) விருத்திஞானமாகியகன்ம மஞ்ஞானத்தைக்கெடுக்குமென்பது. இன்னுங்கன்மமே முக்கியமென்றானென்க. (அ0)

அக - கவி. அ - கை.

[விருத்திஞானமுங் கன்மமு மந்தக்கரணகாரியமெனல்மெய்யே
இதுவேசித்தாந்தமாயி னிருவகைதந்திரமெற்றிற்கென
விடைதரலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கிலுமைந் தா
வொருத்திமக்களே தங்களிற்பகைக்கின்ற துலகெங்குங் கண்டோமே
கருத்த னுகிய புருடதந் திரங்களாங் கருமங்க ளவைபோ ல
வருத்த ஞானமோ புருடதந் திரமன்று வஸ்துதந் திரமா மே.

(இ - ள்.) விருத்திஞானமந்தக்கரணத்தொடு விருத்தியா கிலுமைந்தா, எ-து. ஞானபுத்திரா! விருத்திஞானமான தந்தக்கரணத்தோடுகூடிச் சம்பந்தித்த் புடைபெயர்ச்சியாயினும்: — ஒருத்திமக்களே தங்களிற்பகைக்கின்றதுவகெங்குங்கண்டோமே, எ-து. ஒருஸ்திரியின்பிள்ளைகளே தங்களுக்குள்ளேயொருவரோடொருவர் பகைத்தடித்துக்கொண்டிறப்பதை யுலகமுழுதுங்கண்டிருக்கிறோமே,—கருத்தனாகியபுருடதந்திரங்களாங் கருமங்களவை போல, எ-து. கருமங்கள், அகம்பாவமுடையோனாகியபுருடனது தந்திரங்களெனப்படும். அவைபோல:—வருத்தஞானமோபுருடதந்திரமன்று வஸ்து தந்திரமாமே, எ-து. அகமுகநாட்டத்ததிகவருத்தத்தாலெய்திய விருத்திஞானமோவெனில், புருடதந்திரமன்றுவஸ்துதந்திரமெனப்படும். எ-று.

ஒருத்தி, காரணம். அவள்பிள்ளைகள், காரியம். அவர்களொருவரோடொருவ ரடித்துக்கொள்ளுதல், புடைபெயர்ச்சி. இறத்தல், அப்புடைபெயர்ச்சியின்பயன். இதுபோல, அந்தக்கரணம், காரணம். விருத்திஞானமும், கருமமும், காரியம். இவ்விரண்டுமொன்றோடொன்றுமாறுபடல், புடைபெயர்ச்சி. மாளல், இப்புடைபெயர்ச்சியாலாயபயன். விருத்தியாகிலுமென்பதினும்மை, இழிவுசிறப்பு. புருடனாலாயதந்திரம், புருடதந்திரம். வஸ்துவாலாயதந்திரம், வஸ்துதந்திரம். கர்த்தனாம்புருடதந்திரமெனவே, அகர்த்தாவாம்வஸ்துதந்திரமென்றாயிற்று. உபாதியானெனல், கர்த்தத்துவம், அறிவுயானெனல், அகர்த்தத்துவம். மனமுபாதிவடிவா நின்றியற்றல், கருமம். அறிவேவடிவாநின்றியற்றல், ஞானம். இவ்விரண்டும்மனத்தின்காரியமாயினும், அஞ்ஞானத்தைநீறுபடுத்தும்வலி யேற்றற்பாலதியாது. இதனைக்கணிப்பார் தத்துவஞானியரேயன்றி யேனையரல்லர், ஏனையருமெனின், சொல்லாலன்றியர்த்தத்தாலல்லர். ஒருத்திமக்களென்பதனால், தானேதாயென்றமையும். தாயென்றுரைாகூறவேண்டுமோ, கூறல், மிகைபடக்கூறலென்னுங் குற்றமாயமையும், ஆதலின்வேண்டுவதின்று. புருடனது தந்திரமென்றுவதால், வேற்றுமைத்தொகை. புருடன்தந்திரம், புருடதந்திரமென்றாயது, சிலவிகாரமாமுயர்திணையென்பதினாலென்க. புருடனென்னல்போதும், கருத்தனாகியபுருடனென்றது; ஞாயிறு, திங்களென்னல்போதும். செஞ்ஞாயிறு, வெண்டிங்களென்றாற்போலும். அடைவேண்டாதவற்றிற்கடைகொடுத்தல் மிகையாயினுஞ், சான்றோரேற்றலின்வழுவமைதியென்க.

(க-து.) தந்திரமிரண்டாக்கியதா லஞ்ஞானத்துக்குச்சத்துரு விருத்திஞானமெனத் தானேயன்மையுமென்பது. தமதுபுண்ணியகன்மங்களையெல்லாமீஸ்வரார்ப்பணஞ்செயல், புருடதந்திரமெனல்மெய்யே. இதுபோல வஸ்துதந்திரநிலையெங்ஙனமாயதோவெனில், அல்லவில்லையாமுண்டெனற்கியையாது, நின்றுள்ளதுயாதோ அதுவஸ்து. சித்தமுமங்கான்கின்வயமாகாதவ்வஸ்துவினையேநிற்றலைச் சமாதியென்பர். பலகாலமுநேரேநிற்கநிற்க வங்குமாநிறைந்துள்ளசிற்சோதியானது, அங்ஙனமசையாதுநின்றுள்ள சித்தத்

தின்கண் ணிருளில்மின்மினிபோலவும், சுடர்போலவும், வளர்பிறைவரிசை போலவும், சூரியோதயம்போலவும், பகலொளிபோலவும், கணக்கின்றிய சூரியர்போலவும், உபாதிரகிதப்பிரகாசம்போலவும், தனதமிசம்பிரதிப்லித் தல்தந்திரமெனவறிக. இம்முறையறியார்பால் கேட்டென்பயன் (அக)

அஉ - கவி. அ - கை.

[கருமத்தைத்தியானயோகமெனவும், ஞானத்தைஞானயோக மெனவுமிரண்டாக்கி யிக்கவியில்விடைகூறுகின்றார்.]

வகுத்த கன்மங்கள் செய்யவுந் தவிரவு மற்றொன்றாக் கவுங்கூடு
மிகுத்த ஞானமப் படியன்று தியானமும் விவேகஞா னமும்வேறே
செகத்தி லொன்றையொன் றாவிவன் பாவிக்குந் தியானங்கற் பித
முகஸ்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவ மோகமா மயங்காதே. [யோக

(இ-ள்.) வகுத்தகன்மங்கள்செய்யவுந் தவிரவுமற்றொன்றாக்கவுங்கூடும், எ - து. சான்றோரால்வகுக்கப்பட்டுள்ள கருமங்களானவை, செய்யவுங் கூடும், விட்டுவிடவுங்கூடும், வேறொன்றாக்கவுங்கூடும்:—மிகுத்தஞானமப்படி யன்று தியானமும் விவேகஞானமும்வேறே, எ-து, மிகச்சிறப்பித்துள்ளஞா னமானது, அவைபோலப் புருடரால்வகுக்கப்பட்டதன்று (எங்ஙனமெனில்) தியானமென்பதூஉம், விவேகஞானமென்பதூஉம், வெவவேறாவகுக்கப்பட் டுள்ளனவாம்:—செகத்திலொன்றையொன்றாவிவன் பாவிக்குந்தியானங்கற் பிதயோகம், எ - து. உலகத்திலிவனொன்றைமற்றொன்றாகப் பாவிக்குந்தியா னமே கற்பிதயோகமெனவும்:—முகஸ்தமாக்கண்டஞானமேவாஸ்தவமோக மாமயங்காதே, எ - து, பிரத்தியட்சமாகக்கண்டஞானமேயுண்மையான ஞா னயோகமெனவும்பெயராம். இஃததுபோலத்தெளிவின்மையாலொன்றுமற் றொன்றாகக்கலங்காதே, எ-று.

இரண்டுமொன்றெனவிபரீதபுத்தியா னீமயங்காதேயெனினுமமையும். வகுத்தகன்மங்கள், மிகுத்தஞானமென்றிருத்தலின்,' புருடதந்திரத்தால் வகுக்கப்பட்டுள்ள கன்மங்களெனவும், வஸ்துதந்திரத்தால் சிறப்புமிக்குற்ற ஞானமெனவும்பொருள்கொள்ளினுமமையும். வகுத்த, மிகுத்தவென்றதிறு ல்பிறவினையாக்கினும். கன்மானுஷ்டான மிட்டங்காரணமாகவாதலின்வருத் தம்பற்றிச் செய்யவுந்தவிரவும்மற்றொன்றாக்கவுங்கூடுமெனவும், ஞானனுஷ் டானஞ் சுகப்பெருக்கேமேலிடச்செய்தலின், இட்டம்வைப்பெற்றிற்கு. வருத் தந்தட்டலெங்ஙனமென்மதுகொண் டப்படியன்றெனவும், சகளம்வேடமெ னக்கொள்ளாது வேடதாரியாகக்கோடலின், செகத்திலொன்றையொன்றா விவன் பாவிக்குந்தியானமெனவும், வாஸ்தவஞானமெனினும் விவேகஞான மெனினுமொக்கும். தேவதத்தனை யவன்வேடங்காரணமாகக் கும்பியென் றும், சந்நியாசியென்றுங்காணு துள்ளவாறவன்சுயவடிவைக்காண்டலேமுகஸ்

தமாக்கண்டஞானமே வாஸ்தவமெனவுங்கூறினர். தியானமும், விவேக ஞானமும்வேறேயெனப்பகுத்துத் தியானங்கற்பிதயோகமெனவே, விவேக ஞான மெதார்த்தயோகமெனப்பெற்றும். கன்மம்; தியானமெனவும், கற் பிதயோகமெனவும் பெயர்பெற்றாற்போல, ஞானமும்; விவேகஞானமென வும், எதார்த்தயோகமெனவும் பெயர்பெற்றுநின்றது.

(க - து.) இங்ஙனமாயவேதுக்களாற் கன்மமும், ஞானமும், வேறே யென்பது. இன்பதுன்பங்களிடைவிடாதொழிவின்றி வினைவசத்தாலெய்தி னும், உள்ளக்களிப்பனுவேனுந் தாழா துயரா தொருபடித்தாநிற்கும். இங் ஙனநிற்றல் விழிப்பினுமுறக்கத்தினுமாயின் தள்ளுவதெங்ஙனம்? கொள்ளுவ தெங்ஙனம்? இதுயாதுகாரணமாக வெய்தியது? ஞானங்காரணமாக. அந்தஞானம்; வாஸ்தவமாகவும், முகஸ்தமாகவுமிருக்கு மபரோட்சஞான மன்றிப் பரோட்சஞானமன்று. இஃதென்னவலியது, மேல்கீழொப்பின் றெனச்செய்யும்வலியது. யாதாகச்செய்யும்வலியது? சமஸ்தமுஞ்சின்மாத் திரமாகச்செய்யும்வலியது. இதுகாரணமாவெய்தியசுக மெங்ஙனமாயதோ? விதனையுடையாரோயறியவேண்டும். அயலாயினரொங்ஙனமறிவர். முகஸ்த மாக்காணுஞான மத்துவிதியிடத்தும், கற்பிதயோக மேனையோரிடத்துமெ னக்கொள்க. அஃததிஷ்டானம், இஃதாரோபம். அது மாறாதது, இது மாறுவது. (அஉ)

அரு - கவி. அ - கை.

[மேற்கூறியவிருவகையோகத்தினிலக்கணங்களை யிக்கவியில் விளக்கி யஞ்ஞானநாசத்தையுங் கூறுகின்றார்.]

**கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபா வனையோகங்**
**கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாதே**
**கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவியஞ் ஞானத்**
**கண்ட வக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே. [தைக்**

(இ-ள்.) கண்டறிந்ததுஞானங் கேட்டதுதனைக்கருதுபாவனையோகம், எ-து. பிரத்தியட்சமாகக்கண்டறிந்தது ஞானயோகமெனவும், ஒருவர்சொன் னவண்ணங்கேட்டதனைப் பாவிப்பதுபாவயோகமெனவும்பெயராம்:—கண் டபேர்சொலக்கேட்டது மறந்துபோங்கண்டதுமறவாதே, எ-து. கண்டவர் கள்சொல்லக்கேட்பதுமறந்துபோகும், அங்ஙனமாகாதுதான்கண்டது மறந்து போகுமா, மறந்துபோகாதே:—கண்டவஸ்துமெய் தியானவஸ்துக்கள்பொய், எ - து. நேரேகண்டவஸ்துயாதோஅதுமெய், பாவிக்கப்பட்டவைகளெவை களோஅவைகள்பொய்:—கறுவி யஞ்ஞானத்தைக்கண்டவக்கணங்கொல்வது ஞானமேகருமமன்றறிவாயே, எ-து. அஞ்ஞானத்தைக்கண்டவக்கணமேயத னைச்சீறிக்கோறற்பாலது மெய்ஞ்ஞானமேயன்றிக் கருமமன்றெனவறிதி, எ - று.

வஸ்து மனோவாக்குக்கெட்டுமெட்டாதென்பதைப்பற்றி முன்னரேகூறியிருப்பதால், இங்கேகூறவருவது முறையன்று. ஆயினும், இங்கேசற்றுவிசாரிக்குதும். காலதேசவஸ்துவையன்றிச் செகமெனல் தோற்றமாத்திரமுஞ் சொன்மாத்திரமுமாமுடிகின்றதே, இப்போதுலகமெனற்குப்பொருளெங்கே? இதோதோற்றுகின்றதேயெனில், அம்மூன்றிற்படாதுகாட்டலாமே? பொருளிடங்காலமென்னுங்காரணங் கருதாவிடத்துத்தோற்றலும், கருதியவிடத்துத்தோற்றாமையுமானால், அப்போதுலகிருப்புக்குமின்மைக்குங்காரணங் கருதாமையுங்கருதலுமாகின்றதே, இவ்விருபுடைபெயர்தலுக்கும் வினைமுதல்மனமாகின்றது. இந்தமனதையன்றிப்புடைபெயர்ச்சியும், இந்தப்புடைபெயர்ச்சியையன்றிச் செகத்துண்மையுமின்மையுமெங்கே? ஆதலின், மனோகற்பிதமேயுலகமென்றாயிற்று. இதற்குதாரணம். வாசிட்டம், விரதசூயைகதையில், ௬-கவியிற்காணலாம். மனமானதுதானேசகத்தாகப் பரிணமித்துத் தானேதன்னைப்பார்க்கின்றதென்றால், தன்னைவிகற்பித்துத் தன்னைத்தான்காண்கின்றவிது; தன்னைத்தான்விகற்பிக்காமல் சுயம்பாகக் காண்கின்றதரிதோ? அங்ஙனந்திரும்பாதகுறையேயன்றிவேறன்று. இதற்குதாரணம்; வாசிட்டத்தில். "ஆன்றவம்மனம்பூர்ணத்தையடைந்து பூரணவெண்டிங்கள்போன்றுறவிளங்கு" மென்னுங்கவியாற்காணலாம்.

(க-து.) இவ்விருவகையோகவிலக்கணங்களைவிளக்கியதா லஞ்ஞானத்துக்குஞானமே சத்துருவெனத்துணிந்தாமென்பது. உலகத்தில், பெரும்பாலுமனேகர்வேதாந்திகளென மடாதிபதிகளாயிருந்து கண்டறிந்தஞானமென்பதற்குறை; வேதாந்தநூல்களாலறிவே யுண்மையெனக்கூறியிருப்பதை மனதில்திடபாவமாயுறுதிகொள்வதெனவும், மனனம், நிதித்தியாசனம், இதுவேயெனவும், இதற்குப்பய னீசனைவந்தித்தலேயெனவும், இதல்லவெனப்பரமஞானிகள்சொல்லினுங் கேளாதுதங்கள்மரபின்வழித்தா நடக்குதுமெனவுங்கூறுவர். இதென்னபுதுமை. கேட்டதுதனைக் கருதுபாவனையோகமெனற்கென்செய்வர். கண்டவஸ்துமெய் தியானவஸ்துக்கள்பொய்யென்பானேன். நிச்சயஞானம்பரோட்சமாயிற்றே, இஃதபரோட்சஞானமாகுமா? ஆகுமெனில், ரவியாதியின்றியிருள்நாசமாகுமா, யுத்தியாவது, அனுபவமாவதுண்டா? இதோசூரியனெனநினைத்தாலும், சொன்னாலுமிருள்போகுமா? போகுமானால், கருமமும், விருத்திஞானமுமென விரண்டாகக் கூறுவானேன். அறிவேயுண்மையெனநினைவால் திடபாவங்கொள்ளில், அறிவு, இரிசியங்களிலொன்றாய்முடியும்; அல்லது பாழாகவேனும், நினைவாகவேனுமுடியும். பாழெனில், மாயை. இரிசியமெனி லுலகம். நினைவெனில் தனதுசூக்குமதேகம். அறிவிங்ஙனமாயதன்றோ? என்னை, "அறியாப்பொருள்காரணமாயைகுறித் தறியும்பொருள்காரியமாமுலகிந், நெறியாற்றிகழ் நான்மறையந்தமெலா நீயன்றெனவோதுநிரந்தரமே." எ - ம். "அறியும் பொருளன்றறியாப்பொருளன் றறிவாகியநீயெனுமப்பொருடான்," பொறி

யின்வழிநின்றறியும்பொருளோ போதக்கண்விழித்தறியும்பொருளே'' எ-ம். கூறியவற்றாற்காண்க. தேகாதிதத்துவக்குழாங்கள், அறிவாலல்சிவமறியா கலாம். சிவதரிசனத்தில்தத்துவங்களும், தத்துவதரிசனத்திற் சிவமு மபா வமாயிற்றே, இரண்டையுமத துவாயிருந் தறிந்ததறிவாயிற்றே, அஃதிருந்த படியிருக்கின்றதே, அது சிவமாகுமா, தத்துவங்களாகுமா, ஆகாதே; இவவி ரண்டவசரநிலையாயும், அன்றாயுமிருக்கின்றதே. இவவறிவே, சகலநாளுயிரு ந்து மாங்காங்கெட்டப்புகில் தூரதூரமாகவகன்றேகின்றதே, இதனைத்தரிசி ப்பதற்கன்றோ, சிரவணமனனாதிகள்செய்வது. இவவறிவைத்தவிரமேலாய தென்னையுளது. இருக்கின்றதெனின், அதுதானு யிருந்தறிவதுமிவவறிவுதா னே. அன்றெனின், கருமானுஷ்டானமும், ஞானானுஷ்டானமும்புரியுமறிவு பயன்வேண்டியன்றோ? அப்பயனறிவுக்கன்றோ, இம்மைப்பயனுமறிவுக்கன் றோ, அப்பயனிப்போதும், இப்பயனப்போதுமுண்டா? பயனென்றிலொன் றில்லாதாயினு மதனையனுபவிக்குமறிவெப்போதின்று. எப்போதுமிருக்கின் றதெனின், இதனை இலட்சியார்த்தத்தாற்காணுது பராக்கிற்செல்வதென்னை. இவவறிவையன்றி நானெனற்குப்பொருள்கணடிலமே. உபாதிநானாகுமா? ஆகாதவுபாதியைநானெனப்பார்ப்பதுபோல, நானெனலைவிசாரித் துண்மை யாகப்பார்க்கவேண்டுமன்றோ? எங்கேபார்க்கின்றனம், தன்னைவிட்டுத்தனக் கயலைநாடப்புறப்பட்டனமே, இதுதானுவேதாந்தியென்பதற் குபநிடதசம் மதம், நன்றுநன்று, இப்போதேயிப்பெயரையொழிக்காவிடில், நம்பியடுப் பார்கெடுவர். இதுதிண்ணம். இதுநிற்க. இவரிப்போதேயுலகைமித்தையாக் கற்கறியா ரெங்ஙனம்பிரமமாக்குவர். மித்தையாக்குவரெனின், இவவுலகஞ் சுழுத்தியிலில்லையெனக் கூறுவதாமித்தையாக்கல், நன்குநன்கு. இப்போது மில்லாதகானனீரை யுவமைகூறவந்த துலகமிப்போதுமில்லையெனற்கன்றோ. இக்காலத்தில்கேட்கி லக்காலத்தில்கூறவருவது; கல்வித்தேர்ச்சியையு மனுபவத்தெளிவையுங்காட்டுகின்றதே, இதுநல்லவேதாந்தம். இங்ஙனங் கூறியுடலைவளர்த்தலேயன்றி யுணர்வைவளர்த்தலாகுமா? இனியாவதிம்மட மைமரபைவிட்டுத் தன்னையுள்ளங்கைநெல்லிக்கனிபோற் காட்டவல்லாரைத் தேடியடுக்கிற் பிழைக்குதும், அன்றேற்கெடுதும். இஃதகங்காரத்தாற்கூறிய தன்று. துக்கநிவிர்த்திக்கென்க. நாமேகமெனலைச் சொல்லாற்காணுது, கண்ணாற்காணத்துணியினதுபயன்படும்.* கண்டவஸ்துமெய் தியானவஸ்துக் கள்பொய் யென்பதிலையமென்னை? தன்னைத்தான்காணுதளவும், செகசிவ பரஞ்சத்தியம். காணின்மித்தை. எனவே, காணுமையேசத்தியமெனவும், காட்சியேமித்தையெனவுமாயிற்று. ஆகவே, காணுமையுங்காட்சியுந்தனது புடைபெயர்ச்சி. அப்புடைபெயர்ச்சிக்குவினைமுதல் தான். இங்ஙனந்தன்னை யன்றிவினைநிகழ்தலும், நிகழ்தலையன்றிச்சத்தியமுமித்தையு மில்லையெனக் கண்டாம். இதனினுமிக்கவித்தையெங்குமில்லை. இதுபிறவிதவிர்க்கும். ஈஸ் வரார்ப்பணஞ்செய்தலாகிய புண்ணியமோ, அதன்பலனையனுபவிக்கப்பிறவி தரும். ஆதலின் ''பிறப்பென்னும்பேதைமை''யென்றார். கேட்டவண்ணம்பா

வித்தல்யோகம். பாவித்தவண்ணங்காண்டல்ஞானம். இங்ஙனங்காண்டலைத் தான்ஞானகதப்பிரத்தியட்சமென்பர். பாவனையயன்று. (அரு)

அச - கவி. அ - கை.

[தியானமசத்தியமென்ற லதுகாரணமாவெழுமுத்தியு மசத் தியமன்றோவென்றவினவிற்குவிடை யிக்கவி யிற்கூறுகின்றார்.]

சருவ மூத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்திய மன்றென் றால்,
சருவ முத்தியுஞ் சத்திய மன்றென்று சங்கியா தேகீகே, (மன்றே,
ளுருவங் கேட்டவன் றியானிக்கும் பொழுதிலவ் வுருவம்வாஸ் தவ
யுருவ மாகுமப் பொழுதுகண் ணுற்கண்ட வுருவம் வாஸ் தவமாமே.

(இ-ள்.) சருவமுத்தியைத்தருகின்ற தியானமுஞ் சத்தியமன்றென்றால், எ - து. சர்வமுந்தானாகவிளங்குமுத்தியை நேரோதருகின்றதியானயோகமு மித்தையாமெனத்தேவரீர்கூறினால் :—சருவமுத்தியுஞ்சத்தியமன்றென்றுசங் கியாதேகீகேள், எ - து. சர்வமுந்தானாவிளங்குமுத்தியுந் தியானங்காரணமாக வந்தபடியா லதுவுமித்தையாகின்றதேயெனச் சங்கியாமலேயான்சொல் வதைகீகேளுதி:— உருவங்கேட்டவன்தியானிக்கும்பொழுதி லவ்வுருவம்வா ஸ்தவமன்றே, எ - து. பிரமஸ்வரூபமிங்ஙனமிருக்கின்றதெனக் கேள்வியுற்ற வனதனைச்சிந்திக்கும்பொழுதி லதுவிளங்காமையா லப்போதந்தப்பிரமஸ்வ ரூபமவனுக்கு வாஸ்தவமல்லவே, ஆயின்:—உருவமாகுமப்பொழுதுகண்ணுற் கண்ட வுருவம்வாஸ்தவமாமே, எ - து. தானேயந்தப்பிரமஸ்வரூபமாகும் பொழுது பிரத்தியட்சமாக ஞானக்கண்ணுற்கண்ட அவ்வடிவமப்போதுண் மையாகாதா, உண்மையாகுமே, எ - று.

அதற்கு உத்தரமிருப்பதாற்சங்கியாதேகீகேளெனவும், கேள்விப்பட்டுத் தியானிக்கில், அதுசாதனமன்றோ, சாத்தியப்பட்டவிடத்தன்றோ வதுதானா கவிளங்கும். அப்போதுவிளங்காததனாற்பொய்யானதும், விளங்கினதால் மெய்யானதுமவனுக்கன்றி வஸ்துவுக்கன்றே. ஆதலின், தியானிக்கும்பொ ழுதி லவ்வுருவம்வாஸ்தவமன்றேயெனவும், கண்ணுற்கண்டவுருவம் வாஸ்த வமாமேயெனவுங்கூறினார். காரணம், தியானம். காரியம், முத்தி. காரணம் பொய்யாகும்போது காரியமெய்யாகுமாவென்பதுசங்கை. இதனைத் தானே யாசங்கித்தார். தியானமேமுத்தியென்பதை மறுத்தற்குத் தியானமித்தை யென்றதென்க. தியானமேமுத்தியாயின் மேலேஞானமெற்றிற்கு? தியா னத்தாற்பரோட்சமும், ஞானத்தாலபரோட்சமுமெனப்மெற்றும். பெறவே, தான்சுயம்பிரகாசமாகவிளங்கல் வாஸ்தவம், அன்றாகவிளங்கல் வாஸ்தவம ன்மை யெனலைக்கண்டாம்.

(க - து.) பிரத்தியட்சஞானமேயஞ்ஞானநாசமாமென்பது. பிரத்திய ட்சஞானமாயின் திரிபுடியாமேயெனின், சமஸ்தமுஞ்சொப்பிரகாசமாகவிளங் கிலயலெனலேது? இல்லையே. ஆதலின். திரிபுடிநாசமெனக்கொள்க. எங் ஙனமெனின், ஞாதுரு, ஞானம் ஞேயமென்பவற்றுள், இடையிலுள்ளஞா னத்தைவிளக்காவிடில், திரிபுடியுண்டு. விளக்கில், எங்கே? ஆதலின், அஞ் ஞானவிமோசனத்துக்குக் கண்ணூற்கண்டவுருவம் வாஸ்தவமெனப்பட்டது. விரிக்கிற் பெருகும். (அச)

அடு - கவி. அ - கை.

[தியானிப்பானுக்குத்தியானமித்தையாயினும் அவன் தியானித்த வண்ணம் பெத்தமேனுமுத்தியேனுமெய்துமெனலை யிக்கவியிற்கூறுகின்றார்]

சடம தாகிய தியானமெய் யாகிய சர்வமுத் தியைநல் குந்,
திடம தானதெப் படியெனி லவரவர் தியானமே பிறப்பா கு, (தா,
முடல மாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களா குவர் மைந்
தொடர்ப வங்கெடச் சொருபமே தியானிக்கிற் சொருபமா குவர் மெய் யே.

(இ - ள்.) சடமதாகியதியானமெய்யாகிய சர்வமுத்தியைநல்குந்திடம தானதெப்படியெனில், எ - து. சடமாகின்றுள்ளதியானமானது, சர்வமுந் தானாகவிளங்குமெய்யாகிய முத்தியைத்தருமென்றதிடத்தை யுறுதியாகக் கொள்வதெங்ஙனமெனக்கேட்பையாயின்:—அவரவர்தியானமேபிறப்பாகுமு டலமாசையாற்றியானிக்கிற்றியானித்தவுடல்களாகுவர்மைந்தா, எ - து. ஞா னபுத்திரா! எவரெவரெங்ஙனமெங்ஙனந்தியானிக்கிறார்களோ அவரவர் தி யானத்தின்வண்ண மங்ஙனமங்ஙனமாயபிறப்பெய்தும். எங்ஙனமெனில், தேகவாசைகொண்டுசிந்திக்கில் சிந்தித்தவண்ண மததற்குரியவுடல்களெடு ப்பார்கள்:— தொடர்பவங்கெடச்சொருபமேதியானிக்கிற் சொருபமாகுவர் மெய்யே, எ - து. விடாதுதொடர்ந்துவருகின்ற பிறவிகெடவேண்டிப் பிர மசொரூபத்தைத்தியானஞ்செய்யிற் பிரமசொரூபமாகவிளங்குவ ரிதுசத்திய மே யிதனைச்சிந்தித்தறிதி, எ - று.

சடமதாகியதியானமென்றது ; தியானந் தன்னையு மற்றொன்றையுமறி யாதெனவும், மெய்யாகியசர்வமுத்தியென்றது ; தானன்னியமாகாது தா னேதானாகவிளங்கலெனவும், பொருள்படுமாறுகாண்க. உயிரெனல், உண ர்வு. என்னை, "உணர்வியலாமுயிரொன்றுமொழித்த, வுடன்முதலனைத்து முயிரல்பொருளே" என்றார்பவணந்தி. இதில், உணர்வியலாமுயிரென்பது அறிவுமயமாகியவுயிரெனக்கொள்க. இதுபற்றி யோரறிவுயிர், "புன்மரமுத லவுற்றறிபுமோரறிவுயிரெனவும்", ஈரறிவுயிர், "முரணந்தாதிநாவறிவொ டீரறிவுயிரெனவும்", மூவறிவுயிர், "சிதலெறும்பாதிமூக்கறிவின்மூவறிவுயி

ரொனவும்", நாலறிவுயிர், "தும்பிவண்டாதிகண்ணறிவிஞலறிவுயிரொனவும்,' ஐயறிவுயிர்," வானவர்மக்கணரகர்விலங்குபுள், ளாதிசெவியறிவோடையறிவுயிரோ", எனவுங் கூறியவாறுகாண்க. இங்ஙனமாயது; "மெய்நாமூக்குநாட்டஞ்செவிகளி, ஞென்றுமுதலாக்கீழ்க் கொண்டுமேனுணர்தலின், ஓரறிவாதியாவுயிர்க்காகு" மென்பதனுலென்க. சத்தபரிசாதிகளையுணர்தலைப்பற்றியுயிரைவகையெனவும், தோற்றபேதத்தாலுயிரெழுவகையெனவும், உபாதிபேதத்தாலும், குணபேதத்தாலும், சத்தபேதத்தாலும், உணர்வுபேதத்தாலுமோவ்வொருதோற்றவுயிர் பற்பல பேதமெனவுங் கொண்டதேயன்றி, வேறுகாரணம் பற்றியன்றே. எந்தவுயிருக்கெந்தபிறவிசுதந்தரம்? இன்றே. உபாதிதோற்றத்தானும். வினைக்கீடாகப்பிறவிமாறுவதானும். மேல் கீழதாகவும், கீழ் மேலதாகவும், உயிராகின்றனவன்றோ? உயிரிங்ஙனமாதற்குக்காரணம்; கடவுளிஷ்டமெனில், பாரபட்சதோடமெய்தும். சுபாவமெனின், அந்தந்தவுயிரந்தந்தத்தோற்றமாகவே மாறுதொருபடித்தாயிருக்கவேண்டும், அங்ஙனமின்றுதலால்தோடமெய்தும். நிலையாதுமாறுதலே சுபாவமெனின் முடிவின்றாம். முடிவின்றாகவே, ஒவ்வோருயிரும்பிறவியால் மாறிமாறிநிலையாதலையுமன்றோ? ஏற்றனம். ஒவவோருயிர்க்கும்பிறவியளவின்றெனநின்மொழிகாட்டுகின்றனவன்றோ? மாறிமாறிப்பிறவியெய்தற்குயிரெப்போதுமிருக்கவேண்டுமன்றோ? இங்ஙனமிருக்க, உயிர்முன்பின்னில்லாததெனக்கூறலாமா, கூறுகின்றனரோ, இதுபோலவே யவரதுவாதமுமிருக்குமெனவறிக. மீண்டுஞ் சுபாவமெனில், முற்று நிலையாவாததோடமெய்தும். வினையெனின், எதுகாறும்;விருப்புவெறுப்புள்ளளவும்·இதுவெதுகாறும்,பொருளல்லவற்றைப்பொருளாகக் கருதுமறியாமையுள்ளளவும், இதுவெதுகாறும், தானேதானுகவிளங்குமளவும். அப்பாலென்செய்தும். விஞவொழிக. மீறிவிஞவெல்லாஞ்சொல்வாதமாயமையும். உயிர்க ளிந்நிலைகள்பேதமறியாததால், இவற்றுளொன்றையவாவி வினைபுரியுமன்றோ? வினைபுரிதல், சங்கற்பித்தலை. அதாவது; சிந்தித்தல். சங்கற்பம், சிந்தித்தல், தியானம், இவையனைத்துமொருபொருட்கிளவி. வினைபுரிந்தாலன்றோ வதன்பயன் தமக்கெய்தும். எய்தினலன்றோ, அனுபவித்துத்தீர்த்தல். அனுபவித்தற்குத்துணைக்கருவிபிறவிவேண்டுமன்றோ. இதுதியானங்காரணமாகவெய்தற்பாலதாதலின், பந்தத்துக்கேனுமுத்திக்கேனு மவரவர்தியானமேபிறப்பாகுமென்றார். தானேசமஸ்தபோகமுமாகப்பரிணமித்திருத்தலைத் தானென்றறியாது. தனக்கயலெனக்கருதலளவு மதனைச்சுகிக்க வுயிர்கள்தாவுமன்றோ? அங்ஙனந்தாவுதலேதியானம். அந்தத்தியானபேதமளவின்மையின், உடலமாசையால்தியானிக்கில் தியானித்தவுடல்களாகுவரென்பதூஉம், சமஸ்தபோகமுந் தனதுபரிணமிப்பேயெனத்தெளிந்தார் மீண்டுமயலெனநாடுவரோ. தன்னைத்தானடையத்தியானிப்பரன்றோ, ஆதலின், தொடர்பவங்கெடச்சொரூபமேதியானிக்கிற் சொரூபமாகுவரென்பதூஉம்பொருந்தும்.

(க - து.) இருவகையுளதைத் தக்கவாறுதியானிக்கின்றனரோ, வதுவந் தேதீருமென்பது. இதனைமறுக்காததற்கேதுகூறியதைக்காண்க. பொருளைப்பொருளாகக்காணுவளவும், அவாநாசத்துக் கிடமின்று. இடமின்றுவளவும் போகதாகநசியாது. நசியாவளவும், அதனையநுபவிக்க யாதானும் வினைபுரியவரும். வருமளவும்பிறவியகலாது. அகலாதுபற்றி யிங்ஙனங்கூறினாரென்க. இப்போதேபற்பலபிறவிபேதமுந் தேகபேதமுந் கோறிக்கைபேதமும், அடங்காவவாபேதமும், சங்கற்பபேதமும், முயற்சிபேதமுமாயுயிர்களிருக்க, இன்னும்பிரத்தியட்சம் யாதுக்கு. (அரு)

அசு - கவி. அ - கை.

[தான்பிரமமாதற்குத்தியானமேபோதுமெனின் விசாரமும்
ஞானமுமெற்றிற்கென்ற வினவுக்குவிடை
யிக்கவியிற்கூறுகின்றார்.]

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரென்றூ
னரச ரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே னென்னுதே
பரம பாவனை பரோக்ஷமாம் பின்பந்தப் பரோக்ஷமே யபரோட்சந்
திரவிசு சாரமா ஞானமே முத்தியாந் தீர்வையீ தறிவா யே.

(இ-ள்.) பிரமரூபத்தைத்தியானித்தபேர்களும் பிரமமாகுவரென்றால் நரசரீரமாங்குரவனே விசாரமேன்ஞானமேனென்னுதே, எ-து. மானிடவடிவாயெழுந்தருளிய குருநாதனே! பிரமஸ்வரூபத்தைத்தியானித்தவர்களும் பிரமமாகவேவிளங்குவரெனத் தேவரீர்கூறினால், மேலேவிசாரமும், ஞானமுமெற்றிற்கோவெனச் சங்கியாதுநிற்றி, யான்கூறுவனதனைக்கேளுதி:—பரமபாவனைபரோட்சமாம்பின்பந்தப்பரோட்சமேயபரோட்சம், எ-து. பிரமத்தியானமேபரோட்சஞானமாம், பின்னரந்தப் பரோட்சஞானமேயபரோட்சஞானமாம்:—திரவிசாரஞானமே முத்தியாந் தீர்வையீதறிவாயே, எ - து. இடமாக விசாரிக்கும்விசாரத்தாலான வந்தவபரோட்சஞானமே நிரதிசயானந்தமாம், இதுவேதீர்ப்பென வறிதி, எ-று.

அறிவினதுபிரதிபல [illegible] ஆதுசருதயுததியனுபவத்துணிபாதலானும், சோதனைஞாயம் பொருத்தமுகத்தாலாய்ந்த தெளிவாதலானும், அறிவேபிரமமெனப்பெற்றும். பெறவே, இணைபாலிடமாயுமன்றுயுமிருத்தலி னெல்லாமாயல்லவுமாயிருந்த இஃதெனச்சுட்டாது கூறினர்சான்றோர். ஆயினும், அஃதறிவேயெனக்கண்டாம். கண்டதாலிது மறுத்தற்பாலதன்று, மறுப்பார், கெடுவர். என்னை, "பூதாதியைந்து பொறிபுலன்களெல்லாஞ்சித் தேதா தியந்தமிவையெல்லாஞ்சித் தோதரிய கற்பனையுஞ்சித்தனைத்துங் காண்பானுங்காட்சியுஞ்சித் தற்பமும்வேறில்லாமையால்", என்றார்சொரூபானந்தர். "ஞானமேபிரமமென்ற முதன்மொழி

யின்பயன்கேள்,'' இதனைமகாவாக்கியத்திலும், அறிவேபரமென்பதைப்பற்றி முக்கியமாய், வாசிட்டத்தில், தேவபூசைகதையிலுங் காணலாம். சகல மதத்தரு மெதனைத் தெய்வமெனினுஞ் சொல்லாலன்றிப்பொருளால்ன்று, சொல்லாலெனின், அறிபடுபொருளும் நினைவும் பாழுமாம். பொருளாவது, மெய்யுணர்வு. அதாவது; படிப்பானைப்படிப்பதெந்தவுணர்வோ வந்வுணர்வு. இங்ஙனமாயவுணர்வேதெய்வமன்றி வேறென்பவெல்லாஞ் சோதனையினிலையுறாதுதத்தளித்தழியும். ஆதலினறிவேதெய்வமென்றும். எல்லாவுயிருமறிவாதலின், ஒவ்வோருயிரும், தன்னைத்தானொணச்சிந்தித்தல், தியானம். அஃதறிவெனவிசாரத்தாற்றேர்ந்தும் விளங்காமை, பரோட்சம். அதனைத்தக்கவசாஞல்விளக்கிக்கொள்ளுதல், அபரோட்சம். அதோடுநில்லாது நானெனலாதியாக வனைத்தையுமேல்கீழொப்பின்றி யவ்விளக்கமாகப்பன்ளுளதிகவருத்தங்கொண் டகமுகமாகப்பழகியாக்கல், ஸ்திரவிசாரமானுனம். அப்போதன்னியஞ்சிறிதுமின்றித் தானய்த்தானன்றாய்விளங்கலின், அதுவேதுக்கநிவிர்த்தியுந் தடையற்றவானந்தமுமாம், இங்ஙனமாயவானந்தமேதானுதல். இங்ஙனந்தானுதலேமுத்தி. இதறியாது பலருஞ்சொல்லப்பட்டமுத்திகளிந்நிலைக்குமாறுயவாதலானும், இதுபோற்பழைமையன்றுமையானும், அந்நியமாதலானும், அஃதாகாவென்க. இதுதீர்வையென்பார், பரமபாவனை பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமேயபரோட்சந் திரவிசாரமானுனமே முத்தியாந்தீர்வையென்றூர். இந்நூலாசிரியர்; பரோட்சமேயபரோட்சமெனத் தேற்றேகாரங்கொடுத்தமையின், பரமபாவனையேபரோட்சம், பரோட்சமேயபரோட்சம், அபரோட்சமேதிரவிசாரமானுனம், திரவிசாரஞானமேமுத்தியெனத் தேற்றேகாரங்கொடுத்தனம். இங்ஙனங்கொடுத்த தொன்றுங்கொன்றுதொடர்பாதல்பற்றியென்க. இத்தொடர்புசெல்லும்வழிச் செல்லவறியாதார், ஆங்காங்குபயனிதுவேயெனநிற்பர். நிற்பதால், அவ்வவ்வவசரத்தைமுத்தியென்பர். இவைமுத்தியாகுமா? ஆகாமைபற்றி யிவற்றைப்பதவிமுத்தியென்றனரறிஞர். இவவுளவறிந்தவராதலினிவற்றைத்தீர்வையென்னுதொழிந்தனர்.

(க - து.) பிரமஸ்வரூபத்தைத்தியானிக்குந்தியான முள்ளவாறெய்தினதோடுநில்லா ததன்வழித்தாச்செல்லி னிவ்வவசரநிலைகளை முறையேதந்துவிடுமென்பது. இன்னுந்தொடர்பிருக்கப் பிரமத்தியானம்பிரமமாக்குமெனல், துணிவுபற்றி. (அசு)

அஎ - கவி. அ - கை.

[அஞ்ஞானத்தைக்கெடுத்தபின்னர் விருத்திஞானமிருக்க எங்ஙன மனுபவங்கைகூடுமென்ற வினவிற்குத்தர மிக்கவியில் கூறுகின்றூர்.]

வீட தாம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமுங்கூடிச்
சேட மாகினு லகண்டமா மனுபவ சித்தியெப் படியென் றூற்

சாடி நீர்மண்ணைப் பிறித்ததேற் றும்பொடி தானுமண் ணொடுமொ யு
மூடி ஞானமு மறிவிலா மையைக்கெடுத் தொக்கவே கெடுந்தா னே.

(இ - ள்.) வீடதாம்பரிபூரணசொரூபத்தில்விருத்திஞானமுங்கூடிச்சேடமாகிநிலகண்டமாமனுபவ சித்தியெப்படியென்றால், எ - து. முத்திக்கு முதற்காரணமாகிய பரிபூரணசொரூபத்தி லஞ்ஞானத்தைக்கெடுத்துத் தான் மாத்திரமிஞ்சிநின்றுள்ளவிருத்திஞானமானது, தானுமப்பிரமத்தோடுகூடி விசேடமாயிருக்குமானால் துவிதமாகின்றதே, துவிதமானல், எங்ஙனமகண்டாகாரவனுபவசித்திவாய்க்கும். வாய்க்காதே, இதற்கென்செய்துமெனக் கேட்பையாயின்:—சாடிநீர்மண்ணைப்பிறித்ததேற்றும்பொடி தானுமண்ணொடுமாயும், எ-து. சாடியிலுள்ளகலங்கனீரை, நீர்வேறழுக்குவேறாகப்பிரித்த தேற்றுங்கொட்டைப்பொடியானது அவ்வழுக்கோடுதானுமொக்கமடியும்:—ஊடிஞானமுமறிவிலாமையைக்கெடுத் தொக்கவேகெடுந்தானே, எ-து. (அது போல)விருத்திஞானமு மஞ்ஞானத்தோடெதிர்த் ததனைநாசஞ்செய்து, அதனோடுதானுமொக்கவேமடியும், எ - று.

பரிபூரணசொரூபமாதலேமுத்தியாதலால் இதனைமுன்பின்னாக்கியது, காரியத்தைக்காரணமாகவுபசரித்தற்கென்க. வீடு, முத்தி. பரிபூரணசொரூபம், பிரமம். முத்திக்குப்பிரமம்பேதமெனக்கொண்டு நிமித்தகாரணகாரியமென்ப ரந்நிலையறியார்போலும். எந்தவறிவினால்தத்துவங்களையெல்லாம் விசாரித்துத்தானல்லதானல்லவெனச்செல்லுகின்றதோ, அந்தவறிவை விடநியதிகளையப்பெற்ற தத்துவக்குழாங்கள்வேறாகுமானால் பிரமமும் வேறாயிருக்கலாம். அங்ஙனமின்றே யிங்ஙனமிருக்க. சுசாதிகவிசாதிகசுகதபேதமயமாதல் தத்துவக்குழாங்கள். அன்றாதல், பிரமம். அந்தமயமாநின்றதும் இந்தமயமாநின்றதும், அறிவாதலால், அறிவேபிரமமுதலியவனைத்துமெனவும், ஒன்றிலொன்றில்லாமையறிவிலாதலால், அறிவேயுண்மையெனவுங் கண்டாம். இங்ஙனமாயநிலை யிவனின்னுமாகாமையா லிங்ஙனம்விஞவினனெனப்பெற்றாம். பொருளல்லவற்றைப்பொருளென்றுணர்ந்ததும், பொருளைப்பொருளென்றுணர்ந்ததுந்தானாதலா லறிவேயஞ்ஞானமும் ஞானமுமென்றாயிற்று. ஆகவே, தன்னால்விளைந்தவஞ்ஞானந் தன்னால்விளைந்தஞானத்தாலழியும்போது, தன்னைவிட ஞானம்வேறன்றாதலா லஞ்ஞானத்தையழித்துத் தானுமதனோடொக்கமாயுமென வுபமானபூர்வமாக விடைதந்ததெனத்தெரிந்தாம்.

(க-ந்.) ஞானமுஞ்சேடமாகாதழியுமென்பது. சேடம், மிச்சம். இந்த மிச்சம், பரிபூரணமெனற்குத்தண்டம். (௮எ)

அஅ - கவி. அ - கை.

[இங்ஙனமிருக்கச் சீவன்முத்தரனுபவமெங்ஙனமோவென
வினவுவானுக்குவிடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

**இந்த நிச்சய முத்தரு ளனுபவ மிருப்பதெப் படியென்றாற்**
**சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர்**
**பந்த முத்திகண் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகையாவ**
**ரந்த ரத்தையுண் டுமிழ்ந்ததோர் கொதுகெனு மவர்களை நகையாரோ.**

(இ-ள்.) இந்தநிச்சயமுத்தருளனுபவமிருப்பதெப்படியென்றால், எ-து. இங்ஙனமாயதீர்ந்தநிலை சீவன்முத்தருக்குளனுபவமாக விருப்பதெங்ஙனமோ வெனக்கேட்பையாயின்: — சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ் சிசுவும்போற்சுகமாவர், எ-து. பயசிந்தையற்ற திரிலோகமண்டலாதிபதியாகிய சக்ரவர்த்தியும், இதுநன்குதீதென்றறியாத சிசுவும்போலச்சுகரூபமாவர்:—பந்தமுத்திகள்மறந்துபோமுண்டென்று பலர்சொலினகையாவர், எ-து. பந்தமுமுத்தியுமறந்துபோகும், பலருமுண்டென்றுசொல்லுவராயின்சிரிப்பர்:—அந்தரத்தையுண்டுமிழ்ந்ததோர்கொதுகெனு மவர்களைநகையாரோ, எ-து. ஒருகொசுகானதாகாயத்தை யெடுத்துவாயில்போட்டுத் துப்பிவிட்டதென்று சொன்னாலவர்களைப்பார்த்தார்தான்சிரிக்கமாட்டார்கள், எ-று.

சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ் சிசுவும்போலெனவுவமைகூறியது; அரசனுக்கெதிரின்மைபோல் மகான்களுக்குச்சுசாதிவிசாதிசுகதபேதங்களின்மையினானும், சிசுவுக்குப்பகுப்பின்மைபோல் மகான்களுக்குத்தம்மைத்தவிரச்சிற்றறிவுபேரறிவென்பதூஉம், சிற்றின்பம் பேரின்பமென்பதூஉம், ஆகிய பகுப்புச்சிறிதுமின்மையினானும், பந்தமுத்திகள்மறந்துபோமென்றது; அஞ்ஞானத்தாற்பந்தமும், ஞானத்தால்முத்தியுமெய்தல்மரபு. இங்ஙனமிருக்க, இவர்களுக்குஞானபேதமேதீ, தம்மைத்தவிரவிவவிரண்டுபேதமுமின்மைபற்றி மறதிக்கேவருதலானும், உண்டென்றுபலர்சொலினகையாவரென்றது; சொல்லுவார்மடமைபற்றியாதலானுமென்க. ஈங்கே அந்தரமென்பது, ஞானாகாயத்தை. கொசுகென்றது, தானலதைத்தானென்போனை. ஆகாயமாகிய விபுத்துவத்தில் கொசுகெனலோர்பரமாணுவினும் பரமாணுவெனத்தகுமா? இஃதாகாயத்தைவிழுங்கி யுமிழ்ந்ததென்றாலென்னவியப்போ, அதுபோல, சொல்லாலன்றிப்பொருளாற் பார்த்தாயினுங்கேட்டாயினுமறியார், இவர்க்ளந்தப்பரமாகாயத்தையன்றி யிவர்களுளரோ, இலரே. இவர்களதைவிழுங்கி யுமிழ்ந்தாரெனல் வியப்பன்றோ, என்றொன்க. ஞானாகாயத்தையெடுத்து விழுங்கல், முத்தி. உமிழ்தல் பந்தம். இதனை யார்தானேற்பர், மாமரருமே லானொனலைக்குறிக்கின்றது. இவர்களவமதிப்புக்கிடம்பெறுரோ பெறுவார்க

ளென்னுமெதிர்மறைபொருடர நின்றதோகாரமெனக் கொள்க. நகையா ரோயெனப்பாடமோதின், ஏகாரம், எதிர்மறை.

(க - து.) மகான்கள்பந்தமுத்திமறந்தனரென்பது. சிதாகாயத்தையன்றித் திணைபாலிடமில்லாமையி னோற்றற்பாலதேயென்றறிக. இருந்தாலன்றேமறவாதிருத்தற்கு. இதுதன்னைத்தான்சோதித்துழித்தெரியும். (அஅ)

அகூ - கவி. அ - கை.

[சகம்பொய்யெனற்குப் பொய்க்கதையொன்றை யிக்கவியிற்கூறுகின்றார்.]

மலடி மைந்தனுந் தாணுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி
யிலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசிதத்தை விலைபேசிக்
கலக மாயினு ரிடையினிற் கயிற்றராக் கடித்திரு வருமாண் டா
லகை யாயினு ரெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங்கா னே.

(இ - ள்.) மலடிமைந்தனுந்தாணுவிற்புருடனும் வான்மலர்முடிசூடி, எ-து. மலடிபுத்திரனும், தறிபுமானும், இருவருங்கூடிக்ககனாரவிந்தத்தைக் குடுமியிற்சூடிக்கொண்டு:—இலகுகந்தர்ப்பநகரிலேசுத்திகையிரசிதத்தைவிலைபேசிக்கலகமாகியே, எ-து. விளங்காநின்றகந்தர்வமென்னுநகரின்கண் கிளிஞ்சல்வெள்ளியை விலைமதித்து, இவற்றைச்சுதந்தரமாக்கிக்கொள்ளுங் காரணத்தினெனதெனதென்று வழக்கிட்டுத்தமக்குள்ளே கலகமாய்:—இடையினிற்கயிற்றராக்கடித் திருவருமாண்டார், எ-து. இங்ஙனங்கலகமிட்டுக்கொண்டிருக்கையில், பழுதைபாம்புகடிக்க, அதனாலிருவருமிறந்தார்கள்:—அலகையாயினரெனும்விவகாரத்தை யறிந்தவன்மயங்கானே, எ-து. அவவாறிறந்தவர்கள்பேய்களானார்கள், என்னுங்கதையினொழுங்கை யறிந்தவனெவனோ அவனிவ்வுலகாதியைமெய்யெனமயங்குவனு மயங்கானே, எ-று.

மலடியும், தாணுவுமெய். மைந்தனும், புருடனும்பொய். இதுபோல, பிரக்ஞைமெய். ஏனையவைபொய். சூடி, பேசி, கலகமாகி, மாண்டு, அலகையாயினரென்பனவெல்லாஞ் சேட்டைகள். இதுபோல; வந்தான், போயினான். பார்த்தான், கேட்டான். நினைத்தான், மறந்தான். அறிந்தான், அறியான். என்பனவுஞ்சேட்டைகள். அந்தவினைமுதல்மெய்யாயி னந்தச்சேட்டைகள்மெய்யாகலாம். இந்தவினைமுதல்மெய்யாயி னிந்தச்சேட்டைகள் மெய்யாகலாம். ஒருபோதுமாகாவாறுபற்றி இங்ஙனமாயவுவமையால் மித்தையெனத்தெரிவித்தனர். உபமேயத்தைமித்தையெனக்காட்ட முழுதுமித்தையானகதையை யிக்கவியுபமானித்ததால், பிறிதுமொழிதலணி. உதாரணம். "நெடும்புனலுள்வெல்லுமுதலை யடும்புனலி னீங்கினதனைப்பிற" என்பதனானும்; "கொக்கொக்ககூம்பும்பருவத்து மற்றதன் குத்தொக்கசீர்த்தவிடத்து" என்பதனானுங்காண்க. முன்பின்பற்றி யிங்கேயுவமேயமுலகாதியென்றாம். ஏனையவையென்பது, தேகமுதலிய தத்துவக்கூமாக்கை.

இவைபிரக்ஞையினதுசாயையெனவறிக. உபாதானவுபாதேயமயமாகாததத்துவக்குழாங்களெங்கணுமில்லை, இங்ஙனமாயசோதனையகலாதாரிக்கதைமையறவார். அகன்றார்மறப்பர். அசைகுறைதலைப்பற்றி யிரசித்தனை யென்றும். சிலபிரதி, கலகமாய்முயற்கொம்பினாற்குத்தியே களைத்திருவருமாண்டாரொன்றிருக்கின்றது, இதனையேற்கினுமேற்கலாம்.

(க - து.) சித்தப்பிராந்தி, செகத்பிராந்திதெளிந்தவன்மயங்கானென்பது. கடிக்கவெனற்பாலது கடித்தென்றாயது காலவழுவமைதி. காலதேசவஸ்துபரிச்சேதபுடைபெயர்ச்சி சற்றுமின்றிஞப்திமாத்திரமாக வொருதன்மைத்தாவிளங்குந்தன்பா லவாந்தரமாகத் தினைத்துணைபுடைபெயர்ச்சி போற்றோன்றிய ஞப்திஸ்புரிப்பே, மலடிமைந்தன். பரிபூரணநாட்டவிழப்பே, தானுவிற்புருடன். இழப்பென்றறியாமையே, வான்மலர். அதுதினைபாலிடமாமீக்குறலே, முடிசூடல். இதிலெய்ப்புற்றவிடத்தனைத்துமித்தையாகக்காண்டலே, கந்தர்ப்பநகர். தன்னைத்தா ஞரெனவிசாரித்தலே, சத்திகாரசிதத்தைவிலைபேசல். உபாதிசம்பந்தபாவநாசமெய்தலே, கலகமாதல். ஆங்கெழுந்தவிர்த்திஞானமே, கயிற்றரா. அஃதெரித்தலே, கடித்தல். ஸ்புரிப்பும், நாட்டவிழப்பும் நசித்தலே, இருவருமாளல். பந்தமுத்திகற்பிதமாகமுடிதலே, அலகையாதலெனக்கொள்க. பந்தமுத்திபகுட்பின்மையைக்காட்ட, அலகையென்றார். (அகூ)

௯௦ - கவி. அ - கை.

[பொய்யேகதையானவாறுபோலப் பொய்யேசெகமெனக்குறிப்பித்தமையின், இந்தப்பொய்யெனலையே மாயையென்றனரறிஞர், இந்தப்பொய்யேசெகமாதியாக விகாரித்துத்தோற்றலினனைத்துமாயாகாரியமெனப்படும், இதனிற்சித்தம்வையாதுபூரணமானசத்தாநிற்றியென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

மாயையென்பது பொய்யெனி லதுபெற்றவகையெலாம் பொய்யாமே,
தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வேறுண் டோ,
சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாரா மற்,
றூய சத்துசித் தானந்த பூரண சொருபமா யிருப்பா யே.

(இ - ள்.) மாயையென்பதுபொய்யெனி லதுபெற்றவகையெலாம்பொய்யாமே, எ - து. மாயையெனப்படுவதுபொய்யானால், அதுகாரணமாக வந்தவனைத்தும் பொய்யாகவேண்டுமே, எங்ஙனமெனில்:—தாயையன்றி மக்களுக்கொரு பிறவியுஞ்சாதியும்வேறுண்டோ, எ - து. மாதாவினதுபிறவியையுஞ்சாதியையுமன்றி யவள்பிள்ளைகளுக்கு வேறேபிறவியும்வேறேசாதியுமுளவோ:— சேயசொர்க்கமுநரகமுநன்மையுந்தீமையும்பாராமல், எ - து. நெடுந்தூரத்தனவாகிய சொர்க்காதிபதவிகளும், ரவரவாதிநரகங்களும்,

நன்கெனப்பட்டவையும், தீங்கெனப்பட்டவையு மிவையெனப்பகுத்துணர்தல் செய்யாது:—தூயசத்துசித்தானந்தபூரண சொருபமாயிருப்பாயே, எ - து. பரிசுத்தமாகின்றுள்ள சத்து சித்து ஆனந்த நித்திய பரிபூரணவிலக்கணமுடையதெதுவோ, அந்தச்சொருபமே நீயாதற்குமுயலுதி, எ - று.

யாமாசாமாயா, என்னுஞ்சுலோகப்பொருளை யுணர்த்தநிற்றலின், மாயையென்பதுபொய்யெனிலெனவும், சகஜீவபரஞ்சத்தியம்போற்றோற்றுவவேனுந் தமக்கெனச்சுயம்பொன்றின்றிச் சோதனையில்யாவுமறிவாமுடிவதென்னை? முடிதலினனைத்துமறிவின் கற்பிதமெனற்கையமென்னை? கற்பிதமாதலின் மாயாகாரியமெனப்படும். இத்திண்ணநோக்கி, அதுபெற்றவைகயெலாம் பொய்யாமேயெனவும், அனைத்துமாயாகாரியமெனற்குதாரணமாகத், தாயையன்றிமக்களுக்கொருபிறவியுஞ் சாதியும்வேறுண்டோவெனவும், அறிவைத்தவிரவயலொன்றுளதாகச் சோதனையிற்காணாமையின், சேயசொர்க்கமுநரகமு நன்மையுந்தீமையும்பாராமலெனவும், அநிர்தசடதுக்கவனித்தியகண்டவிலக்கணங்கட் கறிவெதிர்மறையாதலின், தூயசத்துசித்தானந்தபூரண சொருபமெனவும், நாமெதுவாதலோவென்னு மையந்தவிர்தியென்பார், சொருபமாயிருப்பாயேயெனவுங்கூறினார். அது பெற்றவைகயெலாமென்பது ; அம்மாயை காரணமாகவுதிக்கப்பெற்ற சகமாதிமூன்றுவகையாயுள்ளனவனைத்துமெனப் பொருள்கொள்ளினுமேற்கப்பெறும். தாயையன்றிமக்களுக்கொருபிறவியுஞ் சாதியும்வேறுண்டோவென்றவுதாரணம்; மாயையும், மாயாகாரியமுமபேதமெனற்கன்றே, இங்கேகூறக்கிடந்தது. திரிபதார்த்தமுமறிவுக்கயலென்னுமளவும், மாயாகாரியமெனப்படும். அறிவாயின், மாயையெனலெங்கே, அதன்காரியமெனலெங்கே, இன்றாதலின், மறுக்கற்பாற்றே.

(க - து.) யாவும்பொய்யாகமுடிதல்பற்றி யனைத்துமாயாகாரியமென்பது. இவற்றைமெய்யெனின் அஃதாரோற்பர். (௯௦)

கூக - கவி. அ - ௭கை.

[அனைத்துமாயாகாரியமாவதால் மித்தையாமேயெனின், எவரோற்பர், இதுகுற்றமாகமுடியாதா, என்ற வினாவை யிக்கவியிற்கூறுகின்றார்.]

**பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோ ருங்
கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநா லு
மங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய.மெனச்சொன் னொ
லெங்க ளையக னேயத னற்குற்ற மில்லையோ மொழியீ ரே.**

(இ-ள்.) பங்கையாசனன்முதற்பலதேவரும் பாருளபெரியோரும், எ - து. தாமரைமலரையிடமாகவுடைய பிரமன்முதலியபற்பலதேவரும் பூமியிலுள்ளசான்றோர்களும்: —கங்கையாதியாந்தீர்த்தமுந்தேசமுங் கால

முமறைநாலும், எ - து. கங்கைமுதலியபுண்ணியதீர்த்தங்களும் காஞ்சி முதலிய புண்ணியஸ்தலங்களும், சிவராத்திரி, ஏகாதசி, நவராத்திரி, நோன்பு, கார்த்திகை, முதலியபுண்ணியகாலங்களும், நான்குவேதங்களும்:— அங்கமாறுமந்திரங்களுந்தவங்களு மசத்தியமெனச்சொன்னால், எ - து. சந்தசு, கற்ப, வியாகரண, முதலியவாறங்கங்களும், ஏழுகோடியாகவிரிந்துள்ள மூலமந்திரங்களும், காமியம், நிட்காமியமென்னுந் தவங்களி லொவ்வொன்றனேக பேதங்களா நிற்றலிற் றவங்களும், ஆகியவிவையனைத்தும் பொய்யென்றுசொன்னால்:—எங்களுயகனேயதனாற் குற்றங்க ளில்லையோ மொழியீரே, எ - து. எமக்குக்குருவாகவெழுந்தருளியநாயகனே! பொய்யென்றுசொல்வதனாற்குற்றங்கள் சம்பவித்தற்கிடமில்லையோ ? இதனைவிளங்கத்தெரிவித்தருளும், எ - று.

பங்கயாசனன்முதலென்றதனாற் பிரமாவிஷ்ணுமுதலிய பஞ்சகர்த்தாக்களுமெனப்பெற்றாம். இக்கவியில் வந்திக்கத்தக்கவைகளையே மித்தையாகுமென்றெடுத்துக்காட்டலின், எடுத்துக்காட்டணி. பங்கயாசனன்முதற் பலதேவருமெனவும், குற்றமில்லையோவெனவும்பாடமுமுண்டு. ஏனைய காலங்களையும், தேசங்களையுமருத்தங்கூறின், வழுத்தற்குரியதன்றாம், வழுத்தற்குரியதாக்கின், இந்த அருத்தங்களெல்லாந்தாமேயமையும். ஏனையவுமிங்ஙனமே.

(க - து.) அனைத்துஞ்சத்தியமென்பவர் பலர். மித்தையென்பவரரியர். இதுயாவருக்குங் குற்றமாமுடியுமே யிதற்கென்செய்து மெனவினவினனென்பது. அனைத்துமித்தையெனல் தனக்குடன்பாடன்றெனக்காட்டினனென்க. (கக)

கூஉ - கவி. அ - கை.

[அனைத்தும்பொய்யெனல் குற்றமன்றென விக்கவியிற்கூறுகின்றார்.]

சொர்ப்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது பிழையா று, லற்ப மாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெனல் பிழையா மே, சொர்ப்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்லலா மெனின்மைந் தா, வற்ப மாயையிற் றோன்றிய சக மெலா மசத்திய மெனலா மே.

(இ - ள்.) சொற்பனந்தனிற்கண்டதைப் பொய்யென்றுசொல்வதுபிழையானால், எ - து. ஒருவன் தன்கனவிற்கண்டதைப்பிறனுக்குச்சொல்ல அவனதுபொய்யெனச்சொல்ல, கனவுகண்டவனதற்குடன்படாமல், நீ சொன்னது தப்பெனச்சொல்லலாகுமெனின்: — அற்பமாயையிற்றோன்றியசகங்களை யசத்தெனல்பிழையாமே, எ - து. இயல்பாகவேமின்னுவாயுள்ளமாயை காரணமாகவுதித்த வுலகங்களை வேதங்களும் மகான்களும் பொய்யெனக்

கூறுவதுதப்பாகலாமே: — சொற்பனந்தனிற்கண்டதைப் பொய்யென்று சொல்லலாமெனின், எ - து. தப்பென்றுசொல்வதுதகாது, கனவிற்கண்டதைப்பொய்யென்றே சொல்லலாமென்பையாயின்: — மைந்தாவற்பமாயையிற்றோன்றிய சகமெலாமசத்தியமெனலாமே, எ - து. ஞானபுத்திரா! இன்னதெனக்கணித்தற்கற்பமாயுள்ள மாயைகாரணமாகவுதித்த வெல்லாவுலகங்களையு மையமின்றிப்பொய்யெனக்கூறலாமே, எ - று.

நிலையன்றி யப்போதப்போது வெவ்வேறாகத்தோற்றுஞ் சொற்பனக்காட்சிபோல்வதா, என்றுமொருபடித்தாநிலையாயுள்ளவுலகம்? எனச்சங்கைவரின், மெய்யே, அந்தக்காட்சிக்கு மிந்தக்காட்சிக்குஞ்சுயம்புயாது? அதுவு மிதுவுமனோகற்பிதமன்றிவேறுயாது. கனவினனவும், நனவிற்கனவுமெங்கே? காட்சியுமிங்ஙனமன்றோ. இவ்வுலகம், சாக்கிராவஸ்தையுள்ளளவும். அவ்வுலகம், சொற்பனவஸ்தையுள்ளளவும். இவ்விரண்டவஸ்தையுமறிவானையன்றியில்லை. இவவிருவிதவுலகமும், இவ்விரண்டவஸ்தையன்றியில்லை. இவவிருவகையவஸ்தையும், இவ்விருவகையுலகமுஞ்சுழுத்தியிற்கண்டிலம். இம்மூன்றவஸ்தையுமறிவானையன்றி யொன்றிலொன்றின்றிச் சகடக்கால்போல் மாறுவதைத் தினந்தோறுங்காண்கின்றனம். இங்ஙனமாயநிலைகளையுன்னவுந்தெரியாது, பிறர்சொல்லினுஞ்செவிசாய்க்கவுந்தெரியாது, இவ்வளவு திறமையற்றவர்கள் கேட்குஞ்சங்கைக்குத்தரம்பஞ்சமோ, கூறுதும். "எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள்மெய்ப்பொருள் காண்பதறிவு" இந்நெறிச்செல்பவரோ? எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருளப்படிகாண்பதறிவு. இந்நெறிச்செல்பவரோ, சங்கைசெயப்புகுந்தோர். அந்நெறிச்செல்பவராயினிங்ஙனங்கேளார். இந்நெறிச்சேல்பவராயின்கேட்பர். எங்ஙனமெனில், அவர்கள்பொருளைப்பொருளாகவறிபவர்கள். இவர்கள்பொருளல்லவற்றைப்பொருளாகவறிபவர்கள். இவர்களுக்குவிடையென்சொல்லினு மவிசாரிக்குப்புத்திசொல்வதுபோலும். பேதவாதம், அபேதவாதமித்தகையதெனவறியார். கண்டதேகாட்சிகொண்டதேகோலமென்போர். புறமுகநாட்டமன்றி யகமுகநாட்டங்கேட்டுமறியாஞானிகள். இவரிடுஞ்சங்கை யிவர்போல்பவர்மதிப்பதன்றி யறிஞரெங்ஙனமதிப்பர். இது நிற்க.

(க - து.) உலகம்; சொப்பனம்போறலிற்குற்றமன்றென்பது. இவ்வுவமைதக்கதென்க. சொப்பனத்திற்சுகித்தாற்போலு மிவ்வுலகிற்சுகித்தல், துக்கமெனக்காணளவும். (கஉ)

கரு - கவி. அ - கை.

[இன்னுமதனையேவைப்புறுத்தப் பொய்யிஃதெனவும் மெய்யிஃதெனவு மிக்கவியிற்கூறுகின்றார்.]

பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியமொன்று புராணங்கூட்டிமோனன், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள்

விதித்தசாத் திரமுண்டோ, பொய்ய தேதெனி னுமரூ பங்களாம்
பூதமா கியமா யை, மெய்யதேதெனிற் சச்சிதா னந்தமா வியாபிக்கு
· மான்மா வே.

(இ-ள்.) பொய்யைமெய்யென்றமூடர் புண்ணியரென்றுபுராணங்கூப்பிடுமாறல், எ-து. செகசீவபரமென்னும்பொய்யைப் பொய்யென்றறியாதுமெய்யென்றறிந்தார் மூடரன்றோ, இவர்கள்செய்த அன்னதானமுதலிய முப்பத்திரண்டறங்களாலும், சிவகயிங்கிரியமுதலியதவசிரேஷ்டத்தாலும், பதினெண்புராணங்களு மிவர்களைப்புண்ணியவான்களென்று விடாதுகோஷிக்குமாறல்:—மெய்யைமெய்யென்றஞானிக்குக்குற்றங்கள் விதித்தசாத்திரமுண்டோ, எ - து. காரணகாரியரகிதமாயதியாதோ, அஃதன்றோ மெய்யெனத்தகுவது, அதனைச்சொல்லாவேலாது விசாரத்தெளிவாலேற்பதன்றோஞானம், அங்ஙனமாயஞானத்தையுடையாரன்றோ ஞானிகளெனப்படுவோர், இவர்களன்றோமெய்யைமெய்யென்றஞானிகள், இவர்கள்மெய்யைமெய்யென்றதனுலிவர்கள்மேற் குற்றம்விதித்தற்கிடமுண்டோ, இவர்கள்மேற்குற்றங்கள் விதித்தசாஸ்திரமேனுமுண்டோ, இல்லையே. இதுநிற்க. பொய்யாவதியாதெனவும், மெய்யாவதியாதெனவும், இனிக்கூறுதும் அதனைக்கேளுதி:—பொய்யதேதெனி னுமரூபங்களாம் பூதமாகியமாயை, எ-து. பொய்யெனப்படுவதியாதெனில், நாமரூபங்களாகவெங்கணும்விரிந்துள்ள பஞ்சபூதமெனப்படுவதாகியமாயையாம்:—மெய்யதேதெனிற்சச்சிதானந்தமா வியாபிக்குமான்மாவே, எ-து. மெய்யெனப்படுவதியாதெனில்சத்து, சித்து, ஆனந்தமென்னுமிலக்கணமே வடிவாயெங்கணுநிறைந்துள்ள வான்மாவாம், எ-று. ஏ - ஈற்றசை.

பிரத்தியட்சமாயுள்ளசகங்காரணமாகவன்றோ, அப்பிரத்தியட்சமான சீவேசுராளுண்டெனக்கோடல். விகாரத்தைச் சுயம்பெனக்காட்டாதுலகைக்காட்டில், ஏனையவிரண்டையுங்காட்டலாம். அங்ஙனமொருவருமின்றே. சொல்மாத்திரத்தானுந், தோற்றன்மாத்திரத்தானும், இம்மூன்றுஞ்சத்தென்றேற்பதைவிட மித்தையென்றேற்பது மனமலையாமைக்கும், சஞ்சலமணுகாமைக்கும், உள்ளக்களிப்பகலாமைக்கும், தானே தானுதற்கும், இடம்பெறுமன்றோ? இங்ஙனமாயபலனுக்கன்றோ, சற்கிருத்தியமாதிதொழில்புரிவது. இவற்றைப் புரிவதைவிட வுலகைமித்தையென்று மறப்பதுமாத்திரஞ்செய்யினிப்பயனனைத்தையு மிம்மையிற்றனேயனுபவிக்குதுமே, இதுவுள்ளங்கை நெல்லிக்கனிபோலாமே, இந்நன்மையறியாமைபற்றிப் பொய்யைமெய்யென்றமூடரெனவும், சகமாகத்தோற்றுவதும், அன்றாகத்தோற்றுவதும், அறிவன்றோ, இதுவன்றோமெய், இதனையன்றோமெய்யெனக்கோடல், கொண்டபடிகண்டவரன்றோமெய்ஞ்ஞானிகள், காணுதாரன்றோபோலிஞானியர். இவரைப்போலிஞானியரெனக்குறிக்கவன்றோ முன்னர்கண்டறிந்ததுஞானமென்றது. இவற்றையெல்லாங்கருதி மெய்யை மெய்யென்றஞானியென

வும், இவர்களைமூடர்களென்றற்கென்னையேதுளது, இன்றாதலின், ஞானிக்குக் குற்றங்கள்விதித்த சாஸ்திரமுண்டோவெனவுங் கூறினார். பொய்யாகியசகசிவபரங்களைப்பொய்யென்றது, குணவாகுபெயர். மெய்யாகிய ஞானத்தை மெய்யென்றதூஉமிங்ஙனமே. ஞானமன்றியில்லையாதலின், மெய்யதான்மாவென்றாரெனக்கொள்க. சச்சிதானந்தமான்மாவெனவே, அநர்தசடதுக்கம் பிறவெனக்கண்டாம். சச்சிதானந்தமேயநர்தசட துக்கமாகத்தோற்றலன்றி யயலன்றெனச்சோதனையாற்காணுதி. எங்ஙனமெனில்; ஒன்றுசொல்லுதும். ஓர்பாறையாகியகருங்கல்; உளதோ, இலதோ? உளதெனில், சுயம்பாதவேண்டும். சுயம்பெனில், உளிமுதலியகருவிகளாற்சேதிப்பதற் கின்றியாதிருக்கவேண்டும். இயையுமெனில், சுயம்பென்றிருக்கவேண்டும். இயைந்தபோதன்றோதூளாகக்காணும். இப்போதுசுயம்பென்னலாகாதாவெனின், அந்தத்தூள்களின்சையோகமே பாறையாகத்தோற்றலன்றி யிப்போதும்வேறாகக்கூறற்கிடமுளதோ, இன்றே, தூளையன்றிப்பாறையெங்கே, நமதுநாட்டந் தூளாகியக்கண், பாறையின்மையும், ஆகாவிடத்துண்மையுமாகக் காண்பதென்னை? நாம்சத்தாகக்காணில் சத்தாகவும், அசத்தாகக் காணிலசத்தாகவுந்தோற்றலின், நமதுசத்தைக்கொடுத்துப்பார்ப்பதனாற் சத்தாகத் தோற்றுவதேயன்றி வேறென்னையுள. இதுவேநீர்பெனற்கு மெய்யதேதெனில் சச்சிதானந்தமாவியாபிக்கு மான்மாவேயென்றார்.

(க-து) பொய்மெய்யிலக்கண மித்தகையதென வுணர்த்தியதென்பது. பொய்யைமெய்யெனுமளவுஞ் சென்மமே. அதாவது; உருவமாகவேனுமருவமாகவேனும் பாவித்தல். வஸ்து, இங்ஙனமன்றாதலானும், தன்னையகலாததைவிட்டுத் தனக்கயலாகக்கருதியெட்டத்தவம்புரியினும், அணித்தாதற்கியைவதன்றாமையானும், தன்னைத்தான் தேடிக்காணுதளவும், தான்தனக்கயலாகமுடியும், பரமுமயலாகமுடியுமெனக் கூறவேண்டுமோ? இதனாலன்றோ, அருள், மறை, ஆனந்தம், ஆனந்தாதீதம், இவைதனதனுபூதிவிலாசமெனக்காணாது, சிவானுபூதிவிலாசமெனப்பராக்காயினர். அங்குந்தானின்றோ? இன்றெனில், அங்ஙனமனுபவித்தல்தானன்றோ. அங்குந்தன்னையாயாமல்விட்டுவிட்டார்களே, இவர்களுக்கெங்கேதான்முடிவுண்டு, இல்லையே. பந்தத்திலயல்நாட்டம்போல முத்தியிலுமயனாட்டமென்னினிதுஞானமாகுமா? தன்னைவிட்டுவிட்டார்களே, மானிடசென்மத்தில்தானேகண்டுபிடிக்கவேண்டுமே. "இப்பிறவிதப்பினெப்பிறவிவாய்க்குமோ," இதற்கென்செய்தும் யாமறிகிலம். ஆன்மாவேயுண்மையென்றனரே யிந்நூலாசிரியர், இதையாவருமிசாரித்துத்தெளியாதது; செல்வக்கல்விமதர்ப்பு. பொய்யென்பதுமாயை. இதனைச்சத்தியென்றறைவகையாக்கி மெய்யென்றனர் மூடரெனினுமமையும். (கஈ)

௬௪ - கவி. அ - கை.

[அனைத்துமாயாகாரியமெனக்கூறி மித்தையென்றீர், அம்மாயா விலக்கணத்தையும், அதனதுபேதாபேதங்களையுந் தெரிவிக்கவேண்டுமென, அறுவகையாக வினாவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன், மாயை யென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே, மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வஸ்துவும் பொய்யாமே, மாயை யென்றமே கங்களுக் கொருசண்ட மாருத குருமூர்த் தி.

(இ-ள்.) மாயையென்பதேதுடையரா ரெப்படிவந்தது வருவானேன், எ-து. மாயையென்பதியாது, அதனைச்சுதந்தரமாகவுடையார்யாவர், அது வந்தவகையெங்ஙனம், வருதற்கேதென்னை:—மாயையென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவுமிரண்டாமே, எ-து. மாயையென்பது பிரமவஸ்துவி னின்றும்வேறாயதெனின், அப்போதுவஸ்து, இரண்டெனக்கொள்ளப்படுவதாமே:—மாயையென்பதும் பிரமமுமொன்றெனின் வஸ்துவும்பொய்யாமே, எ - து. ஆயின்மாயையென்பதும், பிரமவஸ்துவுமொன்றெனக் கூறலாமேயெனின், மாயையைப்போலப்பிரமவஸ்துவும் பொய்யெனக்கொள்ளப்படுவதாமே:—மாயையென்றமேகங்களுக் கொருசண்டமாருதகுருமூர்த்தி, எ - து. மாயையென்றமேகங்களுக்கெல்லா மோர்பிரசண்டமாருதம் போன்று விளங்குபவராகியகுருமூர்த்தியே, எ-று.

(க-து.) இங்ஙனமாயையைப்பற்றி யறுவகையாகவினாவினனென்பது. அறிவேபிரமம், அறியாமையேமாயை. அறிவையன்றியறியாமைவேறாயின், பிரமத்தையன்றிமாயைவேறாகலாம். யாதுகாரணகாரியங்கட்கு முடன்படாமை யினையதென்றுணர்தல், அறிவு. உணராமை, அறியாமை. யாதுண்மையையுணர்கின்றதோ, அதுவேயுணராததால், அறிவேயறியாமையாயிற்று. அறிவையன்றித்தெளிவும், மூடமும்வேறின்மையின், இவ்விருவினைக்கும் வினைமுதல், அறிவாயிற்று. அறிவாகவே, இரண்டெனப்படாது. ஒன்றெனின், அறிவையன்றியறியாமையிருக்கவேண்டும். இன்றாதலின் பிரமத்துக் கென்னுது, பிரமத்தினென்றார். மாயையென்பதும் பிரமமுமொன்றெனில் வஸ்துவும்பொய்யாமேயென்றது; இன்மைப்பொருளுக்கேயியைதற்பாலது மாயையாதலி னதனோடுபிரமத்தையுஞ்சேர்த்தேகமெனின், அதற்குரியவின்மைத்தன்மை யிதற்குமெய்துமெனற்கென்க. சண்டமாருதம், பெருங்காற்று. மாயையென்றமேகங்களென்பது, உருவகம். சண்டமாருதகுருமூர்த்தியென்பது, உவமைத்தொகை.

(க - து.) மாயையைப்பற்றி யறுவகையாகவினாவினனென்பது. இது தொகுத்துச்சுட்டலென்னுமுத்தி. (௬௪)

கரு - கவி. அ - கை.

[மேலறுவகைவினாவினுள், இக்கவியினான்குவகைவினாவுக் குத்தரங்கூறுகின்றார்.]

அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சியவடி வா கு, மிதுத னக்குள துடலியா னுலகுமெய் யெனுமவ ருடை யோர் கள், கதையி லாதபொய் வந்ததிப் படியென்று கண்டபே ரிலை மைந் தா, விதன மாயையேன் வந்ததென் றாற்புத்தி விசாரமற் றத னா லே.

(இ-ள்.) அதனையின்னதென் றுரைத்திடப்படாமையா லவாச்சியவடி வாகும், எ - து. அம்மாயையித்தகையதென் றியாவராலு மளவைகளாலெ ட்டிச் சொல்லப்படாததனா லஃதவாச்சியவடிவமெனப்படுவதாம்:—இது தனக்குளது டலியானுலகுமெய் யெனுமவருடையோர்கள், எ - து. இதுதன க்குச்சொந்தம், இவ்வுடலேயான், இவ்வுலகஞ்சத்தியம், என்னுந்திடஞ்ஞா னமுடையாரெவரோ, அவர்களேயம்மாயையுடையோர்கள் :— கதையிலாத பொய்வந்ததிப்படியென்று கண்டபேரிலைமைந்தா, எ - து. ஞானபுத்திரா! கதைகட்டிச்சொல்வதற்கு வழியொன்றுமில்லாத பொய்யாகியமாயை யின் னவிதமாக வந்ததென்று கண்டவர்களொருவருமில்லையே:—விதனமாயை யேன்வந்ததென்றாற் புத்திவிசாரமற்றதனாலே, எ - து. விதனத்துக்கேயிட மாயுள்ள மாயையானது, ஏன்வந்ததென்றால், ஞானவிசாரணைசெய்யும் விடா முயற்சி சிறிதுமில்லாததினால், எ-று.

அவாச்சியவடிவம், தனக்கெனச்சொரூபமொன் றில்லாமை. இதுதன க்குளது, மமகாரம். உடலியான், அகங்காரம். பொய்யை மாயையென் றது, காரணவாகுபெயர். தாய்தந்தைவந்தவரிசைவகை யாதிதொடங்கிச் சொல்லுதற்கெட்டாமையால், கதையிலாதபொய்யெனவும், உலகைமெய்யெ னநம்பினோ ருயிர்விடுங்கால், உலகைவிடுதற்கிட்டஞ்சற்றுமின் றிவதைவராத லால், விதனமாயையெனவுங்கூறினா[illegible] புத்திவிசாரமறுதல், தன்னைத்தானு ள்ளவாறாராய்தலின்மை. மாயை[illegible]க்கதைகட்டிச்சொல்பவரும், அதனைமெய் யெனக்கேட்பவரும், அவிவேகி[illegible]ங்ஙனமெனில், தன்னைத்தானுள்ளவா றெட்டவகையறியாராதலினென்க.

(க - து.) நால்வகைவினாவுக்கும், நால்வகைவிடைநேரேகூறினாரென்பது. இதுதனக்குளவுடலினா னுலகுமெய்யெனப்பாடமுமுண்டு. அறுவகைவினா விருக்க, ஐவகைவினாவெனவும், அறுவகைவிடையிருக்க, ஐவகைவிடையெ னவுங்கொண் டுரைகூறுவதென்சிறப்போயாமறிகிலம். இதுநிற்க. இவ்வி னாவிடைகள், நிரனிறைப்பொருள்கோள். ஏது, ஆர், எப்படிவந்தது, வரு வதேன், இரண்டாமே, பொய்யாமே? இவைவினாவோ, அன்றோ? வினா வெனின், ஆறுதற்குத்தடையென்னே. அவாச்சியவடிவாகும், உடையோர்

கள, கண்டபேரில்லை, புத்திவிசாரமற்றதனால் வந்தது. இவை விடையோ, வினவோ? விடையெனின், நான்காதற்குத்தடையென்னை. வினவிடையெனலறியார்போலும். (கஞ)

௩௬௬ - கவி. அ - கை.

[வஸ்துவுமிரண்டாமேயென்னு மைந்தாம்வினவிற்குவிடையிரண்டுகவியினுங்கூறப்புகுந்தார், இக்கவியில், பிரமத்திற்கும், கிரியைகட்கும், இடையிலோர்சத்தியுண்டெனக்கூறுகின்றார்.]

அருவ மாகுமா யாவிவித் தைகள்விளை யாடுமுன் றெரியா வே
யுருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியா கும்
பிரம சத்திக ளனந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடா தே
பரவு பூதங்கள் கண்டனு மானத்தாற் பலருக்கும் வெளியா மே.

(இ - ள்.) அருவமாகுமாயாவி வித்தைகள் விளையாடுமுன் றெரியாவே, எ - து. இந்திரசாலஞ்செய்வோன், தனதுவினோதங்காட்ட விளையாடுதற்கு முன்னரோ, ஒருவர்கண்ணுக்கும்புலப்படா தருவமாநின்றுள்ள தனதுவித்தைகள், எங்ஙனங்காணப்படும், காணப்படாவே:—உருவமாம்பலகந்தர்ப்பசேனையா யுதித்தபின்வெளியாகும், எ-து. அவை பிரத்தியட்சத்திற் குருவமாக் காண்டற்குரிய பற்பலவிசித்திரகந்தர்ப்ப சேனைகளாய்த்தோன்றியபின் யாவருக்குங்காணப்படும் (அதுபோல):—பிரமசத்திகளனந்தமாமதைக்கண்டுபிடித்திடல்கூடாதே, எ-து. பிரமத்திற்குரியசத்திபேதங்களனந்தவிதமாம்,அதனைக்கண்டுபிடித்தல் யாவராலுங்கூடாது. (மற்றெங்ஙனமெனின்);—பரவுபூதங்கள்கண்டனுமானத்தாற் பலருக்கும்வெளியாமே, எ-து. எங்குமாவியாபித்துள்ளபஞ்சபூதங்களைக்கண்டு, அதுகாரணமாகவனுமானிக்கு மனுமானத்தினல்சகலருக்கு மிருப்பதாகவிளங்கும், எ-று.

கண்டனுமிதித்தலாவெனப்பாடமுமுண்டு. அருவமாகும்வித்தைகளெனமுடிக்க. மாயாவி, பிரமம். வித்தைகள், சத்திகள். கந்தர்ப்பசேனை, பூதங்கள். இவ்வுபமான வுபமேயங்கள். அனுமானம், பலருக்குமென்னு மிவ்விருமொழிகளையு மீரிடத்துமொட்டுக. மாயாவிவித்தைகள் கந்தர்ப்பசேனைகளா லனுமானித்தல்போன்று, பிரமசத்திகள் பரவுபூதங்களா லனுமானிக்கப்படுமெனவுணர்க. பிரமசத்திகளனந்தமென்றது; இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி, ஆதிசத்தி, பராசத்தியெனவைந்தாம். இவற்றுளொவ்வொன்று மெண்ணிறந்தபேதங்களாதல்பற்றியென்க. இவைசோதனையாற்றெரியலாம்; அநந்தமென்பது தொகையொருமைபற்றி, அதையென்றார்.

(க-து.) இவ்வுபமானவுபமேயத்தால் சத்திகளிருப்பை யவற்றின்காரியங்களாலறிய லாமென்பது. அதிருக்குமமான வித்தைகளெல்லாம், அறிவு

தட்பமேலிடமேலிடக் கண்டுகொண்டேவருவதை யிப்போதுபிரத்தியட்சத்திற்காணலாம். (௧௬)

## ௧௭ - கவி. அ - கை.

[வித்தைகள்போலச் சத்திகள்காரியகாரணமாயிருந்தும், ஆதாரவாதேயங்காணப்படுமாறுபோலத் தாங்காணப்படாவென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

காரி யங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமா யம்
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்கா ணும்
வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோ லப்
பேரி யற்பிர மத்துக்கு மூலகுக்கும் பிறிதுசத் திகளுண் டே.

(இ-ள்.) காரியங்களுஞ்சத்தியாதாரமுங் காணுமற்றதுமாயம், எ-து. சத்திக்குக்காரியங்களும், காரணமும், எவர்க்குங்காணப்படும். ஏனையசத்தியோ, சற்றுங்காணப்படாது:—(எங்ஙனமெனில்,)பாரினின்றமாயாவியுஞ்சேனையும் பார்ப்பவர்கண்காணும், எ-து. பூமியில்வித்தைகளை விளையாடிக்கொண்டிருந்த, இந்திரசாலஞ்செய்வோனும், அவ்விளையாட்டாற் காணப்படுஞ்சேனைகளும், வேடிக்கைப்பார்க்கப்புறப்பட்டவர்க்கு நேரோகாணப்படும்:—வீரியந்திகழ்வித்தையாயினசத்தி வெளிப்படாததுபோல, எ-து. இளையாதவீரத்துவத்தால் விளங்குகின்றவித்தையாகிய சத்தியானது காணப்படாது, எங்ஙனமோ வதுபோல:—பேரியற்பிரமத்துக்குமூலகுக்கும்பிறிதுசத்திகளுண்டே, எ-து. மிக்கவிலக்கணங்களையே யியல்பாகவுடைய பிரமத்துக்கும், உலகத்துக்குமிடையே சிலசத்திகள்பிறிதாகவிருக்கின்றனவே, அவைகாணப்படுமோ, காணப்படாவே, எ-று.

சத்திக்காதாரம், பிரமம், ஆதேயம், உலகம். மாயாசத்தியைத்தவிர வுலகிருக்குமாயின், பிரமத்தைத்தவிர மாயாசத்தியிருக்கலாம். எங்ஙனம்; அறியாமையன்றியுலகிருக்குமாயின், அறிவையன்றி யறியாமையிருக்கலாம். இல்லையெனின், வஸ்துவுமிரண்டாமேயென்கூடாது. மாயாவியும், சாலக்காட்சியும் பிரத்தியட்சம். வித்தை யப்பிரத்தியட்சம். அதுபோல, பிரமமும், உலகமும்பிரத்தியட்சம். மாயாசத்தியப்பிரத்தியட்சம். சத்தியாசாரமுமென்பாடமுமுண்டு. இங்கேயாசாரமுமென்பதுபொருந்தாது.

(க-து.) மாயாசத்தி பிரமத்தைத்தவிர வேறின்மையா லிரண்டுவஸ்துவாகாவென்பது. பிரமப்பிரதிபலனமே சத்தியெனவறிக. (௧௭)

## ௧௮ - கவி அ - கை.

[ஆறும்விளைவிற்குவிடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயா வி
வித்தை காட்டிடு விசித்திர சாலம்போல் வித்துவா னும்போ லப்
புத்தி மைக்தனே சத்திமா னுமிய பூரண வான்மா வாம்
வத்து நிர்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே.

(இ-ள்.) சத்திசத்தனைத்தவிரவேறன்றுகாண், எ-து. சத்தியானது சத்தனைத்தவிர வேறோர்முதலன்றெனக்காணுதி:—சத்தனுமாயாவித்தைகாட்டிய விந்திரசாலம்போய்வித்துவானும்போல, எ-து. சத்தனுகிய மாயாவித்தை செய்வோன் தனதுவித்தையினுல்காட்டியஇந்திரசாலவினேதைக் காட்சிகணீங்கியவிடத்தும் நீங்காதுநின்றேன் வித்துவான்மாத்திரமாகுமாறுபோல:—புத்திமைந்தனே சத்திமானுகிய பூரணவான்மாவாம் வத்துநிர்ணயஞ்சொன்னதிட்டாந்தத்தின்வழிகண்டுதெளிவாயே, எ-து. அறிவுள்ளபுத்திரா ! சத்திமானெனப்படும் பரிபூரணமாகிநிறைந்துள்ள ஆத்மவஸ்துநிச்சயத்தை முன்சொன்னதிஷ்டாந்தமுறையைக்கண்டு தெளிந்துகொள்ளுதி, எ-று.

இந்திரசாலம்; வித்தையைத்தவிர வில்லாவாறுபோல, வித்தையும்;வித்துவானைத்தவிரவேறின்றும், எங்ஙனமோவதுபோல, உலகமும்; மாயாசத்தியைத்தவிரவில்லாவாறுபோல,மாயாசத்தியும்; சத்தனுகியவான்மாவைத்தவிர வேறின்றும். வேறின்றுகவே, இருப்பது, ஆன்மாமாத்திரமென்றுயிற்று. ஆகவே,வித்தையிருந்தபோதுமில்லாதபோதும் வித்துவானிருக்குமாறுபோன்று, மாயாசத்தியிருந்தபோதுமில்லாதபோது மாத்மாவிருக்குமெனப் பெற்றும். பெறவே, வித்தை; யாபாசதர்மம்பெற்றுற்போல, வித்துவானுபாசதர்மம்பெற்றுனல்லன். அதுபோல, மாயாசத்தி யாபாசதர்மம்பெற்றுற்போலச், சத்தனுகியவான்மா; வாபாசதர்மம் பெருவாறுகண்டாம். காணவே, மாயையைப்போல, ஆன்மாபொய்யன்றெனத்தெளிந்தாம்.

(க-து.) வஸ்து; மாயையைப்போலப்பொய்யன்றென்பது. போகவென்றது, போயென்றுயது காலமயக்கம். ஆன்மாவின் வஸ்துவெனின், கிழமைப்பொருளாதற்கிடமின்று. ஆதலின், ஆன்மாவாம்வஸ்துவென்றும். சிலபிறிதிகள், இந்திரசாலம்பொய்வித்துவான்மெய்போல, என்றிருக்கின்றன, அங்ஙனம்பொருள்கொள்ளினுமமையும். (கஅ)

### கக - கவி. அ - கை.

[முன்னர்மாயையென்பது பொய்யெனக்கூறிப் பின்னர்பிறிது சத்திகளுண்டேயெனக் கூறுவதென்னேகொலோவென்றவினுவிற்குத்தர மிரண்டுகவியானுங்கூறப்புகுந்தா ரிக்கவியிலுண்டென்றேற்காவிடல் சராசரங்கட்குச்சுபாவங்கள் வேறுமேயெனக் கூறுகின்றார்.]

இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக்கேட் கிற்
புல்லை யாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக்காய்ப் பனபா றாய்
நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி கடந்திட திருந்தக் கால்
தொல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறு மே.

(இ-ள்.) இல்லையாகியசத்தியையுண்டென்ப தெப்படியெனக்கேட்கில், எ-து. மித்தையாகியமாயாசத்தியை மீண்டுமுண்டென்ப தெங்ஙனங்கூடுமெனக் கேட்பையாயின்:—புல்லையாதியாமசேதனப்பொருளெலாம் பூத்துக்காய்ப்பனபாராய், எ-து. புல்லையாதியாகவுடைய சடப்பொருள்களனைத்தும் புட்பித்துக்காய்க்கின்றவைகளைக்காணுதி:—நல்லையாமகனேயதிற் சிற்சத்தி நடந்திடாதிருந்தக்கால், எ-து. சற்புத்திரா! ஒவ்வொன்றிலுஞ் சிற்சத்தியானது வியாபியாதிருக்குமாயின்:—தொல்லையாய்வருஞ் சராசரவுயிர்க்கெலாஞ்சுபாவங்கள்வேறாமே, எ-து. தொன்றுதொட்டுவிடாதுவருகின்ற சராசரமாநின்றுள்ளவுயிர்களுக்கெல்லாஞ் சுபாவங்கள் வெவ்வேறாமுடியுமே, எ-று.

சேதனம், அறிவு. அசேதனம், அறியாமை. இங்கேநடக்குதல், வியாபித்தல். சரம், அசைவு. அசரம், அசையாமை. சராசரவுயிர்களி லெதெதற்கேதேதியல்போ, அங்ஙனமங்ஙனமாவதுசிற்சத்தியின்தன்மையெனக்காண்க. சீர்மிகுமாதலினதிலதிலெனவடுக்காதுநின்றனர்.

(க-து.) சமஸ்தமுஞ் சிற்சத்தியை யாதாரமாகக்கோடலின்தத்தஞ்சுபாவத்தினின்று மாறாதென்பது. அனைத்துஞ்சிற்சத்திவிலாசமாதலின் சிற்சத்தியுண்டெனப்பெறும். சத்தியுண்டெனல் பகிர்முகத்தாலென்க. (௬௬)

க00 - கவி. அ - கை.

[அனைத்துஞ்சிற்சத்திநியமத்தினால் தத்தமியல்பைவிட்டு மாறாததை யிக்கவியிற்கூறுகின்றார்.]

கருப்பை முட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்தசித் திரம்பா ரா
யருப்ப மாஞ்சத்தி நியமமில் லாவிடி லரசிலா நகர்போலாம்
நெருப்பு நீர்களாங் கசப்புமே மதுரமா நீசனு மறையோதும்
பொருப்பு மேகமாங் கடலெலா மண்களாம் புவனமிப் படிபோ மே.

(இ-ள்.) கருப்பைமுட்டையுட்பறவைகள் பலநிறங்கலந்தசித்திரம்பாராய், எ-து. கருப்பையிலிருக்குமுட்டைக்குள் பட்சிகள்பலநிறங்கலந்திருக்கின்ற விநோதசித்திரங்களாயிருப்பதைக்காணுதி:—அருப்பமாஞ்சத்திநியமமில்லாவிடி லரசிலாநகர்போலாம், எ-து. உணர்தற்கரிதாகியசிற்சத்தியினியமமில்லாவிட்டால்; அரசனில்லாதபட்டணம்போல வொழுங்கற்றநிலையினதாகமுடியும்:—நெருப்புநீர்களாங்கசப்புமேமதுரமா நீசனுமறையோதும், எ - து. (எங்ஙனமெனில்), நெருப்புசலமாகவும், கசப்புத்தித்திப்பாகவும், சண்டாளன் வேதாத்தியயனஞ் செய்வதாகவுமுடியும்:—பொருப்புமேகமாங்கடலெலாமண்களாம் புவனமிப்படிபோமே, எ - து. மலைகள் மேகங்களாகவும், சமுத்திரமுழுதும்மண்களாகவும், இதுபோலப் பூமிமுழுவதுமிங்ஙனமாகவுமுடியுமே, எ - று.

அருப்பம், துக்கமெனினுமமையும். நியமம், ஒழுங்கு. பறவைக்கிடம், முட்டை. முட்டைக்கிடம், கருப்பை. எனவே, கருப்பையிலிருந்துமுட்டையும், முட்டையிலிருந்துபறவையுமுண்டாதலால், கருப்பைமுட்டையுட்பறவைகளென்றார்.

(க-து.) அனைத்துமரசிலாநகர்போலகிலைமாறுமென்பது. சத்தி; அகமுகத்திற்சிற்சத்தியாகவும், புறமுகத்தில்மாயாசத்தியாகவுமிருக்கும். (௪௦௦)

௪௦௧ - கவி. அ - கை.

[எல்லாவிபரீதங்கட்குமாதாரமாதலி னிந்தசத்தியைநீக்குமாறெங்ஙனம். சத்தனுக்கபேதமெனின், ஏகமாகக்காண்பதெங்ஙனம். அரிதெனின், நிரதிசயானந்தமாவதெங்ஙனம். எனமூன்றுவினாவையு மிக்கவியிற்கூறுகின்றார்.]

ஆர்க்குங் காணவு மறியவும் படாதென்று மவாச்சிய வடிவென் றுஞ், சேர்க்கு நாமரூ பப்பயிர் வித்தென் றுஞ் செப்பிய சிற்சத்தி, பேர்க்கு மாறெங்ஙன் பிறித்திடப் படாதெனிற் பிரமபா வனையொன் றுப், பார்க்கு மாறெங்ஙன் முத்தியா குவதெங்ஙன் பரமசற் குருமூர்த் தி.

(இ-ள்) ஆர்க்குங்காணவுமறியவும்படாதென்று மவாச்சியவடிவென்றும், எ-து. அரியராதிகட்குமேனையோரெவர்க்குங் கண்ணாற்காணவும், மன்தாலறியவும்படாததென்றும், நிர்வசனரூபமென்றும்:—சேர்க்குநாமரூபப்பயிர்வித்தென்றுஞ் செப்பியசிற்சத்தி, எ-து. விபரீதத்துக்காளாகச்சேர்கின்ற நாமரூபமென்னும்பயிர்களுக்குவிதையென்றுஞ் சொன்னசிற்சத்தியை:—பேர்க்குமாறெங்ஙன் பிறித்திடப்படாதெனிற் பிரமபாவனையொன்றுப்பார்க்குமாறெங்ஙன், எ - து. நீக்குமாறெங்ஙனம், வேறுபடுத்தக்கூடாதாயின், பிரமபாவனையேகமாகப் பார்க்குமாறெங்ஙனம்:—முத்தியாகுவதெங்ஙன் பரமசற்குருமூர்த்தி, எ-து. முத்தியடைவதெங்ஙனம், மேலான சற்குருமூர்த்தியே, எ-று.

அறிவையன்றியறியாமையோர்முதலன்று. அறியாமையே சிற்சத்தியென்னுமிடத்து, காணவும்படாதென்றும், அறியவும்படாதென்றும், அவாச்சியவடிவென்றும், நாமரூபப்பயிர்வித்தென்றும், கூறச் சிற்சத்தியேற்கலாமே, தடையென்னையுள, இதுபற்றியிங்ஙனங்கூறினார்.

(க-து.) மாணாக்கனுக்குறித்தலின் வினையவென்பது. சித்தில்லாவிடற் சித்தினதுகற்பிதமெங்கே: உண்டெனில், தெரிவிக்கலாம். கல், மரம், முதலியவைகளெனில், சத்தினதுபிராதிபாலிகமன்றி வேறாகக்கண்டிலமே. எங்ஙனமெனின், சோதனையினியதிகளையப்பட்டவையனைத்து மன்னியமாகாததிவாகமுடிவதென்னை? முடிவதனுறசத்தாகுமாவெனின், சத்தையன்றியசக்கெனவெங்கே. இன்றாகலாலனைத்தும் சிற்சத்திியமேயென்றறியா

ளுதலின் வினாவினனென்க. அறிவினா, அறியாவினா, என்பவற்றுளிஃதறி யாவினா. (௧0௧)

௧0௨ - கவி. அ - கை.

[முதலிரண்டுவினாவுக்கு மிக்கவியினுத்தரங்கூறுகின்றார்.]

**வாயுஸ் தம்பனஞ் சலஸ் தம்பன் மணிமந்திர மருந்தா லே**
**தேயுஸ் தம்பனஞ் செய்திடி லதிலதிற் சிறந்தசத் திகளெங் கே**
**நீயச் சச்சிதா னந்தமாய் வேறொன்று நினைந்திடா திருப்பா யேல்**
**மாயைச் சத்திபோ மீதன்றி மந்திர மறைகளிற்காணோ மே.**

(இ-ள்.) வாயுஸ்தம்பனஞ்சலஸ்தம்பன மணிமந்திரமருந்தாலே தேயுஸ் தம்பனஞ்செய்திடி லதிலதிற்சிறந்தசத்திகளெங்கே, எ-து. மணி, மந்திரம், மருந்து, என்னுமிம்மூன்றானும்; வாயுஸ்தம்பனம், சலஸ்தம்பனம், தேயுஸ் தம்பனஞ்செய்வமாயின், அவவவற்றிற்குரியமுக்கியமாயுள்ள, சலனம், நெ கிழ்ச்சி, உட்டணமென்னுமிம்மூன்றுசத்திகளும், எங்ஙனே, இப்போதுகண் டிலமே. (அதுபோல) :—நீயச்சச்சிதானந்தமாய்வேறொன்று நினைந்திடா திருப்பாயேல், எ - து. நீயந்தச்சச்சிதானந்தசொரூபமாகி யிவற்றிற்குமா றாக வேறொன்றும் நினையாதிருப்பையாயின்:—மாயைச்சத்திபோமீதன்றி மந்திரமறைகளிற்காணோமே, எ - து. மாயாசத்தியான துன்னையன்றியில் லாமற்போம், இல்லாமற்போவதற்குபாய மிங்ஙனம்புரிவதன்றி வேறேமந் திரமுளதாக வேதங்களிற்கண்டிலமே, எ-று.

ஸ்தம்பனம், ஸ்தம்பித்தல். அதாவது; சற்றடங்கிநிற்றல். சிறந்தசத் திகளென்றதினால், சலனம், நெகிழ்ச்சி, உட்டணமெனக்கொண்டாம். எங் கேயென்பதனால், இப்போதெனவருவித்தாம். எங்கேயென்பது, எவ்விடம், இல்லையென்னும்பொருள்தரற்பாலதாதலின், பலபொருளொருசொல். இங் கேயில்லையென்னும்பொருடரநின்றது. நீயிரு மாயைச்சத்திபோம், என விரண்டெழுவா யிரண்டுபயனிலைகளாதலால், இரண்டுவிடையெனக்கொ ள்க. மாயச்சத்திபோமென்பாருமுளர். நீயச்சச்சிதானந்தமாயிருத்தலே, பிரமபாவனையொன்றாப் பார்த்தலுக்கு விடையும்; வேறொன்றும் நினைந் திடாதிருத்தலே, சிற்சத்திசேர்த்தலுக்கு விடையுமெனக்கொள்க. சத்து, சித்து, ஆனந்தம். இவற்றுள்; சத்து, நான். சித்து, சுயஞ்சோதி. தானே சுயஞ்சோதியாகவிளங்கல், சத்தேசித்தாகும். சுயஞ்சோதியேதானாகவிள ங்கல், சித்தேசத்தாகும். இங்ஙனமாயவொருமையே துக்கநிவிர்த்தியாத லால், ஆனந்தமாகும். இதுதான்சச்சிதானந்தமாயிருத்தல். இங்ஙனமிடை விடாதுநிற்கில், அநர்த, சட, துக்கங், தானேயகலும். இங்ஙனமகலல், வே றொன்றும்நினைந்திடாதிருத்தலின்பயன். அவ்விரண்டுவினாக்களுக்கும், இவ் விரண்டும்விடை.

(கு-து) மேற்கூறியவினாக்களிரண்டிற்கும் விடையிரண்டுந்தந்தனரென் பது. அனுபவமில்லா ரிவ்விடைகாண்டலரிது. (௧0௨)

கO௬ - கவி. அ - கை.

[மூன்றும்வினாவுக்குவிடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

**மேவு மண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவே ண்டி, நாவினான்மண்ணைக் கடமென்ப ரக்கட நசிப்பதும் நாவா லே, பாவு நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தஞ், சீவ பே தகற் பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே.**

(இ - ள்.) மேவுமண்ணிலவ்வியத்தமே வியத்தமாம்விவகரித்திடவே ண்டி நாவினான்மண்ணைக்கடமென்பர், எ-து. கடசத்திதங்கியமண்ணினிட த்தில் அக்கடத்தோற்றமெழுதற்குரிய வினைநிகழ்தற்குமுன்ன ரத்தோற்ற மெழாதுமறைபட்டுநிற்கும், அங்ஙனமறைபட்டுநிற்றலே வினைநிகழாநிற் புழி வெளிப்பட்டுக்காணும், அங்ஙனம்வெளிப்பட்டுக்காண்டலேயே யன்னா பானுதிபாகவிவகாரநிமித்தம், சொல்லாலேமண்மயவடிவைக் கடமெனவு லகர்வழங்காநிற்பர்:—அக்கடநசிப்பதும்நாவாலே பாவுநாமரூபங்களைமறந்து மண்பார்ப்பதேபரமார்த்தம், எ - து. அந்தக்கடமுடைந்ததென்பதுஞ்சொ ல்லாலேயே, முன்னுமண்ணேபின்னுமண்ணே, இப்போதும்பானைசட்டிகு டுவைசால் முதலியவாயெங்கணும் வழங்கப்பட்டுள்ள நாமரூபங்களைச் சற்று நினையாதுமறந்து மண்ணாகப்பார்ப்பதேபரமார்த்தமாம், (அதுபோல):—சீவ பேதகற்பிதங்களைமறந்து நீசின்மயமாவாயே, எ-து. சீவபேதமாநின்றுள்ள கற்பிதவடிவங்களனைத்தையு மறந்து, நீசின்மயமாக விளங்குதி, எ-று.

அவ்வியத்தம், வெளிப்படாமை. வியத்தம், வெளிப்படல். பித்தளை முதலியவற்றாலாய பாண்டங்களைக்கூறாதது; செல்வம்வந்துழியன்றி நிரந் தரமன்றாமையினென்க. விவகரிப்பான்வேண்டிக் கடமெனல், விவகாரிக சத்து. நான்குகாலத்தும் மண்ணையன்றிக் கடமெனற்குப் பொருள் தோற் றன்மாத்திரமாதலால், அதனை மண்ணாகக்காண்டல், பாரமார்த்திகசத்து. மண்ணையன்றிக்கடமென வோர்முதலன்றென வுணராமல் சுயம்பெனக்கரு திக்கடமெனக்கூறல், மூடம். கடமெனக்காணாது மண்ணெனக்காண்கை, விவேகம். சொல்லாலென்னாது நாவினாலென்றது; நாவினாலாயதுசொல் லாதலா லிதுதுணைக்கருவியெனப்படும், ஆதலின்கருவியாகுபெயர். இவ் வுவமைபோல; அறிவைச், சீவனீசன்செகத்தெனக் கற்பனையாகக்கொள் ளும் விபரீதங்களை மெய்யெனக்கோடல், விவகாரிகசத்து. இப்பேதங்களை யெல்லாம்விசாரத்தால்மறந்து, அறிவாகக் காண்டல், பாரமார்த்திகசத் து. சீவபேதமென்பது; சீவனுதியாகப்பேதிக்கும்பேதம். அதாவது; சீவே ஸ்வரசகம். இம்மூன்றுமறிவின்கற்பிதமன்றிச் சுயம்பல்லாமையின், சீவ பேதகற்பிதங்க ளென்றார். தெளிந்தவிடத் தனைத்து மறிவாக முடிதலின், நீசின்மயமாவாயேயெனப்பட்டதென்க. கடமெனினுங் குடமெனினுமொக் கும். பரமார்த்தம், உண்மை. எனவே, விவகாரிகம், கற்பிதம். என்று

யிற்று. அவவியத்தம், வியத்தம், எனக்கூறவந்தது; மண்ணையன்றிக்கடமின்றெனற்கு. அதுபோல, அனைத்து மறிவையன்றி யின்றெனற்கென்க. கடாதிகளை மண்ணைப்பார்ப்பதுபோல, சகமாதிதிரிபதார்த்தங்களையுஞ் சின்மாத்திரமாப்பார்க்கி லன்னியமின்றித் தானாய்விளங்கும், இங்ஙனம்விளங்குதலேமுத்தியாதலால், இதுமூன்றாம்வினாவிற்கு விடையெனக்கொள்க.

(க-து.) அன்னியமயமாகாமற் சின்மயமாகுதியென்பது. கடமாதற்குரியதேமண், ஏனையவைமண்ணன்றெனற்கு, மேவுமண்ணெனவடைகொடுத்ததென்க. இதுமுடிவிடங்கூறலென்னுமுத்தி. (கoரு)

கoசா - கவி· அ - கை.

[கிரிசியமெனக்கில்லையாயினுந்தோற்றுவானேன், என்றவினாவிற்குவிடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

பூரிக் குங்கன சச்சிதா னந்தத்திற் பொய்சடந் துயர்மூன்றுந், தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரீதந் துடைப்பதெப்படியென்று, னீரிற் றோன்றுந்தன் னிழறலை கீழதாய் நின்றலையினுநே ராப், பாரிற் றோன்றிய தன்னைநோக் கிடிலந்தப் பாழ்நிழல் பொய்யா மே.

(இ - ள்.) பூரிக்குங்கனசச்சிதானந்தத்திற் பொய்சடந்துயர்மூன்றுந் தூரத்தாயினுந்தோன்றுபாழ்விபரீதந் துடைப்பதெப்படியென்றால், எ - து. பரிபூரணமாகிநிறைந்துள்ள மேலாய சச்சிதானந்தசொருபத்தில் அதூர்த சடதுக்கமென்னுமூன்று மெனதுதிருஷ்டிக்கதிதூரத்ததாயினும், மெய்போலத்தோன்றுகின்றபாழும், நாமரூபவிபரீதங்களுமாகியவழுக்கைத் துடைக்குமாறெங்ஙனமோவங்ஙனமாயநெறி யினையெனத்தெரிந்தருளவேண்டுமெனக்கேட்டையாயின்:—நீரிற்றோன்றுந் தன்னிழறலைகீழதாநின்றலையினும், எ-து. நீரிற்காணப்படுந்தன்னிழல் தலைகீழதாகநின்றலைந்தாலும்:— நேராப்பாரிற்றோன்றியதன்னைநோக்கிடி லந்தப்பாழ்நிழல்பொய்யாமே, எ - து. தலைகீழதாகவின்றி நேராகத்தரையில்தோற்றியதன்னைக்காண அந்தப்பாழானசாயையானதுண்மையன்றாய்முடியும், எ-று.

தூரத்ததாயினுமென்றதிடைக்குறை. சத்தையன்றியசத்தும், சித்தையன்றிச்சடமும், ஆனந்தத்தையன்றித்துக்கமும், இல்லையெனத்திடவிசாரத்தாற்றெளிதலின், தூரத்தாயினுமெனவும், தெளியினும்பாழானசெகசீவபரந் தோன்றுகின்றனவேயிதற்கென்செய்தும், இந்தத்தோற்றத்தையுமகற்றுமா றெங்ஙனமெனவினவினனென்பார், தோன்றுபாழ்விபரீதந் துடைப்பதெப்படியென்றாலெனவும், கிணறு, தடாகம், முதலியவற்றின்கரையினின்றாலொருவன், எட்டிப்பார்க்குமிடத்துத் தன்னிழல்தலைகீழதாகத்தோன்றுமன்றோ? அதனைக்கண்டுவியப்புற்றுத் தன்னைக்கரையிற்காண வம்மயக்கமுழக்கணமேதீரும். அதுபோல, வியட்டியாகவேனுஞ் சமட்டியாகவேனு

னனுமொருவனை, தன்னையங்ஙனமாகக்கருதின் றண்டபிண்டங்களையீட்டிப்பார்க்குமிடத்துத், தான்சோபாதிகமாகவுந் தலைகீழதாகவு மிடைவிடாதலைவதாகத்தோற்றக்காண்பனன்றோ? பரிபாககாலம்வந்துழி, அதனைக்கண்டருவருப்புற்றுத் தன்னைநிருபாதிகமாகச்சிதாகாயத்திற்காண வம்மயக்கமக்கணமேதொலையுமென்பார், நீரிற்றோன்றுந்தன்னிழறலை கீழதாகின்றலையினுநேராப் பாரிற்றோன்றியதன்னைநோக்கிடி லந்தப்பாழ்நிழல்பொய்யாமேயெனவுங்கூறினார். உபமானத்தா லுபமேயம் வருவித்தாம். நீர், அவித்தை. நிழல், தத்துவக்குழாம். தலைகீழதாகின்றலைதல்; எழுவகைத்தோற்றத் தெதிலுநிலையுறாது புண்ணியகன்மத்தால்மேலும் பாபகன்மத்தாற்கீழுமுபாதியளவாகநின்றலைதலை. பார், சிதாகாயம். தோன்றுதல், நிருபாதிகமாகவிளங்கல். தன்னைநோக்கிடல், தான்சொப்பிரகாசமாகவிளங்கக்காண்டல். அந்தப்பாழ்நிழல், அந்தவிவர்த்ததத்துவக்குழாமாகியதனதுசாயை. பொய், தோன்றியுந்தனக்கின்மை. எனத் திஷ்டாந்ததாஷ்டாந்தங்களைக்காண்க. நீரிற்றோன்றுந்தன்னிழ றலைகீழதாகின்றலையினுமென்பது, பகிர்முகம். நேராப்பாரிற்றோன்றியதன்னைநோக்கிடி லந்தப்பாழ்நிழல்பொய்யாமேயென்பது, அந்தர்முகம். இவ்விருமுகமும் ஞானஞ்ஞானங்களிலெனவறிக.

தனதெதார்த்தவடிவைநேராக்காணத் தனதுகற்பிதவடிவந்தனக்கின்றாமென்பது. பொய்சடந்துயர்மூன்று மறிவாகியகண்ணுடிக் கழுக்கெனக்கருதித்தொடைத்தலை வினையாக்கினார். தனது ஸ்மரணையிருவகைப்படும். அதாவது; விஸ்மரணை, தஸ்மரணையென. விஸ்மரணை, அநிர்தசடதுக்கம். தஸ்மரணை, சச்சிதானந்தம். தனதுவிஸ்மரணையைத், தனதுதஸ்மரணையாற்றொடைக்கவேண்டுமெனப்பெற்றாம் பெறவே, தன்னைவிடவிவவிரண்டுஸ்மரணையு மின்றெனக்கண்டாம். காணவே, இருப்பதுதானேயெனத்தெளிந்தாம். சச்சிதானந்தசிவத்தைச் சச்சிதானந்த மென்றதூஉம், அநிர்தசடதுக்கமாயையை யநிர்தசடதுக்கமென்றதூஉம், குணவாகுபெயர். சிரிசியந்தனக்குக்காணுவகைக்குத்திகூறியது. (௧௦௪)

## ௧௦௫ - கவி. அ - கை.

[அறிவையன்றிக்காரணகாரியமின்றெனவிக்கவியிற் கூறுகின்றார்.]

ஞானங் காரண மறிவுகாண் காரிய நாமரூ பப்பேர் க
ளான தெப்படி யழிந்ததெப் படியென வாய்குதல் பலனன் றே
மான மைந்தனே தீர்க்கசொற் பனசகம் வந்ததும் பாரா மற்
போன துங்கினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பா யே.

(இ-ள்.) ஞானங்காரணமறிவுகாண்காரிய நாமரூபப்பேர்கள், எ-து. அறிவேகாரணமாகவும், அவ்வறிவேகாரியமாகவுமிருக்கின்றது. அக்காரியமோ நாமரூபப்பேர்களாயுள்ளவைகளாம்— ஆனதெப்படியழிந்ததெப்ப

டியென வாய்குதல்பலனன்றே, எ-து. இந்தவற்கேதோற்சயமானதெப்படி, யா காதழிந்தவாறெப்படியென் றாராய்ந்துதெளிந்தவாறுமில்லாது மீண்டுமீண்டு மிதுவேதொழிலாக வாராய்தல்புரியாநிற்றல், ஆத்மலாபமன்றே, ஆயின்யா துசெய்வதெனின்:— மானமைந்தனேதீர்க்கசொர்ப்பனசகம் வந்ததும்பாரா மல்போனதுந்நினையாமலுன்போதமாய்ப் பூர்ணமாயிருப்பாயே, எ-து. தனக் கிழிவுவராதுகாக்கு மானமுள்ளஞானபுத்திரா ! என்றும்விடாது தோற்றுந் தீர்க்கசொற்பனசகம் போல்வதாகிய விச்சகமானது மூடத்தாலுதித்ததைப் பாராமலும், தெளிவாலழிந்ததைநினையாமலு முனதுஞானப்பிரகாசநின்றவா றெங்ஙனமோ வங்ஙனமாகவேநிற்றி, எ-று.

அறிவேகாரணகாரியமென்கை; அறிவையன்றிக்கடபடமென்னுங்காரி யமும், மண்நூலென்னுங்காரணமுமின்றாம். இவவிரண்டுமறிபடுபொருளன் றோவெனின், காரணநாட்டத்திற்காரியமும், காரியநாட்டத்திற்காரணமுங் காணுதன்னியோன்னியாபாவ மெய்துவதென்னை. இவ்விரண்டவசரத்து மததுவாத்தோற்றலறிவன்றோ, ஆனதுகொண்டென்க. இவ்வபிப்பிராயத்தை க்கண்டுபிடித்தல் மிகவுமரிது. எங்ஙனமெனில்,அறிபடுபொருளென்னுமயக்க மகலாமைபற்றி யென்க. காரணத்தைத்தவிரக் காரியமோர்முதலெனவுஞ் சு யம்பெனவுமுணர்த லறிவேனுமறியாமையெனப்படும். கடபடத்தைக்காரிய மெனக்கோடல்பற்றியன்றோ? மண்ணூலையன்றிக்காரியமுளதாயின் மண் ணூல்காரணமாகலாம். மண்ணூல்காரியமல்லாதபோதுகாரணமுமல்ல. மண் ணூலுக்குக்காரணகாரியமெனவந்தது; கற்பிதமென்றுணர்கைநிசமாதலா லறி வெனப்படும். அறிவறியாமையென்னுநாம மிவவிரண்டவசரம்பற்றிவந்ததன் றி யெதார்த்தமாத்தனக்கின்மையின், ஆய்குதலிபலனன்றே யுன்போதமாய்ப் பூர்ணமாய்யிருப்பாயேயென்றார். அறிவேயறியாமையாதலா லறிவுகாண்கா ரியமெனப்பட்டது. தொன்றுதொட்டுப்பிறவிதோறும் விடாதுவழங்கிவருத லினாலும், சுயம்பெனற்குப் பொருளின்றிச் சொப்பனக்காட்சிபோல்வதினா லும், சொப்பனம்விழித்துழியில்லாவாறுபோல இச்சகமுந்தன்னைத்தான்கா ணவிழித்துழி யில்லாமற்போதலானும், சொப்பனபோகத்தினித்தியதிருத்தி யில்லாவாறுபோல, இவ்வுலக்போகத்திலுநித்தியதிருத்திசற்று மில்லாமையா னுந் தீர்க்கசொற்பனசகமெனப்பட்டதென்க. வந்ததும் பாராமல்போனது நினையாமலென்றது; இவ்வுலகம்பயனற்றதெனக்குறிக்க. அறிதல்காண்காரிய மெனப் பாடமுமுண்டு. அறியாமையையறிவென்றது, காரணவாகுபெயர். அறியாமையன்றிநாமரூபப்பெயர்களுண்டாயின் காரியமுமுளதாம். இன்றே லிலதாம். அறியாமையாமுடிவதென்னை யாராய்தலின்கண் நாமரூபமாயுள்ள வனைத்தும். இஃதறியார்மறுத்தலாற்பயனென்னை? பிறர்மதிக்கற்கென்க.

(க-து.) இருப்பதறிவொன்றுமேயன்றிவேறின்றென்பது.இதுபற்றியுன் போதமாயிருப்பாயென்றதென்க. ஞானம், அறிவு, ஒருபொருட்கிளவி. ()

௧௦௬ - கவி. அ - கை.

[பகிர்முகத்திலெவ்வளவுகாலம்பழகியதோ, அவ்வளவுகால
மந்தர்முகத்திலும்பழகவேண்டுமென விக்கவியிற்
கூறுகின்றார்.]

**அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு யம்மட் டு
நிசத்தி லுள்விழிப் பார்வையா யிப்படி நிரந்தரப் பழக்கத் தால்
வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா கிடின்மைந் தா
கசத்த தேகத்தி லிருக்கினு மானந்தக் கடல்வடி வாவா யே.**

(இ-ள்.) அசத்திலெம்மட்டுண்டம்மட்டும்பராமுகமாகினும், எ-து. மெய்
போலத்தோற்றுஞ் செகசீவபரமென்னும்பொய்யி லெவ்வளவுகாலஞ் சம்மந்
தமுண்டாயிருந்ததோவவ்வளவுகாலமளவும்பராக்காகியபகிர்முகப்பட்டனை:-
அம்மட்டுநிசத்திலுள்விழிப்பார்வையாயிப்படி நிரந்தரப்பழக்கத்தால், எ-து.
பகிர்முகமானவவ்வளவுகாலவளவுமறிவென்னு முண்மையிலந்தர் முகநாட்ட
மாகின் றிங்ஙனமிடைவிடாதுபழகுவையாயி னந்தப்பழக்கத்தால்:—வசத்தி
லுன்மனநின்றுசின்மாத்திர வடிவமாகிடின்மைந்தா, எ-து. மனதின்வசத்திற்
செல்லா துன்வசத்திலுன்மனநின்று சைதன்யவடிவமாத்திரமாக விளங்குமா
யின் ஞானபுத்திரா:—கசத்ததேகத்திலிருக்கினு மானந்தக்கடல்வடிவாவா
யே, எ-து. மலமூத்திரபாண்டமாதலினருவருக்கத்தக்கதேகத்தினீயிருக்கி
னும் பிரமானந்தசமுத்திரஸ்வரூபமாவை, எ-று.

சத்தெனற்குப்பொருளறிவையன்றிச் சகசீவபரமின்மையி னிவற்றை
யசத்தெனவும், பராமுகம், பகிர்முகம். நிசம், சைதன்யம். உள்விழிப்பார்வை,
தனதெதார்த்தவடிவைவிடாதுகாண்டல். சின்மாத்திரவடிவமாதல், மனஞ்
சொப்பிரகாசமாகவிளங்கல். மட்டு, அளவு. தஸ்மரணை, விஸ்மரணையென
ஸ்மரணையிருவகைப்படும். தஸ்மரணை, தன்னைத்தானுள்ளவாறுகாண்டல்.
விஸ்மரணை, தன்னைத்தானயலாகக்காண்டல். பொருளல்லவற்றைப் பொரு
ளாகக்கொண்ட தெவ்வளவுகாலமோ, அவ்வளவுகாலமும் பொருளைப்பொரு
ளாகப்பழகவேண்டும். அன்றேல், பழகியகாலவளவுபயன்றரும். சைதன்யத்
தையன்றியாதுமில்லை, ஆயின் யாதுமல்ல. எங்ஙனமெனில், மண்ணாலையன்
றிக் கபடமில்லை, ஆயின்மண்ணால்கடபடமல்ல; என்றாற்போலும். இங்ங
னமாயவிசாரமுகத்தாற்பழகல், நிசத்திற்பழகல், இங்ஙனமாய விசாரமின்றிப்
பழகல், அசத்திற்பழகல், என்பதுபரிட்தசம்மதவசனம். கசத்ததேகம், உரிச்
சொல்லடியாகப்பிறந்த பெயரொச்சத்தொடர். கசத்தல், தேகத்தியல்பு. உணர்
ந்தார்க்குமாத்திரமெனக்கோடல் வழு. ஏனையோர்க்குப்பிரியவடிவாயினும்,
மலமூத்திரபாண்டமன்றாயிற்றோ? ஆதலினேற்போர்பிழை. அறிவு, சத்து.
அறியாமை, அசத்து. அறியாமையன்றிச் சகமாதிதிரிபதார்த்தமுமின்றாத
லா லிவற்றையோர்முதலாகவுஞ் சுயம்பாகவுங்கொண்டு சத்தாகவேனும் அச

த்தாகவேனும் பிரதிவ ‘திப்பமல்லவம், தன்னைச்சொப்பிரகாசமாகக்காண்டல், அறிவு. அன்றாகக்காண்டலறியாமை.

(க-து.) அசத்திற்பழகியதுபோல், சத்திலும்பழகவேண்டுமென்பது. நிச த்திலுள்விழிப்பார்வையா மிப்படியெனப்பாடருமுண்டு. அவ்வளவுகாலம் பழகாவிடின் ததாகாரமாவதின்றி விவர்த்தமாகமுன்போலழிதும். (௧0௬)

**௧0௭ - கவி. அ - கை.**

[ஆன்மாசச்சிதானந்தமென்றீர், சத்து, சித்தைபோல ஆனந்தஸ் வரூபமாயின், அயலேயவாவுவதென்னே? என்றவினவை யிக்கவியிற்கூறுகின்றார்.]

தானன்றி வேறொன்று மில்லாது பூரணச் சச்சிதா னந்த குண மா, யூனின்ற வுயிர்தோறு மொன்றாகு மென்றால தொக்கின்ற படிக ண்டிலே, னானென்ற சீவன்கள் சத்தான வகையொக்கு ஞானங்கள் வெளிகண்ட தா, லானந்த மிவைபோல வெளியாக வுதியாத வடை வேது குருநாத னே.

(இ-ள்.) தானன்றிவேறொன்றுமில்லாதுபூரணச்சச்சிதானந்தகுணமாய், எ-து. ஆன்மா, தான்மாத்திரமிருப்பதன்றித் தன்னைத்தவிரவயலாக வேறே யாதொன்றுமிருக்க விடந்தருதலின்றி யங்கிங்கெனாதெங்கும்பரிபூரணமாயும், சத்து, சித்து,ஆனந்தகுணமாயும்:—ஊனின்றவுயிர்தோறுமொன்றாகுமென்றா லதொக்கின்றபடிகண்டிலேன், எ-து.மாமிசவடிவாயமைந்ததேகங்களிலுள்ள வுயிர்களிலெல்லாம், அக்குணம் வெவ்வேறாகாமல் லேகமாநிற்கவிளங்குமாயின் அக்குணம் தமக்குள் பேதியாதேகமாநிற்கும்வண்ண மடியேன் சற்றுமையமி ன்றிக் கண்டிலனே:—நானென்றசீவன்கள் சத்தானவகையொக்கு ஞானங் கள்வெளிகண்டதால், எ-து. நானெனக்கூறாநிற்குஞ்சீவர்க ளறிவதுபற்றிக் கரணேந்திரியமென்னு ஞானங்களுளவாகநேரேகாணப்படுவதால் சத்தாகவ ன்றிச்சித்திராது, சித்தாயிருப்பதுபற்றி யுயிர்கள்சத்தாயிருக்கிறவிதம் யுத்திக் கொத்திருக்கின்றது:— ஆனந்தமிவைபோலவெளியாக வுதியாதவடைவேது குருநாதனே, எ-து. சத்துஞ்சித்துமொத்துத்தோன்றுமாறுபோல, ஆனந்தமு மொத்திருக்கநேரேகாணப்படாதவகையாதுகொலோ யானறிகிலன்குருமூர்த் தியே! யிவ்வையந்தவிர்த்தருள வேண்டுமென்றிரந்தனன், எ-று.

தானெனப்பொதுப்படக் கூறியதால், ஆன்மா வருவித்தாம். என்னே, "முதற்பெயர்நான்குஞ்சினைப்பெயர்நான்கும், சினைமுதற்பெயரொருநான்கு முறையிரண்டுங், தன்மைநான்குமுன்னிலையைந்தும், எல்லாந்தாந்தானின் னனபொதுப்பெயர்", என்றார்பவணந்தி. தானன்றிவேறொன்றுமில்லாததா ன்மாவாதலின், இல்லாதெனவினையெச்சமாக்கினும். பெயரெச்சமாக்கின்,

குணத்தைக் காதின்றது. அங்ஙனமாக்கின், தானன்றியென்றிருக்கவேண்டும், ஆதலிற் பொருந்தாது. பூரணச்சச்சிதானந்த குணமாயென்றதனால், ஆன்மாவெனப்பெற்றும். ஆன்மாதாறுதலின் தானன்றியென்வும், ஆன்மா தன்னைத்தான் விசாரியாதுழி யயனுளனாம், விசாரித்துழிச்சற்றுமின்றும். ஆதலின்வேறொன்றுமில்லாதெனவும், சொல்லால்வேறாயினுமர்த்தத்தாலொன்றாதலின், பூரணச்சச்சிதானந்தகுணமாயெனவும், தேகத்தை யூனென்றது, காரணவாகுபெயர். ஆன்மா சச்சிதானந்தமாயின் சத்துசித்தைப்போல ஆனந்தமாயிருக்கவேண்டும். இருக்கின்றதெனில், அயலையவாவியலைவதென்னோ? ஆதலிற் பொருந்தாதென்பார், ஆனந்தமிவைபோலவெளியாகவுதியாத வடைவேதெனவுங்கூறினார். உபாதிபற்றிப்பலவாகக்காண்டலின், சீவன்களெனப்பட்டது. நானென்ற சீவனென்றது; நானென்றுத சீவனைக்காட்ட. அந்தச்சீவன், மகான். ஆனந்தமாயிருத்தல்பற்றியென்க.

(கு-து.) ஆன்மாசச்சிதானந்தமாயின், ஆனந்தமெங்கேயென்பது. உடன்படாமைக்கேதிஃதெனவுணர்க. சீவன்கள் சத்தானவகையொக்குமென்பதற்கேதுகாட்ட, ஞானங்கள்வெளிகண்டதாலெனப்பாடங்கொண்டாம். வெளிகண்டதாமெனப் பாடங்கொள்ளின், சத்தானவகையொக்குமெனற்குப் பொருத்தமின்றிவேறும். இவவியையுணராவிடத்துவையென்பயனுறும். அஃதொக்கின்றபடியெனினுமமையும். (கoஎ)

கoஅ - கவி. அ - கை.

[அதற்குவிடைகூறப்புகுந்தாரிக்கவியிலுபமானபூர்வமாக
விருத்திபேதத்தினாற்குணங்கள்பேதித்ததாகக்
காண்பதைக்கூறுகின்றார்.]

உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி லொன்றாகு மென்றாலு மே, கரணங்க ளோரொன்றி னோரொன்று தெரியுங் கணக்கன்றி வாராத கா, ணருமந்த சச்சிதா னந்தச் சுபாவங்க ளான்மாவின் வடிவாயி னும், பிரபஞ்ச மயமாம் விருத்திபே தத்தினாற் பேதங்க ளாமைந்த னே.

(இ-ள்.) உருவங்களிரதங்கள்பரிசங்களொருபூவி லொன்றாகுமென்றாலுமே, எ-து. உருவங்களும், சுவைகளும், பரிசங்களும், ஓர்மலரின்கண்பேதமாகாதபேதமா யேகமாயிருக்கின்றனவெனினும்:— கரணங்களோரொன்றினோரொன்றுதெரியுங் கணக்கன்றிவாராதுகாண், எ-து. புறக்கரணமாகிய ஐஞ்சேந்திரியங்களி லொவ்வொன்றுபொறிகளால், அதற்குரியவொவ்வொருவிடயமுணரப்படும், இங்ஙனமுணரப்படுமவ்வகையாலன்றி வேறொன்றாலுணரப்படுமவ்வகையெங்ஙனம்வரும், வராதே:—அருமந்தசச்சிதானந்தச்சுபாவங்க ளான்மாவின் வடிவாயினும், எ-து. அடைதற்குமிகவுமரிதாயுள்ள சச்சிதானந்தமாவினங்குஞ்சுபாவங்கள், ஆன்மாவின்சுயவடிவாம், சுயவடி

வாயினும்: — பிரபஞ்சமயமாம்விருத்திபேதத்தினாற் பேதங்களாமைந்தனே, எ-து. சத்தபரிசாதிவிடயமயமாகின்றுள்ள சாத்துவிதமாகிய முக்குணத்தால் வரும் விருத்திபேதத்தினால்பேதங்களெய்தற்குரித்தாம், ஞானபுத்திரா, எ-று.

உருவங்கள், அழகுகள். இதுகண்ணாலுணர்பவைகள். இரதம், இனிமை. நாவினுக்கன்றிமூக்கினுக்கெனினுமமையும், அமைதலால்சுகந்தமெனப்படும். பரிசங்கள், தொக்காலுணர்பவைகள். என்பனவைதிகம். கண், நா, தொக்கு. இவற்றிற்குவிடயம், உருவம், இரதம், பரிசம், எனவிக்கவியிற்கூறுமுறைமை. உருவமுதலிய மூன்றும் மலரிலபேதமாயினு மவற்றைத் தனித்தனியுணரும் பொறிகளாற் பேதமுறுமாறுபோன்று, சத்துமுதலியமூன்றும் ஆன்மாவில பேதமாயினு மவற்றைத் தனித்தனியுணருஞ் சாத்துவிதமுதலியவற்றால் வரும் விருத்திபேதத்தினாற் பேதமுறுமெனவுணர்க. அகக்கரணம், மனம். புறக்கரணம், பொறிகள். இவ்விரண்டுங்கரணமெனினு மிங்கேபொறிகளை யெனக்கொள்க. கணக்கு, விதம். அருமருந்தன்னசச்சிதானந்தமெனற் பாலது, அருமந்தசச்சிதானந்தமென்றாயது, மரூஉ. ஆன்மாவுக்குச்சச்சிதானந்தங்கள் சுபாவமெனவும், வடிவமெனவுங்கூறியதால், மூன்றுமொன்றுக் கொன்றபேதமெனவும், இங்ஙனமிருத்தல்சுபாவமெனவும்பெற்றாம், விருத்திபேதத்தினாலென்றது பிரபஞ்சமயமாவெனவடைகொடுத்தது, விடயாகாரமன்றிவேறாகாரஞ் சற்றுமாகாமையினென்க.

(க-து.) சச்சிதானந்தங்கள்; தத்தமிலக்கணங்களைத்தனித்தனியறிவதாற் பேதமுறுவதுபோற்காண்டலன்றித் தமக்கின்மையினபேதமேயென்பது. விருத்திபேதம் மறுபாட்டிலிருப்பதா லாங்கே விளக்குதும். உருவமுதலியமூன்றும் மலருக்குவேறாயின், சத்துமுதலியமூன்று மான்மாவுக்குவேறாகலாம். உருவமுதலியமூன்றுமறிவதாலன்றித் தனித்தனிவெவ்வேறாயின், சத்துமுதலியமூன்றுந் தத்தமிலக்கணங்களையுணர்வதாலன்றித் தனித்தனி வெவ்வேறாகலாம். ஆகாதெனின், ஆன்மாவானந்தவடிவமெனலைத் தடையின்றி யேற்கவேண்டுமென்றாயிற்று. காண், அசைநிலை. (கoஅ)

## கoகூ - கவி. அ - கை.

[விருத்திபேதமினையவெனவும், அவைவந்தவகையும் இக்கவியிற்கூறுகின்றார்.]

தாமதமி ராசதஞ் சாத்துவித முக்குணத் தால்வரும் விருத்தி மூன்றா, மாமவைகண் மூடமுங் கோரமுஞ் சாந்தமு மபிதான மாகு மகனே, யேமுற விருக்கின்ற சச்சிதா னந்தங்க ளென்றென்று மொன்றாகி னு, மீரமுளைக் கும்விருத் திப்பிரிவி னாற்சொருப ஞானதி பிரிவாகு மே.

(இ-ள்.) தாமதமிராசதஞ்சாத்துவித் முக்குணத்தால்வரும்விருத்திமூன்ரும், எ-து. தாமதம், இராசதம், சாத்துவிதமெனக்குணமூன்ரும், இம்மூன்ருனும்வரும்விருத்திபேதமூன்ரும்:—ஆமவைகள்மூடமுங் கோரமுஞ்சாந்தமு மபிதானமாகுமகனே, எ-து. ஞானபுத்திரா ! அங்ஙனமூன்ருனவைகள் மூடமுங்கோரமுஞ்சாந்தமுமெனப் பெயர்பெறுவனவாம்: — ஏமுறவிருக்கின்றசச்சிதானந்தங்க ளென்றென்றுமொன்ருகிலும், எ-து. கெம்பீரமாயிருக்கின்ற சத்து, சித்து ஆனந்தமென்பன, என்றென்றைக்குமொருபடித்தாயேகமாயிருப்பனவாயினும்: — நாமுரைக்கும்விருத்திப்பிரிவிஞற் சொரூபஞானுதிபிரிவாகுமே, எ-து. யாமுற்கூறிய விருத்திபேதத்திஞ லான்மசொரூபமாகிய சித்துமுதலியமூன்றும்பேதிக்கும், எ-று.

தாமதம், மூடம். இராசதம், கோரம். சாத்துவிதம், சாந்தம். என்பனநேர்நிரனிறை. தாமதமுதலியமூன்றுகுணத்தின்தர்மம், மூடமுதலியமூன்றும். சத்தாதியென்ஞதுஞானுதியென்றது, அடியியைபுத்தொடைபற்றியென்க. ஒவ்வோருயிர்க்கண்ணுமேனும், மக்களிடத்துமொவவொருவர்பாலுமேனும், மூன்றுகுணமிருக்கின்றன, இருக்கினுமூன்றுளோர்குணமேலிட்டுநிற்கும், நிற்பதாலததற்கியைந்தவிருத்தியொன்றுமேலிட்டேநிற்கும். விருத்தியுளொன்றுசாந்தம். இந்தச்சாந்தமிருவகைப்படும். அவை, காருணியசாந்தம், உபசாந்தமென்பன. உயிர்க்கிடுக்கணுருதுபொறுத்தல், காருணியசாந்தம். அன்னியமின்றிச்சமஸ்தமுஞ் சின்மாத்திரமாவிளங்குஞ்சாந்தம், உபசாந்தம். இக்கவியில்சாந்தமென்றது, உபசாந்தத்தை. இந்நெறித்தாயவுபசாந்தமெங்கே யுண்டோ, அங்கேவிடயானந்தமின்றி யாத்மானந்தம் விளங்கும். விளங்குதலனுபவமாயென்றுநிகழ்தலா லின்றெனமறுத்தல், தாஞகாப்பிழை, எனக்குறிப்பித்தற்கிக்கவிகூறியதென்க.

(க-து.) ஆத்மா வானந்தவடிவமன்றெனல்; விருத்திபேதமறியாக்குறையென்பது. தாமிகுந்தமசிரசுசத்வமெனு முக்குணத்தால்வரும் விருத்திமூன்ருமெனப்பாடமுமுண்டு. "இஃதெஞ்சியசொல்லினெய்தக்கூறலென்னுமுத்தி" "பிறிதொடுபடாஅன்றன்மதங்கொளலென்னுமதம்". ஆன்மாவைக் காணுதா ரானந்தம்வேறெனுஞானியர். (சுoக)

சுகo - கவி. அ - கை.

[மூடத்திற்சத்தும், கோரத்திற்சத்துஞ்சித்தும் சாந்தத்திற்சத்து சித்துஆனந்தமுமிருக்கக் காணலாமெனவிக்கவியிற் கூறுகின்ருர்.]

சடமான மூடத் தருக்கல்லு மண்களிற் சத்தொன்று மேதோன்று மால், விடமான காமாதி கோரத்தி லானந்தம் விளையுாது மற்றவைக ளாங், திடமான வொழிவாதி சாந்தத்தி லேசச்சி தானந்த

மூன்றும்வெளி யா, மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மன
மாகி லானந்த மே.

(இ-ள்.) சடமான்மூடத்தருக்கல்லுமண்களிற் சத்தொன்றுமேதோன்று
மால், எ-து. மரம், கல், மண், இவைபோல்பலவைசடமாகின்றுள்ள மூடவிரு
த்திகளாம். இம்மூடவிருத்திகளில் சத்தொன்றுமாத்திரமிருக்கக்காணும்:—
விடமானகாமாதிகோரத்தி லானந்தம்வினையாதுமற்றவைகளாம், எ - து.
விஷம்போல்வனவாகியகாமம், குரோதம், லோபம், இவைபோல்வனகோர
விருத்திகளாம், இந்தக்கோரவிருத்திகளி லானந்தமாத்திரமிருக்கக்காணுது,
ஏனையசத்துஞ் சித்துமிருக்கக்காணும்: — திடமானவொழிவாதிசாந்தத்திலே
சச்சி தானந்தமூன்றும்வெளியாம், எ - து. முத்தியெனற்குத்திடமாகின்று
ள்ள, ஒழிவு, சுத்தம், சூனியமுதலாயுள்ளவைசாந்தவிருத்திகளாம், இந்தச்
சாந்தவிருத்திகளில், சத்து, சித்து, ஆனந்தமென்னுமூன்றும் யாவருங்காண
விளங்கும்: — மடமானமூடங்கள்கோரங்கள் விடுசாந்தமனமாகிலானந்தமே,
எ-து. மடமையேவடிவாயுள்ளமூடவிருத்திகளும், கோரவிருத்திகளுமல்லா
தகன்ற சாந்தவிருத்திமயமாகமன்மாயிடி னப்போதான்மாவியல்பாகவே
யானந்தவடிவமெனக்காணும், எ று.

சச்சிதானந்தமல்லாத சகசிவுபரமில்லை. இல்லையாயினும், உணர்தலா
லிப்பேதங்காணும். எங்ஙனமெனின், உணர்தல்; தாமதமுதலியகுணத்திரிய
த்தி லொன்றின்வயப்பட்டிரிற்கும். இக்குணத்திரியத்திலொன்று தத்தமக்
கியைந்த விருத்திபேதமூன்றனுள் தன்சுயதர்மவிருத்தியதாகு மிதனுமெல்
லவுணர்க. மூடவிருத்தியிற்சத்தும், கோரவிருத்தியிற்சத்துஞ்சித்தும், சாந்
தவிருத்தியிற்சத்துஞ்சித்துமானந்தமு மிருப்பதெங்ஙனமெனின், மூடவிருத்
தியாகிய மரம், கல், மண்முதலியவைக ளணுக்கள்சையோகமேனு மவ்வணு
க்கள்பரமாணுவையன்றியில்லை, அந்தப்பரமாணுதன்மாத்திரையைத்தவிரவி
ல்லை, தன்மாத்திரை யகங்காரத்தைத்தவிரவில்லை, அகங்காரம் மகதத்துவத்
தைத்தவிரவில்லை, மகதத்துவம் மூலப்பிரகிருதியைத்தவிரவில்லை, மூலப்பிர
கிருதி யான்மாவாகிய தன்னைத்தவிரவில்லை, தானுகிறசத்தேயிங்ஙனம்பிரதி
பலித்தலாற் சத்தொன்றேதோன்றுமெனவும், கோர்விருத்தியாகியகாமக்
குரோதாதிகள் தனதுவிஸ்மரணை காரணமாகவெழு மனர்த்தரூபமாதலா
லவைகளை மெய்யெனக்கோடலால் யானெனதெனவகமமதைதோன்றும்.
தோன்றவே, யுத்தாயுத்தந்தெரியாது மனஞ்சென்றவழியே பிறர்மனைநயத்
தல், பிறர்பொருளைவஞ்சித்தலாதி தீவினைகள்புரியவேண்டிவரும். வரவே,
யப்போதுசுகம்போலக்காணினுந் துன்பமாகமுடியும், முடிதலால்கோரத்தி
லானந்தம்விளையாது மற்றவைகளாமெனவும், சாந்தவிருத்தியாகியவொழிவு
சுத்தஞ் சூனியஞ் சுபாவ மதீதமாதிகள் தனதுதன்மரணைகாரணமாகவெ
ழு மர்த்தரூபமாதலால், அவற்றைத்தன்னுசொரூபமாகவிடா தனுசந்தா
னஞ்செய்யவேண்டும். செய்யவே, யானெனதென்னுமகமமதைதாமேகழ

னும், கழலவே, யுத்தாயுத்தமெண்பதிறந்து மனஞ்சின்மாத்திரமாகவினங்கும் விளங்கவே, யன்னியமின்றித்தான்மாத்திரமாகநிற்கும். நிற்கவே, சத்தேசித் தாகவும், சித்தேசத்தாகவுமைக்கியமெய்தும். எய்தவே, யானந்தந்தானுக்முடி யும். முடியவே, சச்சிதானந்தவொருமையாம், ஆதல்பற்றியொழிவாஇசாந்த த்திலே சச்சிதானந்தமூன்றும்வெளியாமெனவுங்கூறினர்.

(க-து.) விருத்தித்திரியமினையவெனவும், அவற்றுற்சச்சிதானந்தபேத மினையவெனவும்,ஒருமையினையவெனவும்விளக்கியதென்பது. மூடங்கள் கோ ரங்கள்விசாந்த மனமாகிலானந்தமேயென்றது; மனதுமூடவிருத்தியாகில் சத்தும், கோரவிருத்தியாகில்சத்துஞ்சித்தும், சாந்தவிருத்தியாகில்சத்துஞ்சித் துமானந்தமுமெனப்பொருடாற்கென்க. எனவே, மனங்காரணமாகவிப்பே தாபேதந்தோன்றிற்றேயன்றி யான்மாவுக்கின்றெனப்பெற்றும். பெறவே, யா ன்மா சச்சிதானந்தமென்றுவிற்று. யிஃதறியார் சச்சிதானந்தசொரூபந்தன்னை விடவேறென்பர். இவர் தன்னிலக்கணங்கல்லா தன்னியவிலக்கணங்கற்றூர் போலும். ஆல், அசைநிலே. தருக்கல்மண்ணென்றது கல்லுவெனவுகரச்சாரி யைபெற்றது; "ஞணநமலவளனவொற்றிறுதொழிற்பெயரேவல்வினைநனிய வ்வன்மெய்வரி னுவவுறுமேவலுற்சிலசில்வழி" யென்னும் விதியாலென்க. ஆன்மா சச்சிதானந்தவிலக்கண மகன்றதுங்கூடியதும்போல்வதன்றி வேறன் றென்க. (ககo)

ககக - கவி. அ - கை.

[சச்சிதானந்தவிலக்கணமினையதென்த்தெரியாது எங்ஙனமான் மாவுக்கென் றேற்பனென்றவினுவுக்கு விடை யிக் கவியிற்கூறுகின்றூர்.]

இகமான குருநாத னேசச்சி தானந்த மெனுமிலக் கணமறிகி லே
னகலாத சத்தாவ தேதுசித் தாவதே தானந்த மேதென்றி டின்
மிகுகால மூன்றுங் கெடாதிருப் பதுசத்து வேறுபா டறிதல் சித்தா
மகிழ்காம நுகர்போது சுகமாகு மனுபூதி வாழ்வென்ப தானந்த மே.

(இ-ள்.) இகமானகுருநாதனேசச்சிதானந்தமெனு மிலக்கணமறிகிலேன், எ-து. இம்மையிலடியேனுக்கியைவதானகுருசாமியே! சத்து, சித்து, ஆனந்த மென்னுமிலக்கண மினையவெனக்கேட்டறிகிலேன். ஆயினும்:—அகலாதசத் தாவதேது சித்தாவதேதானந்தமேதென்றிடின், எ-து. விடாதுநின்றுள்ள சத் தென்பதியாது, சித்தென்பதியாது, ஆனந்தமென்பதியாதெனக் கேட்பையா யின்:— மிகுகாலமூன்றுங்கெடாதிருப்பது சத்து வேறுபாடறிதல்சித்தாம், எ-து. அளவுக்கடங்காதுமிகுகின்ற இறப்பெதிர்நிகழ்வெனக்கூறுங்காலமூன் றினு மிடையினீங்காதிருப்பதுயாதோவதுசத்தெனவும், இங்ஙனமாநின்றநங் களிங்கவேறுபாடகல வவற்றைவிசாரித்திதெல்யாதோ வதுசித்தெனவும்வபு

ங்கப்படுவதாம்:—மகிழ்காமநுகர்போதுசுகமாகுமனுபூதி வாழ்வென்பதானந்த மே, எ-து. எவருமகிழத்தக்க காமவின்பத்தை யனுபவிக்கும்போதெங்ஙனஞ் சுகவெழுமோ வங்ஙனம்போல்வதாகியசுவானுபூதி சுகவாழ்வெனப்படுவதியா தோ வஃதானந்தமெனப்படுவதாம், எ-று.

சச்சிதானந்தவிலக்கணம்பிரமத்துக்கல்லது வேறொன்றுக்கல்லாமையின் பிரமமிலக்கியமெனப்பெற்றும். இலக்கியத்தினமைதி யில்க்கணமாதலானும், இலக்கியங்கண்டதற்கிலக்கணமியம்பலினென்றிருப்பதானும், மாணாக்கனில க்கியமாகியபிரமத்தையுணர்ந்ததுபற்றி யதினிலக்கணத்தையுணரவேண்டி வி னாவினனென்க. மிகுவென்னுமிகையா லிங்ஙனங் காலந்திரிவிதமாதல் கண க்கின்மையெனக்குறிக்கக்கண்டாம். மிகுகாலமூன்றுங்கெடாதிருப்பதுசத்தெ ன்றதனால்,காலாதீதமெனவும்; வேறுபாடறிதல்சித்தாமென்றதனால்,அங்ஙன ங்காலாதீதமாகின் றறிவறியாமைபாகுபாட்டைஏகமாக் கற்குவிசாரியாநிற்ற லெனவும்; மகிழ்காமநுகர்போதுசுகமாகுமனுபூதி வாழ்வென்பதானந்தமேயெ ன்றதனால், ஆலிங்கனகாலத்திருவருமனமொத்துப் புணருங்கா லிருவர்மன த்தையுமடக்கி மேலெழுஞ்சுக மெங்ஙனமோவதுபோல, அறிவு மானந்தமுந் த மக்குள் பேதமின்றி விசாரித்துத் தெளியுங்காலத் தறிவேயானந்தமாகவும், ஆனந்தமே யறிவாகவுமாகும். ஆகுங்கால் மனமென்பதிறந்து சின்மாத்திரமாக விளங்கும். விளங்கவே, சங்கற்பமிறக்கும். இறக்கவே, துக்கநிவர்த்தியாம். ஆகவே, தடையற்றவானந்தமாத்திரமேவிட்டுநிற்கும். நிற்கவே, சமஸ்தமுமா னந்தமயமாகவே நிகழுமெனவுமருத்தந்தரக்கண்டாம்.

(க-து.) இங்ஙனமாயநிலையேசச்சிதானந்த விலக்கணமென்பது. இந்நிலை வழுவுவார்க்குப்பயனென். (ககக)

ககஉ - கவி அ - கை.

[ஆன்மா தான்சச்சிதானந்தமேயென விசாரித்துத்தெளிந்த விடத்து நிகழுமனுபவம்யாதெனவினவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

நாசச் சரீரத் திருக்குஞ் சரீரிதனைநால்வேத மாவாக்கி ய
நீசச்சி தானந்த மென்றிடினு மாசிரியர் நீபிரம மாகுமெனி னு
மாசற்ற சச்சிதா னந்தநா னென்னவிவன் மன்னுமனு பவமெங்ஙனே
கோசப் புரங்களை யிடித்துத் தகர்த்தமத குஞ்சரக் குருநாத னே.

(இ-ள்.) நாசச்சரீரத்திருக்குஞ்சரீரிதனை நால்வேதமாவாக்கியம், எ-து. நாசமுறுதலையேயியல்பாகவுடைய சரீரத்திலிருக்குஞ்சரீரியாகிய வான்மாவை நோக்கி, நான்குவேதங்கட்கும் முடிவாயுள்ளமகாவாக்கியங்கள்:—நீசச்சிதான ந்தமென்றிடினு மாசிரியர்நீபிரமமாகுமெனினும், எ-து. நீசச்சிதானந்தசொரூ

பமே வேறன்றெனச்சொல்லினும், அல்லதுசற்குருநாதனெழுந்தருளிவந்து நீபிரமசொரூபமேவேறன்றென வுறுதியாகச்சொல்லினும்:— மாசற்றசச்சிதா னந்தநானென்னவிவன்மன்னுமனுபவமெங்ஙனே, எ-து. இயல்பாகவேமலர கிதமாயுள்ள சச்சிதானந்தசொரூபமேதனதுசுயவடிவமெனவொருவன் விசாரி த்துத்தெளிந்துழியதனாலிவனடைந்த சுவானுபவமெங்ஙனமாயதோ:—கோ சப்புரங்களையிடித்துத்தகர்த்தமத குஞ்சரக்குருநாதனே, எ-து. தடையாயுள் ளவன்னமயமுதலியபஞ்சகோசமென்னும்பட்டணங்களையிடித்துத்தூளாக்கிய மதயானைபோன்ற குருசாமியே, எ-று.

நீசச்சிதானந்தமென்றதும், நீபிரமமென்றதுமுபதேசமொழி. அங்ஙனம னுஷ்டித்துத்தெளிந்தவனெய்தியபலனை விசாரித்தது, தானுதற்கென்க. அவ னனுபவமெங்ஙனமாயதோ வதனையானறிய வுணர்த்தியருளுமெனப் பொரு டருதலால்,ஓகாரமொழியிசை. நானேசச்சிதானந்தசொரூபமென வொருவன் விசாரித்துத்தெளிந்து சொல்லாநிற்கவெனப் பொருள்கொண்டு சச்சிதானந்த நானென்னவென்பதைச் செயவென்னும்வாய்பாட்டு வினையெச்சமாக்குக.எங் ஙனேயெனப்பாடமுமுண்டு. கோசப்புரங்கள், உருவகம். புரங்களையிடித்தலுந் தகர்த்தலும் மதங்கொண்டபோது யானைக்கியல்பாமாறுபோன்று, கோசங்க ளையுருவழித்தலும், அவையிருந்தவிடமுந்தெரியாதழித்தலும் ஞானச்செரு க்குமேலிட்டபோது ஞானவானுக்கியல்பாதல்பற்றி யிங்ஙனங் கூறியதென்க.

சச்சிதானந்தமாயவிடத் தெய்துமனுபூதியாதென வினாவினனென்பது. ஆன்மாவேசச்சிதானந்தமாயவிடத்துப் பிரமமாதற்கையமென்னை ? இவ்விர ண்டுமுபதேசமுமொன்றே. (௧௧௨)

௧௧௩ - கவி. அ - கை-

[ஆன்மாசத்தெனவிக்கவியிற்கூறுகின்றார்.]

சென்மாந் தரஞ்செய்த வினைகளுட றருமெனிற் செல்கால மிவ னுண்ட லோ, கன்மானு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற காலத் து மிவனுண்டலோ, வுன்மாத யாதனு வுடல்கடவு ளுடன்மனுட வு டன்மாறி மாறியழி யுந், தன்மாயவுடல்கெடினு மிவனிருப் பதுகொ ண்டு சத்தென்ப தொக்குமக னே.

(இ-ள்.) சென்மாந்தரஞ்செய்தவினைகளுடறருமெனிற் செல்காலமிவனு ண்டலோ, எ-து. ஆன்மாதான்பூர்வசென்மங்களிற்செய்துவந்த நல்வினைதீவி னைகள்தேகத்தைத்தருமெனச் சந்தப்பிரமாணமிருக்குமெனில், ஆன்மாவாகி யவிவன் முன்சென்றகாலங்களிலெல்லா மிருந்திருப்பானல்லவா:—கன்மானு பவநரகசொர்க்கமெனில்வருகின்றகாலத்து மிவனுண்டலோ, எ-து. இப்போ துசெய்துவருநற்கன்மந் துர்க்கன்மத்துக்கீடாக வினிவருமனுபவமாயது; நரக

மாவதுசொர்க்கமாவதெனக்கூறின், இனிவருங்காலத்துமான்மாவிருக்கவேண் மெல்லவா:—உன்மாதயாதனுவுடல்கடங்குடன் மனுடவுடன்மாறிமாறியுழி யும், எ-து. உன்மத்தமாயியாதனுசரீரமும், தேவசரீரமும், மனிததேகமும் நிலையாதுமாறிமாறியுழிந்துபோகும்:—தன்மாயவுடல்கெடினு மிவனிருப்பது கொண்டு சத்தென்பதொர்க்குமகனே, எ-து. அன்றுபிராரத்திகாரணமாகவுந்த தேகமழியினுந் தானல்லாததா லான்மாவிருக்கின்றானன்றோ, இவனிருப்பது பற்றிச் சத்தென்பதிவனுக்குப்பொருந்தும்சற்புத்திரா, எ-று,

சென்மங்காரணமாகவான்மாவுண்டென லெவர்க்குமரபாதலினாலும், அந் நெறியேயேனு மான்மாமுக்காலத்துமுண்டெனலை நிலையுறுத்தப்புகுந்தாரிக் நூலாசிரியராதலினாலும், இதனைமறுக்கற்பாற்றன்று. மறுப்பாரான் மாகார ணமாகப்புகவேண்டும், புகினும், ஆன்மா நிரிகரணங்கட்குமெட்டுவதன்று, ஆத லினனுமானத்தாலுண்டெனலேபொருந்துமென்க. அனுமானம், புகைகாரண மா நெருப்புண்டெனல். இங்ஙனமாகவேனு மான்மாசத்தெனற்குத்தடையெ ன்னையுள. கன்மத்துக்கீடாகத்தேகங்கள்வந்தகல்வனவெனவே, ஆன்மாவிருந் தன்றோ கன்மம்புரியவேண்டுமென்பதனுனித்தியமாயிற்று. தேகங்க ளான் மாவாயினவைபோலவான்மாவும் வந்துவந்தகலலாம். போகமான்மாவுக்கோ, தேகத்துக்கோ? தேகஞ் சடம், அகர்த்தா, விகாரவடிவம், துணைக்கருவியா தலின் தேகத்துக்கன்று, ஆன்மாவுக்கெனப்படும். ஆன்மாவிருந்துதானேதே கபோகங்களையனுபவிக்கவேண்டும், இன்றேல்யாதுக்கனுபவம், ஆதலினான் மாவே சத்தெனப்படும். ஆதியந்தமேற்றலின் தேகந்தேகியன்று. ஆராவியற் கையவாக்கோட்லும், அகற்றலும், பந்தமுத்தியாதலினிதனையுடையதுதே கமன்று தேகியெனற்கையமென்னை? இதனுனுமான்மாசத்தெனப்படும். ஆன் மா தானெத்தேகமுமன்று, தன்னைத்தவிரவுமில்லை.எனவே, யெல்லாமாயு மல்லவுமாயுமிருப்ப தான்மாவெனப்பெற்றும். பெறவே,பிராதிபாலிகசத்து, விவகாரிகசத்து, பாரமார்த்திகசத்தென்னும்போலிசத்தன்று, எதார்த்தசத் தான்மாவென்றாயிற்று. ஆகவே, யிதனையகற்றற்கிடமின்றெனக்கண்டாம். இஃதெமதுதுணிபு.

(க-து.) ஆன்மாவே சத்தெனப்படுவதன்றி வேறின்றெனவுணர்கவென் பது. தெளிந்தார்க்கிஃதுடன்பாடு, ஏனையோர்க்கன்று வேறென்பர். வேறென் னல் சொல்வாதம், அர்த்தவாதமன்று. அல்லவோவெனற்பாலது, அலோ வென்றாயதிடைக்குறை. (ககக)

ககச - கலி. அ - ஙக.

[ஆன்மாவேசத்தென்றாற்போலச்சித்தெனலையுமானந்தமெனலையு மேற்குமென் றிக்கவிற்கூறுகின்றார்.]

இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி லிரவிகூட ரற்ற பொழு தும், மருளாம விருளையும் பொருளையுந் தெரிகின்ற வ

**கைகொண்டு சித்தாகுமே, பெருவாழ்வு மிக்கதா னேதன் னிடத்தி னிற் பேராத பிரியமத னு, லருகாத பிரியஞ் சுகத்தில்வருமாதலா லானந்த மாமைந்த னே.**

(இ-ள்.) இருளாகமூடுஞ்சுழுத்தியிலீராத்திரியி லிரவிசுடரற்றபொழுதும், எ - து. இருள்மயமாக வெங்கணு மூடிக்கொள்ளத்தக்கசுழுத்தியவத்தையிலும், கருக்கலிரவிலும், சூரியனும்விளக்குமில்லாதபொழுதும்:—மருளாமலிருளையும்பொருளையுந்தெரிகின்ற வகைகொண்டுசித்தாகுமே, எ - து. ஐயத்தால்மயங்காம லங்ஙனமூடியவிருளையும் வைத்தபொருள்களையுந் தெரிந்துகொள்ளும்விதத்தினு லான்மாசித்தெனப்படுவதாம்:— பெருவாழ்வுமிக்கதானேதன்னிடத்தினிற் பேராத பிரியமதனுல், எ - து. தடையற்றவானந்தந்தானுதலால் பெரிதானவாழ்விலிருந்ததுதானே; யிங்ஙனமாய தானே தன்னிடத்தினீக்கமற்ற பிரியவடிவாயிருப்பதினுல்:—அருகாதபிரியஞ்சுகத்தில்வருமாதலா லானந்தமாமைந்தனே, எ-து. என்றுஞ்சுருங்காததற்பிரியமானது தானுனந்தவடிவமாதலால் தனதானந்தத்திலெழுகின்றது. இதுபற்றி யான்மாவானந்தசொரூபியெனப்படுவதாம். ஞானபுத்திரா, எ-று.

இரவிசுடரென்றதனுல், இரவிமுதல்சுடரிறுவாயுள்ள வொளிபேதமேற்கினுமமையும். ஏனையபொருளுணர்தற்பாலதன்றுமையானும், மருளாமலென்றமையானும் வைத்தபொருளென்றும். எங்ஙனமாயவாழ்வு மான்மாவுக்கயலாதல்பற்றிப் பெருவாழ்வுமிக்கதானேயெனவும், தன்னிடத்தில்தானே பேராதபிரியவடிவாயிருப்ப தான்மாவையன்றி யின்றுதலின், தானேதன்னிடத்தினிற்பேராதபிரியமெனவும், அருகாதபிரியம், சித்தியதிருத்தி. இதுதன்னிடத்தன்றிப் பிறிதிடத்தெங்கணுமின்மையின், அருகாதபிரியஞ்சுகத்தில்வருமெனவும், தானின்பவடிவமாதலா லான்மாவானந்தமாமெனவுங்கூறினுர். இங்ஙனமானுர்க்கிதுதெரியுமன்றி யயலாரைவெறுப்பதென்னை? யாவரும்நன்குறங்குந்தினசுழுத்தியி லானந்தம் வருவானேன், சாக்கிரசொப்பனவல்லலைச் சாந்தப்படுத்துவ தியாது, நானின்றுதா னன்கயர்ந்துறங்கினேனென்றெவருஞ்சொல்வதற்குநயமென்னை, சுகவடிவமான்மாவன்றேல், அங்கேயாதோர்விகற்பமுமின்றித் தனித்துநின்றதுயாமன்றே, அங்கேதன்தேகமுதலியசகமனைத்துங் கண்டிலமென்றுணர்ந்து விழித்தீதுக்கூறவந்ததும்யாமன்றே, யாமெனற்கான்மாவையன்றிப்பொருளுண்டோ? இன்றே, இங்ஙனமிருக்க, ஆன்மாவை யானந்தவடிவமெனற் கையுறுவதென்னை. சகலத்திலான்மாவிருந்து மங்ஙனங்காணப்படாதது நமதுகுற்றம், அதன்குற்றமன்று. எங்ஙனமெனில், தேகமாதிநாதமிறுவாக்கிடந்த தத்துவக்குழாமயமாகக்காண்கின்றது, அங்ஙனமாகக்காண்கின்றேம். விசாரணையி லல்லவல்லவெனப்போவானேன், போவதா லான்மா தத்துவக்குழாத்துளொன்றுமன்றே, அப்போதான்மாமாத்திரந் தனித்துவிளங்குவதென்னை, விளங்குவதாலுலகமெங்கே, யுலேவெங்கேகாணுதிருப்பதென்னை, காணுததாற்றுக்கநிவிர்த்தியுந் தடையற்

றவானந்தமுமெய்துவதென்னை, எய்துவதாலதன்குற்றமன்று, விசாரித்துத் தெளியாதநமதுகுற்றமே. நமதுகுற்றத்தால்நில்லாது, கேவலத்திலானந்தவடிவாகக்காண்கின்ற ததன்சுயவடிவாதல்பற்றியென்க. ஆன்மாவின்சுயவடிவமானந்தமெனற்கிழுக்கென்னை? நினசுழுத்தியிலியல்பாகவே யான்மா தனிக்குமாறுபோன்று சகலத்திலுமியல்பாகவே தனித்திருத்தலை யாங்கண்டிலம், இதுதத்துவக்குழாத்தைவிசாரத்தா லகத்திற்காணும். உதாரணம். "என்றுமிருந்தபடியிருப்பதியல்பே்யென்னுமொருவேத"மென்பதனாற்காண்க. என்றுந்தனித்திருத்தலான்மாவாதலா லானந்தமென்றார். தடிப்பா ரயலைச்சுகிப்போர்.

(க-து.) ஆன்மாதன்னைத்தானுணரற்பாலதாதலின் தானேயானந்தவடிவாமெனற் கையமின்றென்பது. (ககச)

### ககரு - கவி. அ - கை.

[ஆன்மாசுகசாதனம்போல்வதன்றெண விக்கவியிற் கூறுகின்றார்.]

**அன்னபா னுதிசுக சாதனம தாகையா லார்க்கும்வெகு பிரியமாகு, மின்னவா றான்மாவு மானந்த சாதன மெனக்கருதல் பொருளல்லவே, சொன்னவான் மாவையொரு சுகசா தனங்களொடு சொல்லுவா யாகின்மக னே, யுன்னதா னந்தம்வே றோவனுப விப்பதா முபயவான் மாவுமுள தோ.**

(இ-ள்.) அன்னபானுதிசுகசாதனமதாகையா லார்க்கும்வெகுபிரியமாகும், எ - து. அன்னமாகியவுணவும், பானமாகியநீரு மிவைபோல்வனபிறவும், சுகத்துக்குச்சாதனக்கருவியாயிருப்பதா லெவர்க்கும் வெகுபிரியவடிவாயிருக்கும்:— இன்னவாறான்மாவுமானந்தசாதன மெனக்கருதல்பொருளல்லவே, எ - து. இதேபிரகாரமாக வான்மசொரூபமுஞ் சுகத்துக்குச்சாதனக்கருவியென நினைத்தல்பொருளாகுமா? ஆகாதே:—சொன்னவான்மாவையொரு சுகசாதனத்தினொடு சொல்லுவாயாகின்மகனே, எ - து. ஞானபுத்திரா! மேற்கூறிய வாத்மசொரூபத்தைச் சுகசாதனங்களி லொன்றோடுவமையாகக்கூறுவையாயின்:—உன்னதானந்தம்வேறோவனுபவிப்பதா முபயவான்மாவுமுளதோ, எ - து. உன்னைவிடவுனதானந்தமென்பதுவேறுதானோ, வேறாயினதனையனுபவிப்பதற் கிரண்டாவதாகநின்றுள்ள வான்மாவென்பதுமுண்டோ, எ-று.

பசிதணித்தற்குரியவைகளையன்னமெனவும், தாகந்தணித்தற்குரியவைகளைப்பானமெனவுங் கூறுவதுபொது. ஆதியென்றமையாற் சத்தபரிசாதிவிடயமெனப்பெற்றாம். அன்னபானுதிகளைச் சுகமென்னாது சுகசாதனமென்றது; பசியுந்தாகமுந்தணிந்தவுடன், எதிரிலிவையிருந்தும் வெறுப்பாகக்காண்டலினென்க. ஒப்பின்மையின் வெகுபிரியமாகுமெனவும், பொருளல்ல

வற்றைப்பொருளெனக்கோடலால் சுகமில்லவற்றைச் சுகமெனக்கோடல்வரும், இங்ஙனமாகாரரியர். ஆவாரெவரும். இதுபற்றியார்க்குமெனவும்; நிரதிசயானந்தமொன்று, அதையனுபவிக்குமான்மாவொன்று, ஆகவிரண்டாகவேண்டும். இரண்டாயின், விடையானந்தம்போல்வதாகும். அன்றேல், ஆன்மானந்தமெனச்சிறப்பெய்தற்கடையாளமென்னை? விடயானந்தம்போலான்மானந்தமுஞ் சுகசாதனமெனின், விடயானந்தத்தைவேறுநின்றனுபவிப்ப தான்மாவைப்போ லாத்மானந்தத்தை வேறுநின்றனுபவிப்பதாத்மாவாகவேண்டும். அங்ஙனங் கொள்ளில், இரண்டான்மா விருக்கவேண்டும். ஆதலினுபயவான்மாவு முளதோ வெனவுங்கூறினர். உபயவான்மாவுமென்பதிலும்மை, எதிர்மறை. உளதோவென்பதி லோகாரம், வினு. விடயானந்தத்தையனுபவிப்பதாத்மா, ஆத்மாநந்தத்தையனுபவிப்ப தாத்மாவென்புழி, அஃதயலே, இஃதுதன்னைத்தானேயெனத்துணிபுதரலால், இன்னவாறான்மாவுமானந்தசாதன மெனக்கருதல்பொருளல்லவே யெனத்துணிந்து கூறினரென்க. இத்துணிபறியா ரான்மாவை யான்மாவனுபவிக்குமாவென்றிகழ்ந்துகூறுவ தென்னவிவேகமோ யாமறிகிலம்.

(க-து.) விடயத்தைப்போலவான்மாவையுஞ் சுகசாதனமெனல்கூடாதென்பது. ஆர்க்கும், முற்றும்மை. ஆன்மாவுமென்பதி லும்மை, உயர்வுசிறப்பு. நீயாகிறசுகத்தையனுபவிப்பதற்குநீயெனல்வேறுளதோவென்பார், உன்னதானந்தமெனத்தற்கிழமையாக்கினர். (கக௫)

ககக - கவி. அ - கை.

[ஆன்மானந்தத்தையான்மாவே யனுபவிக்குமென்ற துறுதிபெறுமாறு நால்வகையேதுக்களை யிக்கவியிற்கூறுகின்றார்.]

**விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும் வெகுபிரியமான்மாவி லாம், விடயசுகம் வருபிரிய மாறிவரு மான்மாவில் வெகு பிரிய மாறாது காண், விடயசுகம் விடலுமாங் கொளலுமா மான்மாவை விடுவதெவர் கொள்வதெவர் பார், விடயசுக போகங்கள் விடுமவனை யவனல் விடப்படா தொருநாளுமே.**

(இ-ள்.) விடயசுகமதில்வருதல் பிரியமாத்திரமாகும் வெகுபிரியமான்மாவிலாம், எ - து. விடயத்தைச்சுகமெனக்கருதி யனுபவிக்குங்காலச்சுகத்தில்வரும்பயனாகியபிரியம், அப்போதுபிரியம்போற்காணுமளவினதாம், ஆன்மாவைச்சுகமெனக்கருதிச் சுருதியுத்தியனுபவங்காரணமாக வனுபவிக்குங்கால், அவ்வான்மாவிலப்போதெழும்பிரியங் கணப்போதளவினதன்று, என்றும்விடாதிருத்தலின் வெகுபிரியமாயிருக்கும்:— விடயசுகம்வருபிரியமாறிவருமான்மாவில் வெகுபிரியமாறாதுகாண், எ - து. விடயசுகங்காரணமாக மேலிட்டுவரும் பிரியமானது நிலையாது மாறிமாறி வரும், ஆன்மாநந்தத்தைவிடாதிருக்குங்கா லப்போதவ்வான்மாவில் மேலிட்டெழும்பிரிய

மான தின்னவளவினதென வுவமைகொண்டு கணித்தற்கரியதாகும். அன்றியு மென்று மாருதொருதகையதாகவுநிற்கு நிலையினதாம்:—விடயசுகம்விடலுமாங் கொளலுமாமான்மாவை விடுவதெவர்கொள்வதெவர்பார், எ - து. விடயசுகமானது வெறுத்துவிடுதற்கும் விரும்பியேற்றுக்கொள்ளுதற்குந் தகுதியதாம். இதுபோல, வான்மாவைவெறுத்து விடுவோர்யாவர், வெறுத்துவிடாதுவிரும்பியேற்பவர்யாவ ரிதனைநீயேயாராய்ந்துகாணுதி:—விடயசுகபோகங்கள்விடுமவனை யவனால்விடப்படாதொருநாளுமே, எ-து. இஃதன்றியும், விடயசுகமயமாயுள்ளபோகங்களையொருவன்வெறுத்துவிடக் கூடும், அங்ஙனமதைவெறுத்துவிட்டவன் தன்னால்தன்னைவெறுத்துத் தன்னைத்தான் புறம்பிலகற்றக்கூடுமோ? ஒருநாளுங்கூடாதே, எ-று.

விடயசுகமென்றதுபிரியமென மிகைபடக்கூறியது, விடயஞ்சுகமாயிருப்பதியல்பேனும் பிரியமியல்பாயிருப்பதுமுறையோ? நம்மிடத்தினின்றும் பிரியத்தைவிடலுங் கொளலுங்கூடும், சுகத்தைவிடயத்தினின்றும் பிரிக்கவுங் கூட்டவுங்கூடுமோ? சுகம், விடயத்துக்கியற்கைபோல்வது. பிரியம், நமக்குச்செயற்கைபோல்வதுபற்றியென்க. விடயசுகமென்றாற்போ லான்மசுகமென்ன வேண்டும். ஆதலினிங்கே சுகமெஞ்சிநின்றது. விடயசுகப்பிரியமென்றது விடயசுகமதில்வருதல்பிரியமென்றமையின், சுகம்வேறு பிரியம்வேறெனப்பெறும். ஆன்மாவில்வெகுபிரியமென்றதனால், விடயப்பிரியமற்பமெனத் தோன்ற, விடயசுகமதில்வருதல் பிரியமாத்திர மாகுமெனவும், மாத்திரம், அளவு. இங்கேயற்பத்தைக்குறிக்கின்றது. விடயமான்மாவுக்கன்னியமாகும்போது, அதன்சுகமும், அதுபற்றிவரும்பிரியமும், அன்னியமாகவேண்டுமென்றோ? அப்போது பிரியமற்பத்தன்மையையும், மாறும்புடைபெயர்ச்சியையு மேற்பதற் கிடையூறென்னையுள. அதுபோல, ஆன்மாவுக்கான்மாவன்னியமாகும்போது, அதன்சுகமும், அதுபற்றிவரும்பிரியமு மன்னியமன்றாகவேண்டும். அப்போது பிரியம் அதிகத்தன்மையையும், மாறாப்புடைபெயர்ச்சியையுமேற்பதற் கிடையூறென்னையுளவென்பார், இங்ஙனங்கூறினாரென்க. "இஃதெஞ்சியசொல்லினெய்தக்கூறலென்னுமுத்தி".

(க-து.) விடயப்பிரியஞ்சிறுபான்மை, ஆத்மப்பிரியம்பெரும்பான்மை. விடயப்பிரியம் மாறிவரும், * ஆத்மப்பிரியம்மாறாதுநிற்கும். விடயப்பிரியம் விடவுங்கொளவுமியையும், ஆத்மப்பிரியம்விடவுங்கொளவுமியையாது. விடயப்பிரியத்தைநீக்கினவன் தன்னைத்தானீக்கிவிடக்கூடுமா கூடாது. இங்ஙனமாய்வேதுக்களா லான்மாவுஞ்சுகசாதனமெனலை மறுத்தாரென்பது. எப்போதுமென்றுணர்த்த, ஒருநாளென்றுதொருநாளு மெனப்பட்டதென்க, இஃதாத்மானுபவிக்குடன்பாடன்றி விடயானுபவிக்கெவ்வனமுடன்பாடாம். உடன்படாமை விசாரியாக்குற்றமன்றி யான்மக்குற்றமன்று. தன்னைத் தான்விசாரித்துத் தெளியாதார், ஆன்மா சுகாநந்தமெனலேலாது வேறென்பார். இதுநிற்க. இதுகன்மம்பத்திபோனம்பிக்கையன்று, பிரத்திய

ட்சமாதலின்பாரென்றார். நிரதிசயானந்த மான்மப்பிரியம், ஏனையவிடயானந்தம் பிரமானந்த மன்னிியோன்னியபாவமெய்தலால்,அதிசயானந்தமெனப்பெற் றயல்பிரியமென்றாயிற்று. (கககூ)

கஎ - கவி. அ - கை.

[ஆன்மாவிடயம்போல விருப்புவெறுப்புருவன்றெனின் சிலர்
தன்னைத்தான்வெறுத்துக் கொலைசெய்துகொள்
வானேனென்றவினாவிற்கு விடையிக்கவி
யிற் கூறுகின்றார்.]

**வேகின்ற கோபங்க ளாலென்னை நான்கொன்று விடுகிறே னென்
றுசில பேர், சாகின்ற படியினாற் றன்னையே தான்கொன்று சாவனெ
னல் சங்கை யலவே, தேகந் தனைக்கொல்லு மவனால் விடப்பட்டதே
கமவ னல்லன்மக னே, யாகந் தனிற்கோப மலதுதனை யொருநாளு
மான்மா வெறுப்பதிலை யே.**

(இ-ள்.) வேகின்றகோபங்களாலென்னை நான்கொன்றுவிடுகிறேனென்றுசிலபேர், எ - து. சிலபேர்யாதேனுமோர்காரணம்பற்றி மிக்ககோபங்கொண்டென்னைநான் கொலைசெய்துகொள்ளுகிறேனென்று:—சாகின்றபடியினாற்றன்னையேதான்கொன்று சாவனெனல்சங்கையலவே, எ-து. அதற்கியைந்த முயற்சிசெய்து சாகின்றபடியினா லிதற்கென்செய்துமெனக்கேட்பையாயின், மெய்யே, இங்ஙனந்தன்னையேதான்கொலைபுரிந்துகொண்டொருவன்சாகின்றனனே யிஃதென்னைகொலோவெனச்சங்கித்தல் சரியானசங்கையல்லவே:—(எங்ஙனமெனின்.) தேகந்தனைக்கொல்லுமவனால்விடப்பட்ட தேகமவனல்லன்மகனே, எ-து. ஞானபுத்திரா! தன்தேகத்தைத்தானேகொலைசெய்துகொள்பவனெவனோ வவனால்விடப்பட்ட அவன்தேகமவனாகுமா, அவன்தேகமல்லனே ஆயின்சம்மதிவசனம்யாதெனின்:—ஆகந்தனிற்கோபமலதுதனையொருநாளு மான்மாவெறுப்பதிலையே, எ-து. அவனுக்கெழுந்தகோப மவன்தேகத்தின்மேலன்றி யவனாகியவான்மாவின்மேலன்றே, ஆன்மாதன்னைத்தான் வெறுத்துக்கொள்வதுமுண்டோ, ஒருநாளுமில்லையே,இதனையோசியாதுகூறுவதென்னைகொலோயாமறிகிலம், எ-று.

வேகின்றகோபமென்றமையின் மிக்ககோபமென்றாம். பலருக்குமுண்டாங்கோபமனைத்து மொருங்குதிரண்டுருக்கொண்டாற்போல்வதின், கோபங்களெனப்பன்மையிற் கூறியதென்க. அவன்சங்கித்ததாக விவராசிங்கித்துக்கொண்டது, விடயம்போலான்மாவும் விருப்புவெறுப்புருவாமெனலைக் குறிப்பித்தற்கு. தேகஞ் சடமகர்த்தாவாதலின் தன்னைத்தான்கொலைசெய்துகொள்ளுமோ கொள்ளாதே, ஆதலின், தேகியாகியவான்மா தன்னைத்தான் காணவகையறியர்தே தன்னைத்தானெங்ஙனங் கொலைசெய்துகொள்ளும், அங்ஙனமன்று, ஆன்மாதன்னைத்தேகமெனக்கருதிய பாவமேலீட்டா

லதனைத்தானெனத் தொன்றுதொட்டு வழங்காநிற்றலின், அதுபற்றிமிக்கொ ண்டகோபத்தா லென்னை நான்கொலைசெய்து கொள்ளுகிறேனென்றுசொல் லித் தன்னைத்தான்கொன்று செத்தானென வுலகவழக்க மதனைச்சங்கையெ னக்கொள்வதுதவிர்கவென்பார், தன்னையேதான்கொன்றுசாவனெனல் சங் கையலவேயெனவும், ஆன்மா தேகமானல் தேகத்தைதமாய்த்துக் கொள்வது கூடும், அங்ஙனமன்றே. இதுபற்றித் தேகமவனல்லனெனவும், மூடத்தனத் தாற் றன்கோபத்தைத் தன்தேகத்தின்மேற் காட்டினதன்றித் தன்மே லன்றென்பார், ஆகந்தனிற்கோப மலதுதனையொருநாளுமான்மாவெறுப்பதி லையேயெனவுங்கூறினர். விடயமல்லாதது பிரமம், அதற்குரியவானந்தவிலக் கணத்தை யான்மாவுக்குமுரியதென மாட்டிநடத்தலின், இதுமாட்டெறிந்தொ ழுகலென்னுமுத்தி.

(க-து,) ஒன்றையொன்ருகக்கொண்டு சங்கிப்பதுதவிர்கவென்பது. சங் கையென்ருலென்ருேர்பிறிதியிருக்கின்றது. தன்னையே தான்கொன்று சாவ னெனல் மயக்கவணி. (கக௭)

கக௮ - கவி. ௮ - கை.

[ஆன்மாவேபிரியவடிவமெனக்காட்டப் பிரியபேதங்களை யிக்கவியிற்கூறுகின்ருர்.]

தாகப் படும்பொருளி லும்மகன் பிரியமாந் தனயனிலு முடல்பி ரிய மா, மாகத்தி லும்பிரிய மிந்திரிய மாங்கரண மதனிலும் பிரிய மு யி ரா, மேகப் பிராணனிலும் வெகுபிரிய மான்மாவி லிந்தவான் மா முக்கி ய, மூகத்தி னுற்கௌண மித்தைகர்த் தாமூன்று மொன்றினெ ன் றதிகமக னே.

(இ-ள்.) தாகப்படும்பொருளிலும்மகன்பிரியமாந் தனயனிலுமுடல்பிரிய மாம், எ-து. எவரும்பிரியப்படற்கையந்தது தனம், அந்தத்தனத்திலுமிக்கது சுயபுத்திரப்பிரியம், அந்தச்சுயபுத்திரப்பிரியத்திலுமிக்கது, தன்தேகப்பிரியம்:- ஆகத்திலும் பிரிய மிந்திரியமாங்கரண மதனிலும் பிரியமுயிராம், எ-து. அந்த த்தேகப்பிரியத்திலுமிக்கது பஞ்சேந்திரியப்பிரியம் அந்தப்பஞ்சேந்திரியப் பிரி யத்திலும் கரணமாகியமனம்பிரியமாகக்காண்கை, அந்தமனம்பிரியமாகக் கா ண்பதிலுமிக்கது, உயிர்பிரியமாகக்காண்கை:—ஏகப்பிராணனிலும் வெகுபிரிய மான்மாவி லிந்த வான்மாமுக்கியம், எ-து. அந்தத் தனதொன்ருனவுயிர்பிரிய மாகக் காண்கையிலுந் தனதான்மப்பிரியம் மிகப்பெருக்காக்காண்கை, ஆதலி னிந்தவான்மாவேயெவற்றினுமுக்கியமாகும் :—ஊகத்தினுற்கௌணமித்தை கர்த்தாமூன்று மொன்றினென்றதிகமகனே, எ-து. ஞானபுத்திரா! இவற்றை யெல்லாமனத்தினுலூகிக்குங்கால், கௌணம், மித்தை, கர்த்தா, எனவாத்மா

மூன்றுவகையினதாகப்பெயர்பெறக்காணும், இம்மூன்றுவகையு மொன்றுக் கொன்றதிகமாகக்காணும், எ-று.

தனம், மகன், உடல், புறக்கரணம், அகக்கரணம், உயிர், ஆன்மா, எனப் படுவனவாகியவிவவேழும், பிரியத்திலொன்றுக்கொன்றதிகமேனும், ஆன்மா மகாமுக்கியமென்றதனு லேயிவையவாறும், அமுக்கியமெனப்பெற்றும். இனிஇவ ற்றையெல்லாஞ்சுருக்கி நான்காத்மாவாக்கப்புகுந்தா ரிக்கவியில் தொகையாக மூன்றைக்கூறி யொன்றுக்கொன்றதிகமென்ருரென்க. ஒருவன் தன்வீடுபற்றி வேவதையசதியிற்காணமுன்னர் தன்பணப்பெட்டியை யெடுக்கத்துணிவன் கூடாவிடத்தில், தொட்டிலிலுறங்குந்தன்மகனையெடுக்கத்துணிவன். கூடா விடத்தில், தன்னுடலைப்பாதுகாக்கத்துணிவன். கூடாவிடத்தில், கண்முதலிய தன்பொறிகட்கிடையூறுவராதுகாக்கத்துணிவன். கூடாவிடத்தில், மனமுதலி யவகக்கரணங்கட் கிடையூறுவராதுகாக்கத்துணிவன். கூடாவிடத்தில், தன்னு யிரையேனுங்காக்கத்துணிவன். கூடாவிடத்தில், முடிவில்தானகியவான்மா வி டையூறெய்தாதுகாக்கத்துணியாநிற்பன். ஆதலி னிம்முறைவந்தவாறிவ்வேது பற்றியென்க.

(க-து.) உயிர்க்கியற்கையெனப் பிரியபேதங்களை நிரையேயெடுத்துக்கா ட்டினுரென்பது,இங்ஙனங்காட்டியது; தனமாதிபிரியங்களிலொவ்வொன்றிற் குநட்டமெய்தத் தனக்குவந்ததாக மரணமெய்தலுமுளவென்றுணர்த்தற்கெ ன்க. இங்ஙனமாயபிரியபேதமனைத்து மாத்மப்பிரியலேசமாதலின், தற்பிரியத் துக்கிடையூறின்றென்க. தனமாதிகளிலுள்ளவும்மைகளிழிவுசிறப்பு. கரணத்தி லுமென்பதும், இவற்றிலென்பதிற்பெயருஞ்சாரியையுந்தொக்கன. ஆக்கவினை க்குறிப்புமுற்று மூன்றுவிரியும்மூன்று தொகையுமாயிருத்தலினனைத்தையுந் தொகையாக்கி முடிவில்முற்றுக்கியுரையிட்டாம். இதுசிறப்புப்பற்றியென்க.

ககக - கவி. அ - கை.

[நான்காத்மாவெனற்கும், ஒன்றுக்கொன்றுமுக்கியமெனற் கும், அசைரமிக்கவியிற்கூறுகின்ருர்.]

கெடலான பொழுதிவன் காணிக்கு மகனை கௌணவான்மா முக்கி யம், விடலாத வுடலம் பரிக்குநா ளுடலான மித்தையான் மா முக்கி யந், திடமான நன்மைகதி வேண்டினுற் கர்த்தனுஞ் சீவவான் மாமுக்கி யஞ், சடமாயு முத்தியினில் ஞானவான் மாவான தானே மகாமுக்கி யம்.

(இ-ள்.) கெடலானபொழுதிவன்காணிக்குமகனை கௌணவான்மாமு க்கியம், எ-து. தன்னுயிர்க்குக்கெடுதிவந்தபோது தனதாஸ்திக்குரியோன் மக னுதலா லவன்கௌணவான்மாவெனப்படுவன், அந்தவசரத்திற்கௌணவா ன்மாவே முக்கியமாகும்:—விடலாதவுடலம்பரிக்குநாளுடலானமித்தையான்

மாமுக்கியம், எ-து. தன்னைவிட்டுநீங்காததனதுடலைத்தானெனச்சுமக்கும்போது தானெனற்குரியதிவனுக்குடலாதலா லவ்வுடல்மித்தையான்மாவெனப்படும், அந்தவவசரத்தில் மித்தையான்மாவேமகாமுக்கியமாகும்:—இடமானநன்மைகதிவேண்டினுற் கர்த்தனுஞ்சீவரான்மாமுக்கியம், எ-து. இடையிலழியாதுறுதியாயுள்ள நற்கதியடையவிரும்பினுல், அப்போதுதானொருமுதலாகின்றதற்குரிய வரியமுயற்சிசெய் தப்பலனை யனுபவித்தற்குக் கர்த்தத்துவமாயிருப்பவன்சீவனுதலால், அந்தவவசரத்திலச்சீவன் சீவவான்மாவெனப்படுவன், அதனுலந்தசீவவான்மாவே மகாமுக்கியமாகும்:—சடமாயுமுத்தியினில் ஞானவான்மாவானதானேமகாமுக்கியம், எ-து. சடத்துவமாயுள்ளவனைத்துமொருங்கேநசித்தற்கிடமாயதுமுத்தியாதலா லந்தமுத்தியில்ஞானுகாரமாயிருந்ததன்னை யதுவாயனுபவிப்பவன் ஞானுத்மாவாதலால், அந்தவவசரத்தில் ஞானுன்மாவெனப்படுவன், அதனுலந்த ஞானுன்மாவானதானே மகாமுக்கியமாகும், எ-று.

காணி, உரிமை. உரிமையாவது, ஆஸ்தி. இதுபற்றியாஸ்தியென்ரும்.தனதுரிமைக்குமகன்பாத்தியனுதல், தனதந்தத்திலாதலால்,கெடலானபொழுதென்பதற்கு, தன்னுயிர்க்குக்கெடுதிவந்தபொழுதென்றுரைகொண்டாம். விடலல்லாதவென்றது, விடலாதவென்ருயதிடைக்குறை. மகன்முக்கியமாயவிடத்துக் கௌணவான்மாவெனவும், உடலமுக்கியமாயவிடத்து மித்தையான்மாவெனவும், சீவான்மாமுக்கியமாயவிடத்துக் கர்த்தான்மாவெனவும்,ஐக்கியமுத்திக்கான்மா முக்கியமாயவிடத்து ஞானுன்மாவெனவும்பெயர்வந்ததென்க. இந்தவவசரமெல்லாமான்மாவாயிருத்தலி னிந்நான்கையுமான்மாவென்றதென்க. சடமாயுமுத்தியினிலென்றதனுல் திரிபுடியற்றதென்ருயிற்று, இங்ஙனமாயது பற்றியயிக்கியமுத்தியென்ரும். அம்மூன்றையுமான்மாவென்ற தவசரம்பற்றியும், தானுகியவான்மாவைஞானவான்மாவென்ற தெதார்த்தம்பற்றியுமென்க. ஆதலினம்மூன்றும், பூர்வபட்சம். இது சித்தாந்தம்.

(க-து.) ஞானவான்மாவேமுக்கியமாமெனற் கிங்ஙனங்கூறினுரென்பது. பிரியபேதங்காட்ட நான்கான்மாவென்றது; ஞானவான்மாவைக்காட்டினும் பிரியவடிவம்வேறின்றெனநாட்டியதை வைப்புறுத்தற்கென்க. ஐக்கியமுத்தியென்றது; நிரதிசயானந்தத்தை. வேறெனல் பிதற்றல்.இதில்முக்கியநான்கில், ஆக்கவினையெஞ்சிநின்றன. (கக்க)

## கஉ0 - கவி. அ - கை.

[விருப்புமுதலியமூன்றுமயமாகாதவானந்தமே ஆன்ம சொரூபமென்பதை யிக்கவியிற்கூறுகின்ரூர்.]

புவியுமனு கூலமெனி விட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி லும்வெறுப் பா, மூலகிருவகையுமல் லாதபுல் லாதியி லு

தாசீன மாமாத லான், மலினமறு சின்மயன் பல்வகையு மிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிக ழா, னலகிலா னந்தவடி வாகுமுன் சொரூபத்தை யாராய்ந்து பார்மைந்த னே.

(இ-ள்.) புலியுமனு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி னும்வெறுப்பாம், எ-து. புலியேனுநமக்கு நயமுண்டாதற் கனுகூலமாயிருக்குமாயின் விருப்புருவாகும், தந்தைக்குவிரோதமாநடக்கில் புத்திரனேனும் வெறுப்புருவாகும்:—உலகிலிருவகையுமல்லாத புல்லாதியி லுதாசீனமாமாத லால், எ-து. உலகின்கண்ணிவ்விரண்டு வகையுமல்லாத புல்முதலியவைகளி லிருப்பது தாசீனமாகும், ஆதலின்:—மலினமறுசின்மயன்பல்வகையுமிப்படி மகிழ்ச்சியில்விருப்பமிகழான், எ-து. களங்கரகிதமானஞானமே வடிவாவி ளங்குமான்மாவென்போன், இங்ஙனமவைபோலப் பலவிதத்தானு மானந்த மென்பது சற்றுமில்லாத விருப்பமுதலியமூன்றுனுமவமதிப்பெய்தான் :— அலகிலானந்தவடி வாகுமுன் சொரூபத்தை யாராய்ந்து பார்மைந்தனே, எ-து. அந்தவான்மா நீயாதலா னீயேதடையற்ற வானந்தவடிவமென்பதாகும், ஞானபுத்திரா ! இதிலையமுளதே லுனதெதார்த்த வடிவத்தைச் சுருதி யுத்தி யனுபவங்காரணமாக நீயேயாராய்ந்துதெளிந்துகாணுதி, எ-று.

அனுகூலத்தாற்புலியும்விருப்புருவாகவும், பகைத்தலாற்புத்திரனும் வெறுப்புருவாகவும், புல்முதலியவை யிவ்விருவகையுமல்லாததா லுதாசீனவடிவாகவுங் காணும். உதாசீனம்; விருப்பு வெறுப்பாயிருக்கை. புலியுமென்பதிலும்மை, இழிவுசிறப்பு. புதல்வனெனினு மென்பதிலும்மை, உயர்வுசிறப்பு. ஆன்மா தன்றனுணருந் திரிசியத்தில் விருப்பாதி மூன்றுமன்றித் தன்னிடத்தின்று. எனவே, தானிம்மூவுருவாகக்காணப்படாதென்பதாயிற்று. தற்றெரிசனத்திலிவைமூன்றுந் தன்பாலின்மையின் மலினமறு சின்மயன்பல்வகையு மிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழானெனவும், இம்மூன்றுருவுமாகத்தானியைதற்பாலதன்றுமையி னன்மாவலகிலானந்தவடிவாகுமெனவும், நீயுமான்மாவாதலா லலகிலா னந்தவடிவநீயே யிதனைக்கண்டு தெளிதியென்பார், உன்சொரூபத்தை யாராய்ந்துபாரெனவுங்கூறினர். இது கன்மகாண்டம்பத்திகாண்டம் போல்வதன்று, ஞானகாண்டமாதலி னிப்போதேயுள்ளங்கை நெல்லிக்கனிபோல விவ்வருத்தங்களை யனுட்டித்துக் காணலாம். தானாகிய வான்மா சத்துஞ்சித்துமன்றி யானந்தம்வேறென்பார், தன்னைத்தான்காணுதார். இவர் தன்னிழப்பு, அருட்டெரிசனம், பரைதெரிசனம், ஆனந்தோதயம், ஆனந்தாதீதமெனத் தனக்கயலாகக்கண்டு வாளாபோயினர். இவர்களெல்லாங் கிரியாயோகக்குறியினரன்றிஞானியரன்று. இதுநிற்க.

(க-து.) ஆன்மா, விருப்பு, வெறுப்பு, உதாசீனத்துளொன்றன்றுதலி னானந்தவடிவமேயென்பது. இனிக்கூறப்புகுமஷ்டவிதானந்தத்து ளிதாத்மானந்தமாதலி னதற்கிதுவே விதியெனக்கொள்ள வேறுகூறுதொழிந்தனர். இஃது அைத்தா மென்றலென்னுமுத்தி. தன்னிலக்கணமினையறெளிதறு

ணர்க. தன்னைத்தரிசியா வளவுந் தற்பிரிய மிம்மூவகையாகக் காணுமென்பத ருத்தாபத்தி. அனைத்து மாத்மப்பிரதிபலனமாதலி னெல்லாச்சுகமு மான்மா வேயெனப் பொருள்கொள்ளினு மமையும். (கஉ௦)

கஉக - கவி. அ - கை.

[தனவானந்தமுதலியவானந்தபேதங்கள்பலவென்றீ ரத்தொகை யின்விபரத்தைத் தெரிவிக்கவேண்டுமெனவினவ அதற்கு விடையிக்கவியிற் கூறுகின்றார்.]

மானஞ் சிறந்தகுரு நாதனே யானந்த வகைகளைத் தனையென் னிலோ, ஞானந் திகழ்ந்தபிர மானந்தம் வாசனா னந்தம்விட யான ந்தமென், றானந்த மூன்றுவித மெட்டுவகை யென்பர்சில ரவ்வைந்து மிதிலடக் கம், யானந்தவகைசொலக் கேள்மைந்தனே யெட்டு மஃ தின்ன தின்னதென வே.

(இ-ள்.) மானஞ்சிறந்தகுரு நாதனேயானந்த வகைகளைத்தனையென் னிலோ, எ-து. பெருமையிற்சிறந்த சற்குருநாதனே, ஆனந்த வகைகள்பல வெனக்கூறினீரே யவையாவையெனில்:—ஞானந்திகழ்ந்த பிரமானந்தம் வா சனானந்தம் விடயானந்தமென்றானந்தமூன்றுவிதம், எ-து. ஞானமேவடிவா விளங்குகின்ற பிரமானந்தம், வாசனானந்தம், விடயானந்தம், எனவானந்த மூன்றுவகையாம் :—எட்டுவகையென்பர்சிலரவ்வைந்துமிதிலடக்கம், எ-து. சிலரெட்டுவகையென்று சொல்லுவர், அந்தவைந்து வகையு மிம்மூன்றிலடக் கமாம் :— ஆனந்தவகைசொலக்கேள் மைந்தனேயெட்டு மஃதின்ன தின்ன தெனவே, எ-து. ஞானபுத்திரா ! அந்தவெட்டு விதானந்தங்களு மின்ன தின்னதென்று தனித்தனியே சொல்லப்புகுது மதனைக்கேளுதி, எ-று.

சமஷ்டி யுபாதி குணந் தொழில்காரணமாகப் பகவத்திலேகூறுகிற்பர், மதத்தர். மகாவாக்கியமும், சத்துக்களும், இந்நூலாசிரியரும், ஞானமே பிரமமெனக் கூறுகிற்பர். அஞ்ஞானமேவஸ்துவெனிலெவர்க்கு முடன்பாட ன்று, ஞானமேவஸ்துவெனலை மறுப்பதென்னை. இதுநிற்க. அவ்வைந்துமெ ன்றது ; ஆத்மானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், அத்துவிதானந்தம், ஞானானந்தமென்பவற்றை. இதிலடக்கமென்றது, பிரமானந்தத்திலாதலா லொருமையிற் கூறலாயினர். ஏனையவைந்துமெனற்குப்பதிலாக அவ்வைந்து மென்றார். இதிலெனப் பொதுப்படக்கூறியிருக்கப் பிரமானந்தத்தி லெனக் கொண்டது; ஏனைய விரண்டினம் சங்களன்றாதல்பற்றியென்க. எட்டுமிக் கவியிற்கூறாது மறுகவியிற் கூறப்புகுவதால், அஃதெனப்புறச்சுட்டாக்கினும். எட்டுமென்பது தொகையொருமைபற்றி யஃதென ·வொருமையிற்கூறினார். எட்டுவகையென்பர்சிலரென்றதனால், மூன்றுவிதமென்றது பலரெனப்பெற் றும். எட்டுமென்பதிலும்மை, முற்றும்மை. இனி வருத்துக்காட்டப்புகுத லா லிதிதொகுத்துச் சுட்டலென்னுமுத்தி.

(க-து.) ஆனந்தபேதங்களையெல்லாஞ் சுருக்கித்தொகையாகவெட்டெ ன்பது. (கஉக)

கஉஉ - கவி. அ - கை.

[மேலிட்டவிதானந்தமென்றா, ரதன்வகையை யிக்கவியிற் கூறுகின்றார்.

போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரமசு க மா, மோகத் தனந்தலிற் சுகம்வா சனைச்சுக முழுப்பிரிய மான்மசு க மாம், யோகத்தி லுளதுமுக் கியசுகமு தாசீன முற்றசுக நிசசுகம தா, மேகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கிய மெழுந்தசுக ஞான சுக மே.

(இ-ள்.) போகத்தில்வருசுகம் விடய சுகநித்திரைப் போதுளதுபிரமசுக மாம், எ - து. போகங்காரணமாவெய்துஞ்சுகம் விடயசுகமெனவும், நித்தி ரையெனற்குரியதியாதோ வதனிலெழுஞ்சுகம் பிரமசுகமெனவும் :— மோக த்தனந்தலிற்சுகம்வாசனைச்சுக முழுப்பிரியமான்மசுகமாம், எ - து. மயக்க மாயுள்ள வுறக்கத்தெழுஞ்சுகம் வாசனுசுகமெனவும், எங்குந்தனதுபிரியவடி வாகக்காணுஞ்சுக மான்மசுகமெனவும்:—யோகத்திலுளது முக்கியசுக முதா சீனமுற்றசுகநிசசுகமதாம், எ - து. சமாதிகாரணமா வெழுஞ்சுகமுக்கியசுக மெனவும், உதாசீனங்காரணமாவெழுஞ்சுகம்நிசசுகமெனவும் :— ஏகத்தை நோக்கலத்துவிதசுகம் வாக்கியமெழுந்த சுகஞானசுகமே, எ - து. தான்மாத் திரமாமிஞ்சிநிற்றலை நோக்குவதாலெழுஞ்சுகமத்துவிதசுகமெனவும், மகா வாக்கியங்காரணமாக வெழுந்தசுகம்ஞானசுகமெனவும் பெயர்பெறும், எ-று.

இனிஇவற்றைத் தனித்தனிகூறப் புகுதலா லொவ்வொன்றினிலக்கண ங்களையாங்காங்கு கூறுதும்; போகம், இரண்டொன்றாக விணைதல், அவ்வவற் றையுமவவவ் விலக்கணங்களாற் காணலாம். (கஉஉ)

கஉ௩ - கவி. அ - கை.

[அஷ்டவிதானந்தங்களையுந் தனித்தனிசொல்லப்புகுவார், இக்கவியில்விடயானந்தவிலக்கண மிதுவெனக் கூறுகின்றார்.]

வேறு.

இவ்வா றுரைசெய்த சுகபே தங்களி னியல்பா மவைசொல மக னே கே, ளவ்வா னனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ் சயா த்தி லுறுநே ரஞ், செவ்வா மனமக முகமா மதிலொளிர் சித்தின் சுக நிழல் சேருங் கா. ணவ்வா றிவனுள மகிழ்வா மனுபவ மதுதான் விட யசு கா நந் தம்.

(இ - ள்.) இவ்வாறுரைசெய்த சுகபேதங்களி னியல்பாமவைசொலமக னேகேள், எ-து. இங்ஙனந்தொகைவகையாகக் கூறிய வானந்தபேதங்களுக

இயல்பாயுள்ள விலக்கணங்களைத் தனித்தனியே விரிவாகயாங்கூற ஞானபுத்திராநீகேளுதி :—ஒவ்வாநனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ் சயனத்தி லுறுநேரம், எ-து. இயைதற்கொண்ணுதபந்தசாக்கிரத்தில் விவகாரநிமித்த முழல்வோன் தனதல்லல்கெடவுறங்குதற்கமைத்த பஞ்சணைமெத்தையில்விழி துயிலுங்கால் :— செவ்வாமனமகமுகமாமதிலொளிர் சித்தின்சுகநிழல்சேருங்காண், எ-து. தடையின்றி மனமானது சகாகாரமாதலைவிட் டகமுகமாகநழுவும், அப்போதம்மனதி லறிவானந்தத்தின்சாயைபடும் :— அவ்வாறவனுளமகிழ்வா மனுபவ மதுதான் விடய சுகானந்தம், எ-து. அங்ஙனம்படுநெறியா லவனுள்ளமானது சுகாகாரமாகக்காணும், அங்ஙனங்காண்பதே தினுனுபவமாம், அந்நெறித்தாயசுகமே விடயானந்தமெனப்படும், எ-று.

சுகமெனக் கருதற்கொவ்வாததுபற்றி யொவவாநனவென்றார். இந்நனவல்லலைத் தரற்குரித்தாதலிற் பந்தசாக்கிரமென்றும். உறங்குஞ் சயனமதுறுநேரமெனப்பாடமுமுண்டு. உறக்கம்வரும்போது மனமானதியல்பாகவே தினந்தோறுஞ் சகாகாரத்தினின்று நழுவலும், சுகாகாரமாதலு மெவ்வுயிர்க்குமனுபவமாயிருக்க, இதனைவேறுவழியில் வருத்தியுரைகோடல்பொருந்தாது. பொருந்துமெனின், விடயானந்தமெனவும், உறங்குஞ்சயனத்திலுறுநேரமெனவுங் கூறுவதெற்றிற்கு, ஆதலிற்கூடாதென்க. முன்கவியில்போகத்தில் வருசுகமென்றார். போகமாவது, இணைதல். இங்கேமனமுஞ் சிதானந்தசாயையுமிணைதலே. விசாரத்தெளிவால் மனஞ்சகாகாரத்தினின்று நழுவிச்சுகாகாரமாதலொன்று, மூடத்தாலாதலொன்று, இங்கே விசாரத்தாலெனின், ஒவ்வாநனவினி லுழல்வானிடர்கெட விசாரத்தாலுறங்குறுநேரமென்றிருக்கவேண்டும். தொக்கியிருக்கின்றதெனின், உறங்குஞ்சயனத்திலுறுநேரமென்பானேன். இங்கேசயனமென்றதாசனங்கட்டலையெனின், அப்போதடயோக மென்னல்வேண்டும். அதுதானெனில், உரையிற்கோடலென்னுமுத்தியா லங்ஙனங்கொள்ளினு மொறுவாறு பொருந்தும். பொருந்துமேனும், இதுவிடயங் காரணமாகவந்த சுகமன்றே. குண்டலிசத்தியில் மனம்லயித்தலா லிந்தக்குண்டலிசத்தியுமோர்விடயமன்றோ ? மனலயமாதற்கிடமாமேயெனின், தினசுழுத்திபோல்வதாமதனுல்விடயசுகமென்றார். மனந்ததாகாரமாக வதனுலெய்துஞ்சுகமெனக்கூறுமையின் விடயசுகமே யென்க.

(க-து.) விடயானந்தவிலக்கண மினையதெனக்கூறினுரென்பது.

கஉசா - கவி. அ - கை.

[பிரமானந்தவிலக்கணமினையதெனவிக்கவியிற் கூறுகின்றார்.]

ஈனந் தருசுக விடயந் திரிபுடி யிடரா மெனமன மசையாமற்
சேனந் தனது குலாயந் தனில்விழு செயல்போ னித்திரை செறிசீவன்
ஞனந் தமில்பர னுடனென் றுவனொரு தனையல் லதுபிற நினையா ம
லானந் தம்மய மாவன் சுகமிகு மதுதா னுயர்பிர மானந் தம்.

(இ - ள்.) ஈனந்தருசுகவிடயந்திரிபுடி யிடராமெனமன மசையாமல், எ-து. பிறப்புவீடென்னுமிரண்டினு ளிழிவாயுள்ளபிறவியையேதரற்பாலதாகியசுகமயம்போற்றோற்றும்விடயந் திரிபுடியாயிருப்பதாலவைதுன்பமேயென விசாரத்தாற்றுணிந்து மனஞ்சற்றுசலியாதுநிற்க:—சேனந்தனது குலாயந்தனில்விழு செயல்போ னித்திரை செறிசீவன், எ-து. ஆகாயத்திற் பறக்கும் பருந்து தனதுகூட்டிலனுத்துவிழுஞ்செயல்போல வுறக்கத்தபேதமாக வமைந்தசீவனென்போன்:—தானந்தமில்பரனுடனென்றுவனொருதனை யல்லது பிறிதினையாமல், எ-து. தானிங்ஙனமாயநிலையதென வளவைகளாற் கணித்தற்கரிய பிரமத்தோடிரண்டறக்கலக்காநிற்பன், தெளிந்தவிடத்துத் தனித்து நின்றது தான்மாத்திரமாதலா லங்ஙனந்தனித்துநின்றதன்னைமாத்திரமன்றி யயலென்பதுளதாகவதனை யோர்பொருளெனக்கருதாது:—ஆனந்தம்மயமாவன்சுகமிகுமதுதானுயர்பிரமானந்தம், எ - து. ஆனந்தமயமாகவிளங்குவன். அங்ஙனமாகமீக்குள்ளவவ்வானந்தமே மேலாயபிரமானந்தமெனப் படுவதாம், எ-று.

ஈனம், குணவாகுபெயர். விடயந் திரிபுடியிடராமெனமன மசையாமனித்திரைசெறிசீவனென்பதினுல், இங்கே நித்திரையென்பது நனவிற்சுழுத்தி. சுத்தகேவல நிலையென்பாருமுளர். தனக்கயலென்ப தொன்றுமின்றியனைத்துஞ் சின்மாத்திரமாவிளங்கப்புரிந்த தந்நெறித்தாச் சலியாதுநிற்கவேண்டிவரும். யாதினுலெனில், விடயந்திரிபுடி யிடராமெனக் கண்டதுபற்றி. அங்ஙனஞ்சலியாதுநிற்றலே சுத்தசகலம். இந்நெறித்தாயசுத்தசகலமயமாகவே, மனமெனலேது, அதுசலித்தலெனலேது? இன்றுமையின், மனமசையாதசுத்தசகலமயமாநிற்புழி யுறக்கம்வருமன்றே, அவ்வுறக்கந்தான்சுத்தகேவலமெனப்படுவது. இந்நெறித்தாயவன்சீவனுதலால், நித்திரைசெறிசீவனெனவும், அந்நித்திரை, சுகமேலீடு. அச்சுகமேலீடு, மலரகிதமாதலாற்பரனெனவும், அப்போது சீவனந்தச்சுகாகாரமாய்விடுவனுதலால், பரனுடனென்றுவனெனவும், அங்ஙனஞ்சுகாகாரமாநின்றவன்சீவனுதலானும், தன்னையன்றி வேறுகண்டிலனுதலானும், ஒருதனையல்லது பிறநினையாமலெனவும், ஆனந்தமயமன்றித் தான்வேறுகாரமாதற் கிடமின்மையின், ஆனந்தமயமாவனெனவும், இந்நிலைத்தாய அவசரத்தையே ஞானநூலனைத்தும் பிரமானந்தமெனலானும், இப்பெயரையேற்றற்பாலதாதலானும், சுகமிகுமதுதானுயர்பிரமானந்தமெனவுங்கூறினர்.

(க-து.) பிரமானந்தவிலக்கண மினையதெனக்கூறியதென்பது. ஆனந்தமயனுமாவனெனப் பாடமுமுண்டு. திரிபுடி; ஞாதுரு, ஞானம், ஞேயமென்பன, ஒருதனையென்றதனுல், தான்மாத்திரமெனப் பொருள்கொண்டாம். திரிபுடியிடராமென்றதனுல், உபமானத்தி லனுத்துவிழு செயல்போலென்றும். அளவைகள், அஷ்டவிதப்பிரமாணங்கள். முன்கவியில், ஆலிங்கனசுகத்

தை விடயானந்த மென்னுதது, நிலைசுழுத்தி சுகம்போ லாறுதல் செய்யாமை பற்றி யென்க. இக்கவியிலும்; நித்திரையெனல், நனவிற்சுழுத்தியை. (௧௨௪)

௧௨௫ - கவி. அ - கை.

[ஐயமுறுதற்கின்னும்பிரமானந்த மிதுவெனயதென விக்கவியிற்கூறுகின்றார்.]

தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி துயில்வோர் க, டாங்கும் மலரணை நன்று கச்சிலர் சம்பா திப்பது தானசு கந், தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா தமளிசெய் பொழுதே போ, லாங்குள் வெளிகளு மறியாவனுபவ மதனு லதுபிர மானந் தம்.

(இ - ள்.) தூங்குஞ்சுகமதுபிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழிதுயில் வோர்கள்:—நனவிற்சுழுத்திசுகத்தைப்பிரமானந்தமென்பது மகாவாக்கியார்த்தமேயன்றி வேறன்றுமெனக்கொள்வோர் தூங்காமல்தூங்குபவர்:—தாங்கும்மலரணைநன்றாகச்சிலர் சம்பாதிப்பதுதானசுகம், தீங்குந்நன்மையுமாண்பெண்முறைமையுந் தெரியாதமளிசெய்பொழுதேபோல், எ-து. சிங்கம்போன்றமைத்தகருவிகளாற்றாங்கப்பெற்ற புஷ்பசயனத்தைச் சிலர்நன்றாகச்சம்பாதிப்பதுஸ்தானசுகம்வேண்டியாதலால், அம்மலரணையி லிதுதீமையெனவும், நன்மையெனவும், ஆண்பெண்முறைமையெனவு முணரும்பாகுபாடுசற்றுந்தெரியாதுறங்குமாறுபோல:—ஆங்குள்வெளிகளு மறியாவனுபவ மதனுலதுபிரமானந்தம், எ-து. அந்தநனவிற்சுழுத்தியின்கண் ணகம்புறமிவையவெனப்துந் தெரியாதுறங்குமனுபவமாம், அவ்வனுபவத்தாற்கணிக்குஞ்சுகமெதுவோ, அதுவேபிரமானந்தமெனப்படுவதாம், எ-று.

விழிதுயில்வோர்கள்தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல்சுருதிப்பொருள், எனக்கொண்டுகூட்டித் தூங்காமற்றூங்குவோர் தாமங்ஙனந்தூங்குங் காலெழுஞ்சுகம் பிரமசுகமாமெனக்கூறுவது சுருதிப்பொருளாம், வேறன்றெனப் பொருள்கொள்ளினுமமையும். எனவே, வேதார்த்தமும், மகான்கள்பிரமமெனலு மொக்குமென்பதாயிற்று. பிரமச்சுகமெனல், எழுவாய். சுருதிப்பொருள் பயனிலை. இதுகாறு மிவ்வெல்லைகடவாமைக் கெழுவாய்பயனிலை கூறியதென்க. தாங்குமென்னும் வினைக்கெழுவாய் தொக்கியிருப்பதால் சிங்கம் போன்றமைத்த கருவியென்றும். தாங்கும்மலரணைநன்றாகச்சிலர் சம்பாதிப்பது தானசுகம்பற்றியாதலால், அதிலுறங்கில், நன்மைதீமையாண்பெண்முறைமையாதிக ளெங்ஙனந்தெரியும்,தெரியாதாதல்பற்றி யிவ்வுவமைவேண்டிக் கூறினர். மலரணை மிகத்துயில்விளைத்தற்குத்தானமாதலி னச்சுகம்வேண்டி நன்றாகச்சம்பாதிப்பதென்றொன்க. பலவொன்னுது சிலவொன்றது, நிரந்தரமிங்ஙனஞ்செய்வோர் மிக்கசெல்வத்தார் சிலராதல் பற்றியென்க. தானசுக

மென்றது; இவ்விடத்திற்கியைந்த காரணப்பெயராம். யூகசுகமெனின், யூக மெனற்குப்பொருள்கள், ஓர்புல், கருங்குரங்கு, காந்தி, தருக்கம், படை, படைவகுப்பு, பெண்குரங்கு, முசு, என்பன. இதுபலபொருளொருசொல். இவற்றுள் யாதிங்கே பொருந்தும். பொருந்தாமையின், ஐயிருகுற்றத்துள் மாறுகொளக்கூறலெனலே யேற்கும். இதற்கென்செய்தும். சான்றோ ராட்சி யெனின், பொருத்தமின்றி யிராது. சம்பாதிப்பதுதா னூகமெனப் பாடங்க ளிருக்கின்றன வெனிலோ; ஊகமென்பது, உத்தி, குரங்கு, நினைவு, புலியென் பன. இதுபலபொருளொருசொல். இவற்றுளெவ்வருத்தம்பற்றியம்மொழிவந் தது. யுத்திபற்றியெனின், உபமானவுபமேயசாதாரணதர்ம மினையதென்றறி யார்போலும். உபமானத்தையுபமேயமாக்கலாமா? அதைச் சுருதியுத்தியனு பவத்துள், யுத்தியனுபவமாக்கலாமா? தாங்கும்மலரணை நன்றாகச்சிலர்சம்பா திப்பதுதானூகம், தீங்குந்நன்மையுமாண்பெண்முறைமையுந் தெரியாதமளி செய்பொழுதே போலெனல் காறுமுவமையன்றோ? இதற்குவமேயம், ஆங் குள்வெளிகளுமென்பது முதலறியாவனுபவமென்பதுகாறும். தானசுகமெ னப்பிறிதிகளிருப்பதென்னை? அங்ஙனமர்கவு மிங்ஙனமாகவும் பிறிதிகளிரு க்கி னொருதலையாகத் துணிதலை நோக்குதும். தானசுகமெனினும், தானூக மெனினு முபமேயத்தொடர்பன்று, உபமானத்தொடர்பு. இவ்வரம்புகடந் துரைகூறுவது, கல்விவரம் பறியார்போலுமே யிதற்கென்செய்தும். கவிக்கு ற்ற மன்று, கவியிலக்கணங்கல்லா துரைகூறு நமதுகுற்றம். ஆதலின் தானசுக மெனலேயையமின்றிப் பொருந்தும். இலக்கணமில்லாக்கல்வி யுப்பில்லா வுணவுபோலும் அதையாதரவாகக்கொண் டுரைகூறலென்னுரை. பசையற்ற தாம். வெறுவாய்மெல்வதுபோலும். சுருதியுத்தியனுபவங்காண்ட லுபமேய த்திலன்றி யுபமானத்திலன்று. உபமேயம்விளங்கக்கூறுவ துபமானமாதலின் கூடாதென்க. தூங்குஞ்சுகமதுபிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழி துயில் வோர்களென்பது சுருதிப்பிரமாணமாம். தாங்கும்மலரணை நன்றாகச்சிலர் சம் பாதிப்பது தானூகமெனக்கூறி யிதுயுத்திப்பிராமாணமென்பதுபொருந்தாது. ஆங்குள்வெளிகளுமறியாவனுபவமென்ற தனுபவப்பிரமாணமாம். கல்வித்திற மின்மையா லிக்கவியிலில்லாத யுத்திப்பிரமாணத்தை யுண்டெனி லெங்ஙன மேற்கப்படும். அவர்போல்வாரோற்பர்.

(க-து.) பிரமானந்தமென்பது சுருதிக்குமனுபவத்துக்குமியைந்திருக்கக் காட்டினுரென்பது. உரையை யாவர்கூறினு மிலக்கணவழுவின்றிக் கூறவே ண்டும். கவிக்கிலக்கணமுரண வுரைகூறின், எவ்வாசிரியராயினு மெந்தசாம்ப ரதாயமாயினு மென்சிறப்பு. கவிக்குரையன்று, உரைக்குக்கவிபோலும், இத னையெவரோற்பர். இந்நூலாசிரிய ரெண்வி தானந்தமென்றார், இவற்றுள் தா னூகமெனல்கிடையாது. இத்திறத்தார், பிறருரைமேற்குற்றங்காட்டலி லென் சிறப்பு. தன்கோணலைத் தானிமிர்த்தவறியார்போலும், தெரியாதவளிசை

பொழுதேபோலெனச் சிலபிறிதிகளிருக்கின்றன. பொருந்துமாறுணர்ந்திடுக. போலிவேதாந்திமயமுலகமாதலின், தாங்கும்மலரணை தீங்குர்நன்மையும், விரித்தல்விகாரம். (கஉ௬)

கஉ௬ - கவி. அ - கை-

[பிரமானந்தவிலக்கண மினையதென நன்குறத்தெளிந்தேன், இப்போதோரனுபவமென்னுள்ளுதிக்கக்கண்டேனதனைக்கேட்டருளுமென மாணாக்கன்வியந்துகூறுவதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

உதவும் புவியினி லொருவன் னனுபவ மொருவன் மனதினி லுதியா தே, மதியுங் கெடுகிற துயில்கொண் டானந்த மயனன் ரேசுக முறுகின் ற, னிதுவிஞ் ஞான மயனுஞ் சிந்தையி னினைவாய் வந்திடு மெனல்கண் டேன், சுதைவிண் ணோர்புகழ் குருவே நீரிது சொல்வீர் சகலமும் வல்லீ ரே.

(இ-ள்.) உதவும்புவியினிலொருவன்னனுபவ மொருவன்மனதினி லுதியாதே, எ-து. வேண்டுவதைத் தடையின்றி யுதவத்தக்கஞானபூமியேழனுள், ஒருவன்கண்டசுவானுபவ மற்றொருவன்மனதிற்காணுமா, காணுதே, இதென்னவியப்பு, அதனைச்சொல்லுகிறேன், அதாவது:—மதியுங்கெடுகிறதுயில் கொண்டானந்த மயனன்றேசுகமுறுகின்றான், எ - து. மனதும்நசிக்கத்தக்கயோகநித்திரை காரணமாக வானந்தமயனாகிறவான்மாவன்றே பிரமானந்தவடிவமாகின்றான், இங்ஙனமிருக்க:—இது விஞ்ஞானமயனுஞ்சிந்தையினினைவாய்வந்திடுமெனல்கண்டேன், எ-து. இவவானந்தமானது விஞ்ஞானமயனாகியமானதனிடத்தில் நினைவுவடிவாகவந்துவிடுமெனச் சத்துக்கள் கூறுவதைப்பிரத்தியட்சமாக வடியேனிடத்திற் கண்டனன்:—சுதைவிண்ணோர்புகழ்குருவேநீரிது சொல்வீர் சகலமும்வல்லீரோ, எ-து. அமிர்தத்தையுட்கொண்டதேவர்களாலுந் துதிக்கப்பெற்றகுருநாதனே! சகலார்த்தமுமையமின்றிவிளங்கப் போதிப்பதில்வல்லமையுடையவரோ! யிஃதெங்ஙன்ங்கூடும் தேவரீரோயிவ்வையமகலத்தெரித்தருளவேண்[illegible], எ-று.

உதவுமெனப்பொதுப்படக்கூறியதனுல் வேண்டுவதையெனவும், புவியெனப்பொதுப்படக்கூறியதால் ஞானபூமியெனவும், துயிலெனப்பொதுப்படக்கூறியதால் யோகநித்திரையெனவும், ஆனந்தமயனெனப்பொதுப்படக்கூறியதா லாத்மாவெனவுங்கொண்டாம். இரட்டுறமொழிதலென்னுமுத்தியால், முத்திக்குச்சாதனமானதனுகரணங்களை யுதவத்தக்கவிப்பூமியி லொருவன்கண்டவனுபவ மொருவன்மனதினில், எங்ஙனங்காணும், காணுதேயெனவுதாரணமாக்கியதாக வுரைகொள்ளினுமமையும்.

(க-ஆ.) நினைவிறந்தவானந்தம் நினைவாயதெங்ஙனமெனவினுவினுனென்பது. ஏனெனில், இவன்தன்சமாதியில்மனநாசத்திற்கண்ட தடையற்ற

வானந்தம், சமாதிவிட்டகாலத்திலும், தன்னினைவெல்லாமிடைவிடாது துற்றுக்கொண்டிருத்தலினென்க. இடைவிடாதுதுற்றுக்கொண்டிருத்தலாவது; யாதுபுரியினும், யாது நினைக்கினும், யாது சுகிக்கினும், கலையாது நெஞ்சினிறைவாயிருத்தல். மலடியறியாள்பிள்ளைவருத்தம், அதுபோல, ஏனையரறியாரிவ்வானந்தநிலைமை. இவ்னெய்திய விவ்வனுபவமொழி சத்தியமாதல்பற்றியிங்ஙனம் விளுவினனென்க. எனலென்பது, என்றுசொல்லுதல். இதனால் சத்துக்களென வருவித்தாம். யாதினாலுங் கெடாததென்பதுதோன்ற மதியுங்கெடுகிற வென்றார். மதியுமென்பதிலும்மை யுயர்வுசிறப்பு. ஆனந்தநினைவாய்வந்திடுமென்றதனால், ஆனந்தமேநினைவு நினைவே யானந்தமெனப்பெற்றாம்.

(க - து.) நினைவிறந்தசுகம்; நினைவாகநிற்பதற் கேதென்னையென்பது. மனமிறந்தவிடத்துதிக்கும் பிரமானந்தத்தை யான்மாவனுபவிக்க, மனதுக்கெட்டுவானேனெனல் வினா. (கஉ௬)

கஉஎ - கவி. அ - கை.

[சுத்தமனதும், பரமாத்மாவும், ஒன்றேயெனவுபமானமுகத்தாலிக்கவியிற்கூறுகின்றார்.]

நெய்யும் வெண்ணெயு மிருபேர் களுமறி நினைவிற் பிறிவறிவினிலில் லை, செய்யுங் கனவினி லிறுகும் மனதொடு சேருஞ் சின்மய விஞ்ஞா னன், நையுந் துயர்மன நழுவும் பொழுதுணர் ஞானச் சுகமுனு மானந் தன், பெய்யுந் துளிகளு நீருங் குளமொடு பாரும் போலிவர் பிறிவன் றே.

(இ - ள்.) நெய்யும்வெண்ணெயுமிருபேர்களுமறி நினைவிற்பிறிவறிவினிலில்லை, எ-து. நெய்யென்றபெயரும், வெண்ணெயென்றபெயருமாகியவிவ்விரண்டும், பகுத்துணரத்தக்கமனத்தாலாய பேதமேயன்றியவ்விரண்டையும் ருசிக்கத்தக்கநாவுணர்வுக்குச்சற்றுமில்லை: — செய்யுங்கனவினிலிறுகும் மனதொடு சேருஞ்சின்மயவிஞ்ஞானன், எ-து. இச்சாஞானக்கிரியைகளைச் செய்தற் கியைந்த சாக்கிராவத்தையில் விசாரத்தாற் றனதுசெயலிற்சுருங்கிய மனதோடுகூடியு சி த்திரமாயிருக்கும் விஞ்ஞானமயனென்போனும்:—நையுந்துயர்மன நழுவும்பொழுதுணர் ஞானச்சுகமுனுமானந்தன், எ-து. வலைதயத்தக்கதுயர்மயமானமனது மெல்லநழுவற்கியைந்தசமாதிகாலத்தில் தன்னையேயுணரத்தக்கஞானானந்தத்தை யனுபவிக்கின்றவானந்தமயனானவான்மாவும்: — பெய்யுந்துளிகளுநீருங்குளமொடு பாரும்போலிவர் பிறிவன்றே, எ-து. துளிக்குந்துளிகளும், சலமும், குளமுங்கரையும், எங்ஙனம்பேதமின்றோவதுபோல விஞ்ஞானனும், ஆன்மாவுமாகியவிவ்விருவருந் தம்முள்பேதமிலராம், எ-று.

அறிநினைவெனவே, சட்சுகாரணமாக வறியுநினைவென்றாயிற்று. கண்ணுக் கிரண்டாகத் தோற்றினு நாவுணர்வுக் கொன்றே. அன்றியும், நெய்

வெண்ணெயெனச்சொற்பேதமேயன்றிப் பொருட்பேதஞ் சற்றுங்கண்டிலம். அதுபோல; விஞ்ஞானமயன், ஆனந்தமயனெனச் சொற்பேதமுந் தோற்றபேதமுமேயன்றிப் பொருட்பேதமு மனுபவபேதமுஞ் சற்றுங்கண்டிலம். வெண்ணெயன்றி நெய்யெனலும், சலமன்றித் துளியெனலும், கரையன்றிக் குளமெனலும், எங்கே. அதுபோல, விஞ்ஞானமயனையன்றி யானந்தமயனென்பவ னெங்கே. எனவே, அறிவையன்றியானந்தமெனலெங்கேயென்றாயிற்று. ஆகவே, அறிவேயானந்தமெனப்பெற்றாம். பெறவே, ஞப்தியேபிரியம்பிரியமே ஞப்தியெனக்கண்டாம். காணவே, அனுபவத்திற் பேதமின்றெனத் துணிந்தாம், இத்துணிபு; இதனைமறுக்கற்கவெனக்குறிப்பிக்கநின்றது.

(க - து.) விஞ்ஞானமயனெனலும், ஆனந்தமயனெனலும், ஓரவசரம் பற்றிச் சொல்லாற்பேதங்கூறவந்ததேயன்றிப் பொருளாற்சற்றுமின்றென்பது. இவ்வனுபவஞ்சகசானுபவத்திற் குருமுகத்தாற்காணப்படுவது. (௧௨௭)

௧௨அ - கவி. அ - கை.

[வாசனானந்தவிலக்கணமினையதெனவிக்கவியிற்கூறுகின்றார்.]

**ஒன்றா கியபிர மானந் தன்சுக மொழிவா னேன்வெளி வருவா னே, னென்றான் முன்செய்த கருமம் வெளியினி விழுக்குஞ் சுழுத்திவிட் டெழுந்தோ னும், நன்றா யினசுக மகலான் வெளியிலு நடவான் மறதியும் பெறமாட் டா, னன்றா மெனவிருந் துறங்குஞ் சிலகன்ம மதுவே வாதனை யானந் தம்.**

(இ-ள்.) ஒன்றாகியபிரமானந்தன்சுக மொழிவானேன்வெளிவருவானேனென்றால், எ-து. ஏகமாகவிளங்கும்பிரமானந்தனென்போன் தனதுசுகானந்தத்தினின்றுநீங்குவானேன் வெளிப்படுவானேனெனக்கேட்டையாயின்:— முன்செய்தகருமம்வெளியினிவிழுக்குஞ் சுழுத்திவிட்டெழுந்தோனும், எ-து. பூர்வத்திற்செய்தகன்மமானது புறம்பில்மெல்லவிழுக்கும், அதனால்சுழுத்தியைவிட்டுநீங்கினவனும்:— நன்றாயினசுகமகலான்வெளியிலு நடவான்மறதியும்பெறமாட்டான், எ-து. வெகுபிரியமானவந்தச்சுகத்தினின்றும் நீங்கான், புறம்பிலுஞ்செல்லான், அச்சுகத்தைமறக்கவுமாட்டான்:—அன்றாமெனவிருந்துறங்குஞ்சிலகன்ம மதுவேவாதனையானந்தம், எ-து. இப்போதவசியமல்ல, இப்போதவசியமாமென நினைத்துறங்குவதான சிலபிரயத்தனமப்போதுநிகழ்வனவாம், அங்ஙனநிகழ்தலேவாசனானந்தமெனப்படுவதாம், எ-று.

பிரமானந்தமென்னது பிரமானந்தனென்றதனால், அம்மயமானவனான்மாவாகியபுருடனெனப்பெற்றாம். முன்செய்தகன்மமென்றது; தினமும் வழக்கமாகச் செய்துகொண்டுவந்த தின்விர்த்தியை. தினசுழுத்தி கலைவிலெங்ஙனமோ, அங்ஙனம் பிரமானந்தமேலீடாகிய சுழுத்திகலையுங்கா ணிகழுமனுபவானந்தமாதலின் இதனைவாசனானந்தமென்றார். சுழுத்திகலைவில், விவகாரவிர்த்தி வெளியில்விழுக்கும்போது, அவ்வானந்தப்பிரியந் தடுக்கும். அவ

வானந்தவசத்தாகுதுமெனின், விவகாரசங்கற்பந் தடுக்கும். சுகத்தைவிட்ட கலக்கூடாமையி னிதுதருணமல்லவெனவும், இப்போதேசெய்யாவிடிவிவ ளவுநட்டம்வரும், ஆதலினிதுதருணமாமெனவு மங்கேயிங்ஙனநிகழ்தலின், அன்றுமெனவிருந்துறங்குஞ்சிலகன்மமென்னப்பட்டது. வெளிக்குவரவொட் டாமல்தடுப்ப தவ்வானந்தாம்சமாதலால் வாசனானந்தமென்றதென்க.

(க-து.) இடுகுறிப்பெயரன்றெனக்காட்ட விவவேதுக்களைத்தெரிவித்து வாசனானந்த விலக்கணங் கூறியதென்பது. வெளிக்கிழுத்த விருவகையேது பற்றியெனினு மமையும். அதாவது; பிராரத்தகன்மம், சகசநிட்டையென் பன. வெளிக்குவருதல், விஞ்ஞானமயத்துக்கு வருதலே. இருவகை யேதுக்க ளினையவினைத் துணிவது, நயம்பற்றியென்க. அதாவது; கன்மமாயின்பிரா ரத்துவமெனவும், நிலையாயின் இந்நிட்டையெனவுமாம். சகசநிட்டைக்கிழுத் தலெனக்காண்டல் கூடாமையின் முன்செய்தகன்மம்வெளியினிலிழுக்குமெ ன்றதென்க. சுழுத்திவிட்டெழாதவனுமென்பதுதோன்றச் சுழுத்திவிட்டெ ழுந்தோனுமென்பதின்கண் ணுள்ளவும்மை, இறந்ததுதழீஇயவெச்சவும்மை.

கஉசு - கவி. அ - கை.

[நிசானந்தவிலக்கணமினையதென விக்கவியிற்கூறுகின்றார்.]

அந்தக் கணமுட லகமென் றிடர்களி லலைந்தே சுகந்தனை
மறந்தே போ, முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு மோநந்
தருநடு வடிவே கா, ணெந்தப் புருடனு மொருசிந் தையுமற விருந்
தே னெனலனு பவமா கு, மிந்தப் படிதனு தாசி னச்சுக மிதுவே
நிசமெனு மானந் தம்.

(இ - ள்.) அந்தக்கணமுடலகமென்றிடர்களி லலைந்தேசுகந்தனைமறந் தேபோம், எ - து. தேகமே நானென்றுன்ன வக்கணமே யான்மாதுன்பப் பெருக்கிலகப்பட்டின்னதிசையெனக்காணா தலைந்து தற்பிரியத்தைச் சற்று மெண்ணமின்றிமறந்தேவிடுவன்: — முந்தைச்செயும்வினைசுகதுக்கந்தருமோ னந்தருநடுவடிவேகாண், எ-து. முன்செய்த கன்மமானது சுகத்தையேனுந் துக்கத்தையேனுந்தரும். மோனநிலையோ வங்ஙனந்தராது, மத்தியகதநிலை யையேதரும்:—எந்தப்புருடனு மொருசிந்தையுமற விருந்தேனெனலனுபவ மாகும், எ-து. எந்தப்புருடனாயினும் யாதோர்சிந்தையுமின்றி யானிருந்தே னெனக் கூறுவது, எவர்க்கு மனுபவமாம்: — இந்தப்படிதனுதாசினச்சுக மிதுவேநிசமெனுமானந்தம், எ - து. இவ்வாறுதன்னாலனுபவிக்கப்பட்டது தாசினசுகமாதலா லிதுவேநிசானந்தமென்னப்படுவதாம், எ-று.

அந்தக்கணமென்றற்கு, தனதெதார்த்தவடிவைமறந்தவந்தக்கணமென் றும், மறந்ததனாலதனதெதார்த்தசுகந்தனை மறந்தேபோமென்றுங் கூறியத னுபவமிருத்தலிற்பொருந்தும். பூர்வவினை; சுகதுக்கத்துளொன்றுதருமாயின்,

மதாமெளனம்; மத்தியகதநிலையைத்தருமென்றூர். காண், அசைநிலை. தன்னுதாஸீனச்சுகம்; தனதுவிருப்புவெறுப்பற்றசுகம்.

(க-து.) விழிப்பி லொருசிந்தையுமற நிற்றலாலாயசுகமே, நிசானந்தமென்பது. இது யாதோர்நினைவுமறநின்றவிடத்துதித்த சுகமாதலாற் காரணப்பெயராயிற்று. சுழுத்திசுக மென்னலாமேயெனின், உணர்வற்றவிடத்ததன்றாமையின் பொருந்தாது. இதனைச்சமரசசுக மெனினுமமையும். ஒருசிந்தையுமறவிருத்தல், கற்பனையறல். எனவே, நிசமென்றாயிற்று. நிசத்தினுதித்தலா னிசானந்தமெனப்படுமென்க. ஞானுஞ்ஞானத்துக்கிடையாதல் பற்றி நடுவெடிவெனப்படும். இதனை முக்கியானந்தமெனக் கூறுவார், முன்பின்னறியார்போலும். (கஉக)

## கரு0 - கவி. அ - கை.

[முக்கியானந்தவிலக்கணமினையதென விக்கவியிற்கூறுகின்றூர்.]

நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி யீரந் தான்
வசமா மகங்கர மறைந்தா னிசமது படிந்தான் முக்கிய வகையாகுந்
திசையார் திரிசய மறியா தேதுயில் செறியா தேயுட றறிபோ லே
யசையா தேமதி சமமா கியநிலை யதுதான் முக்கிய வாநந் தம்.

(இ - ள்.) நிசமானதுமுக்கியமோகுடத்துள நீரன்றேவெளியீரந்தான், எ - து. நிசானந்தமானது முக்கியானந்தமெனப்படுமோவெனின், குடத்தினுள்ளநீரினலன்றே புறம்பிலீரமாகக்காணப்படுவது, ஆதலின் முக்கியானந்தமெனப்படாது: — ஆயினெங்ஙனமெனின், வசமாமகங்கரமறைந்தா னிசமதுபடிந்தால்முக்கியவகையாகும், எ - து. பிறவிதரற்குவசமாயுள்ளவகங்காரமானது திசைகாணுதகன்று நிசவடிவங்கைகூடுமாறு லப்போதுமுக்கியமென்கிறவகையையேற்பதாகும்: — திசையார்திரிசய மறியாதேதுயில்செறியாதேயுடறறிபோலேயசையாதே மதிசமமாகியநிலையதுதான் முக்கியவானந்தம், எ-து. எங்குநிறைந்துள்ளதிரிசயத்தைநாடாமலும், உறக்கத்ததன்வயப்படாமலும், மனமானதுநடுநிலையதாகி னதுவேமுக்கியானந்தமெனப்படுவதாம், எ-று.

முக்கியமோவென்பதிலோகாரம், வினு. அகமுகமாகச் சொரூபசமாதியிற்கண்டசுகமன்றே புறம்பில் தானே விருப்புவெறுப்பின்றிய சுகமாகக்காண்கின்றதென்பதுகுறிப்பிற்றென்ற வுவமையாற்கூறியதென்க. அகம்புறமொத்தலி னிசானந்தமெனவும், அகங்காரமறைதலும், உண்மைசேர்தலும், திரிசயமென்பது சற்றுங்காணவறியாமலும், முழுதுமானந்தநித்திரையில் மூழ்காமலும், தேகந்தறிபோலசையாமலும், மனமானதுஞானுஞ்ஞானநெறித்தாச்செல்லாமலுநிற்ற லகத்திலாதலால், முக்கியானந்தமெனவுங் கருதிக்கூறியதாகக்காண்கின்றது. இதனையறியா தொன்றையொன்றூக்கூறு

வார் செய்யுட்பிரயோக மறியார்போலும். இங்ஙனநிற்கவேண்டியது மனமாத லால், மதியைமனமென்றும். அதுதானென்பது சுட்டுப்பெயராதலின், மதிச ம்மாகிய நிலையென்பதை வினையெச்ச மாக்கினும். செறிதல், நெருங்கல். ஆத லின் துயில்செறியாதேயென்பதற்கு, உறக்கத்ததன்வயப்படாமலென்றும்.

(க-து.) இனையவாயவேதுக்களா லிதுநிசானந்தமன்று முக்கியானந்தமெ ன்றுரொன்பது. இக்கவிக்குரையிந்நெறித்தாயது; கவிநோக்காலெனக. (கூ௦)

கஙுக - கவி. அ - கை.

[இவ்வெண்விதானந்தங்களு ளடங்காதவானந்தபேதங்க ளுள, அவையும்பிரமானந்தலேசமென விக்கவியிற் கூறுகின்றார்.]

மனுடன் மனுட கந்தரு வன்றே வகந்தரு வன்பிதிர் பிறவித்
தே வன், றனுடன் கருமசுரன்சுர னிந்திர னுசான் பிரசா பதியா
னோன், கனவி ராட்ட னிரணிய கருப்பன் கருதும் மிப்பதினொரு
பே ரின், பினவா னந்தங்க ளுனையாம் பிரளய வெள்ளக் கடல்பிர
மானந் தம்.

(இ-ள்.) மனுடன்மனுடகந்தருவன் றேவகந்தருவன்பிதிர்பிறவித்தேவன் றனுடன், எ-து. மனுடன், மனுடகந்தர்வன், தேவகந்தர்வன், பிதிரர், பிற வித்தேவன்றனுடன் :—கருமசுரன்சுரனிந்திரனுசான் பிரசாபதியானோன், எ-து. கருமசுரன், சுரன், இந்திரன், ஆசான், பிரசாபதியானோன்:—கனவி ராட்டனிரணியகருப்பன், கருதுமிப்பதினொருபேரின், எ-து. கனவிராட் டன், இரணியகருப்பன், எனக்கருதத்தக்க விந்தப்பதினொருபேர்களின்:— பினவானந்தங்க ளுனையாம் பிரளய வெள்ளக்கடல் பிரமானந்தம், எ-து. ஒன்றுக்கொன்றுபேதமாயுள்ள விவ்வானந்தவகைகள், கற்பனுந்தத்திற் பிர ளயம்போன்றெழும் பிரமானந்தமென்னும்பிரவாகசாகரத்தி னுனைபோல்வன வாம், எ-று.

ஆனந்தபேதங்களிற் றனித்தனி சிறந்தோர், மனிதரிற்; சார்வபூமனும், மனுடகந்தர்வரில்; மனிதனுயிருந்துபுண்ணியபரிபாகத்தாற் கற்பாந்தத்திற் கந் தர்வனுனமனுடகந்தர்வனும், தேவகந்தர்வரில் ; பூர்வபுண்ணியகர்மத்தால் மனுடகந்தர்வபதவியினின்று தேவகந்தர்வபதவியடைந்ததேவகந்தர்வனும், பிதிரரில்; சிருஷ்டிகாலத்தேயுண்டான வக்கினிஸ்வாந்தாமுதலிய பிதிரரும், பிறவித்தேவர்களில்; கற்பத்துக்காதியில்தானே தேவப்பிறவியையுடையவா சானசதேவனும், கருமசுரரில்; மனுடனுயிருந்துசெய்தவசுவமேதாயகன்மபல த்தாற் றேவனுக்செனித்த கன்மதேவனும், சுரரில்; காலன்முதலியோரு மாம். ஆசான், பிரகஸ்பதி, பிரசாபதியானோன், பிரமன் என்பன. கனவிரா

ட்டு; வியாபகமான விராட்புருடன். பின்னவென்றபாலது, பின்வென்றுய திடைக்குறை. இப்பதினோரானந்தங்களுநுனையெனவே அஷ்டவிதானந்தங் களும் அலையெனப்பெற்றும். பிரளயமென்றது, இங்கேகற்பனுந்தத்தை. மண் ணுதியயாவுந்தன துருவாகக்கொள்ளுமவசரத்தை,விராட்புருடனெனவும்,எங் குமாப் பிரகாசிக்கின்றவற்றையெல்லாந் தனது தரத்ததாகநிற்குமவசரத்தை, இரணியகருப்பனெனவுங்கொள்க.மண்ணுதியென்றது,அஷ்டமுகூர்த்தத்தை.

(க-து.) அஷ்டவிதானந்தமாக்கிய தளவிலானந்த பேதங்களையாதலால், அவற்றுட்சிலவற்றைக்கூறினுரென்பது. சிலபிறிதிகள், பிதிர்கருமத்தேவனெ னவும், தனுடன்னசுரனெனவும், இந்திரனுசானுமெனவும், கனகன்விராட்டிர ணியகருப்பனெனவும், பதினொருபேர்களெனவும், இருக்கின்றன. இதனுனிரி யைதற்பாலதேற்கப்படும். தைத்திரியவுபநிடதப்படி. விராட்டிரணியகர்ப்ப மொன்றாக்கிப் பதினொன்றாக்குக. (கூகூக)

கூஉ - கவி. அ - கை.

[இங்ஙனமாயவனுபூதியுடையோன்மகிமையை யிக்கவியிற்கூறுகின்றார்.]

எவனு கினுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தா னே
லவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரனுபவ சுகபோதம்
விவகா ரதிர்சிய மிதுவே யனுபவ மெனமுன்சொல்லிய விவகாரி
யுவமா னமுமறி மகனே யவனடி யுதிரும்பொடிகளென் முடிமேலே.

(இ-ள்.) எவனுகினுமிந்தத்துரியாதீதத்தி லேழாம்பூமியிலிருந்தானேல், எ-து. யாவனுயினுமிந்தத்துரியாதீதமாகிற வேழாம்பூமியிலிருப்பனுயின்:— அவனுரதன்சுகன்சிவன்மாலயன்முத லறிவோரனுபவசுகபோதம், எ - து. அவன்; நாரதன், சுகன், சிவன், விஷ்ணு, பிரமன்முதலியவறிஞரதுசுகபோத வடிவமெனப்படுவன் :—விவகாரதிர்சியமிதுவேயனுபவமென முன்சொல்லிய விவகாரியுவமானமுமறிமகனே, எ - து. விவகாரிகதிரிசயவிழப்பும், இதுவே யனுபவநிலையாமென முன்னர்க்கூறியவிவகாரியுபமானமும் மினைப்பவெனஞான புத்திரா ! நீயறிதி: — அவனடியுதிரும்பொடிகளென்முடிமேலே, எ - து. அந்தமகானதுதிருவடியிலுதிருந்தூசுக ளெனதுசிரசின்மேல் மகுடம்போல் வனவாம், எ-று.

சண்டாளனையுங்குறிக்க எவனுகினுமெனவும், துரியமேதுரியாதீதமாவது பற்றித் துரியாதீதத்திலெனவும், துரியம் ஞானபூமியிலேழாவதாதலி னே ழாம்பூமியிலெனவும், இருப்பானேலென்பது, இருந்தானேலென்றுயது கால மயக்கம். அவன், எழுவாய். சுகபோதம், பயனிலை. விவகார, அதிர்சியம், விவகாரதிர்சியமென்றுயது ; குணசந்தியினுலென்க. விவகாரியுவமான முமெ

ன்றதனால், விவகார திரிசயமுமெனவும்மைவருவித்தாம். இஃதெண்ணும்மை. எவனுகிலுமென்பதிலும்மை, ஐயம்.

(க-து.) மகானதுபெருமையைக்குறிக்கத் துரியமேதுரியாதீதமாயினுமொன்றென்பது. விவகார, திரிசியம், எனப்பிரித்து விவகாரத்திற்கியைந்ததிரிசியமென்றுமாகூறி லிங்கேபொருந்தாது. ஆதலின்குணசந்தியாக்கினும். துரியாதீதத்தைமுன்னர்க் கூறுதிருக்க, இந்தவெனச்சுட்டியது; எப்போது துரியநிலைவாய்த்ததோ, அப்போதேயதுதுரியாதீதமாக்குமென்னுந் துணிபுபற்றியென்க. (௧௩௨)

**௧௬௫ - கவி. அ - கை.**

[வித்தையானந்தநீங்கலாக ஏனையசுகவகைகளைக்கூறினும்· இதிலின்னுமையமுளதேற்கேட்குதியென மாணுக்கனைக் கேட்டலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

வேறு.

இந்தவா றைந்துசுகஞ் சொல்லினேம் வித்தைசுக மினிமேற் சொல்வா, முந்தைமா யையுஞ்சச்சி தானந்தப் பொருளுமே மொழியும் போதி, லந்தமா மத்துவித சுகமான்ம சுகமிரண்டு மங்கே சொன்னேந், தொந்தமாற் றியமகனே யின்னமுனக் கையமுண்டேற் சொல்லு வாயே.

(இ-ள்.) இந்தவாறைந்துசுகஞ்சொல்லினேம் வித்தைசுகமினிமேற்சொல்வாம், எ-து. இவ்வாறாக விடயானந்தம், பிரமானந்தம், வாசனானந்தம், நிசானந்தம், முக்கியானந்தமெனப்படு மைந்துசுகத்தையுஞ் சொல்லினேம்· வித்தையானந்தத்தை யினிமேற்கூறுதும் :—முந்தைமாயையுஞ்சச்சிதானந்தப் பொருளுமேமொழியும்போதில், எ-து. முன்னரேமாயையைப்பற்றியும், சச்சிதானந்தப்பொருளைப்பற்றியுஞ், சொல்லிக்கொண்டுவரும்போது:—அந்தமாமத்துவிதசுகமான்மசுக மிரண்டுமங்கேசொன்னேம், எ-து. வேதமுடிவிலுள்ளவத்துவிதானந்தமும், ஆத்மானந்தமுமாகிய விவ்விரண்டிலக்கணங்களையு மவ்விடத்தில்தானேசொல்லிவிட்டோம்:—தொந்தமாற்றியமகனே யின்னமுனக்கையமுண்டேற்சொல்லுவாயே, எ - து. பந்தங்களைநீக்கிக்கொண்ட சற்புத்திரா! இன்னுமுனக்கையமுண்டாயிற்சொல்லுதி, எ-று.

வித்தைசுக மினிமேற் சொல்வாமென்றதை, இப்படலத்தில்தானே, ௧௬௪, கவிமுதல், ௧௭௪, கவிவரையிலும்; அத்துவிதசுக மாத்மசுக மங்கே சொன்னேமென்பதில், அத்துவிதசுகத்தை, ௧௦௨, முதல், ௧௦௬, கவிவரையிலும்; ஆத்மசுகத்தை, ௧௦௭, முதல், ௧௨௦, கவிவரையிலும்; ஐந்துசுகஞ்சொல்லினேமென்றதில், விடயசுகத்தை, ௧௨௫, கவியிலும்; பிரமானந்தத்தை, ௧௨௪ முதல், ௧௨௭, கவிவரையிலும்; வாசனானந்தத்தை, ௧௨அ, கவியிலும்; நிசானந்தத்தை, ௧௨௯, கவியிலும்; முக்கியானந்தத்தை, ௧௩௦, கவியிலுங்காணலாம்.

(க-து.) சத்து, சித்து, ஆனந்தங்களைத் தனித்தனியே சொல்லிவிட்டோம். இன்னுமையமுளதேற்கேளுதியென்பது. (௬௩௩)

௧௩௪ - கவி. அ - கை.

[சச்சிதானந்தவிலக்கணங்களைத் தனித்தனிசொன்னவாறுபோல,
ஏகமாக்குமாறுமுணர்த்தவேண்டுமெனமாணுக்கன்
கேட்டலையிக்கவியிற்கூறுகின்றார்.]

குகன்றனையு மெனையுமுல கினையுமீன் றளித்தருளுங் குருவே கேளீர், புகன்றசச்சி தானந்தப் பதங்கடனித் தனியாயே பொருள் வே றானு, லுகண்டமன முறைப்பதெங்ஙன் பரியாயபதங்களைப் போ லுறவுங் காணே, னகண்டமா யொருசுவையாய்த் தேனிக்கூட் டியமதுவா வறிவிப்பீ ரே.

(இ-ள்.) குகன்றனையுமெனையுமுலகினையு மீன்றளித்தருளுங்குருவேகேளீர், எ-து. முருகக்கடவுளையு மடியேனையும் வுலகினையும் பெற்றளித்தருளிய சற்குருநாதனே! யோர்விண்ணப்பமுண்டதனைக்கேட்டருளும், அஃதியாதெனில்:—புகன்றசச்சிதானந்தப்பதங்க டனித்தனியாயே பொருள்வேறானால், எ-து. தேவரீர்கூறியசச்சிதானந்தப்பதங்கள் தனித்தனியானவாறுபோலப் பொருளுந்தனித்தனிவெவ்வேறானல்:—உகண்டமனமுறைப்பதெங்ஙன் பரியாயபதங்களைப்போலுறவுங்காணேன், எ-து. அணைகடந்துபாயத்தக்கமனமான தலையாதுறுதிபெறுவதெங்ஙனம், ஒன்றிற்குப் பலவாகக்கூறும் பரியாய நாமங்களைப்போலுறவுங்கண்டிலன் :—அகண்டமாயொருசுவையாய்த் தேனீக்கூட்டியமதுவாவறிவிப்பீரோ, எ-து. ஏகமாகவும், ஓரொருசியாகவும், தேனீக்கள் பலமலரிலெடுத் தொன்றாக்கிய தேனைப்போல வடியேனுக்குணர்த்தியருளவேண்டும், எ-று.

வேதமுடிவையெடுத்துவிளக்கல் பரமசிவத்துக்கேயன்றி யேனையர்க்கின்றாமையின், பரமசிவமேகுருவெனக்கருதிக் குகன்றனையுமெனையுமுலகினையுமீன்றளித்தருளுங் குருவேயெனக்கூறினதாகக்கொள்க. அன்றேல், மூரனும். உகண்டமன முறைப்பதெங்ஙனென்பதற்கு, பலவாறாகச் சிதைவுற்றலைகின்ற மனமொருமைப்பா டெய்துவதெங்ஙனமெனப் பொருள்கொள்ளினுமமையும். எங்ஙனமென்பது; எங்ஙனென்றாயது, கடைக்குறை. பரியாய பதங்கள், ஒருபொருள்குறித்தபலசொல். ஓர்பொருளாகிய பரம்பொருளை விளக்குவிப்பதற்குச் சச்சிதானந்தங்கள் தக்கவாகலின் பரியாயபதங்களைப் போலுறவுங்காணேனெனவும், பன்மலரினுள்ளதேனைக் கூடாக்கியதுபோல, சச்சிதானந்தங்களை யொருமையாக்கி யருளவேண்டுமெனக் கருத்துகொண்டதால், அகண்டமாயொருசுவையாய்த் தேனீக்கூட்டியமதுவாவறிவிப்பீரோ யெனவுங் கூறினரென்க. மதுவைப்போல வென்றலது மதுவாவென்றது உவ

மைத்தொகை. தனித்தனியாகவே யெனுற்பாலதை, தனித்தனியாயேயென்றது, மரூஉ. அகண்டமா யொருசுவையாந் தேனீயெனச் சிலபிறதிகளிருப்பதுபற்றியெல்லொற்றுக்கின், அகண்டம், ஒருசுவை யென்பன மதுவுக்குவிசேடணமாகவும், அகண்டமாயொருசுவையாய்த் தேனீயெனவல்லொற்றுக்கின், அறிவிப்பீயொன்றும், வினைமுற்றிற்கு வினையெச்சங்களாகவு முடியுமென்க.

(க-து.) சச்சிதானந்தங்களைத் தனித்தனியாகத் தெரிவித்தவாறுபோல, அவற்றினொருமையையுந் தெரிவிக்கவேண்டுமென்பது. இங்ஙனந் தெரிவித்தலருமைபற்றியென்க. (௧௩௪)

கஙௗ - கவி. அ - கை.

[சுருதிப்பிரமாணத்தாலவற்றினொருமையை யுபமானங்காரணமாகவிக்கவியிற்கூறுகின்றார்.]

குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினு னீர்மூன்று கூறு யிற்றோ, வொளிதவனஞ் செம்மையென்றபதங்களா லக்கினியு மொருமூன் றுமோ, வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட னெனப்பிரித்து விலக்கி வேத, மெளிதறிய முரண்மொழிந்த சத்தாதி யெனும்பிரம மேகந்தானே.

(இ - ள்.) குளிரிளகல்வெண்மையென்ற பதங்களினு னீர்மூன்றுகூறு யிற்றோ, எ - து. குளிர்ச்சி, நெகிழ்ச்சி, வெண்மை யென்கிறபேதமொழிகளாற் சலமும் மூன்றுபிரிவாயிற்றோ:—ஒளிதவனஞ்செம்மையென்றபதங்களா லக்கினியு மொருமூன்றுமோ, எ - து. பிரகாசம், சுடுகை, சிவப்பென்கிற பேதமொழிகளா லக்கினியு மூன்றுபிரிவாயிற்றோ:—வெளிமுதலாஞ்சகமசத்துமூடமிடனெனப்பிரித்துவிலக்கி, எ - து. ஆகாயமுதலியபஞ்சபூதவடிவாயுள்ளசகமானது, அநிர்தசடதுக்கமாமென வதனை வேறுபிரித்துத்தானலவென்றகற்றி:—வேதமெளிதறியமுரண்மொழிந்த சத்தாதியெனும்பிரம மேகந்தானே, எ-து. வேதமானதெளிதிலுணர்ந்துகொள்ளுமா றநிர்தாதிக்கு மாறுகக்கூறிய சச்சிதானந்தசொரூபமெனத்தக்க பிரமமானது குணபேதமின்றியேகமேயாம், எ-று.

குளிர்முதலிய மூன்றும், ஒளிமுதலிய மூன்றும், சலமினையதெனவும், அக்கினியினையதெனவும் விளக்குவான்வேண்டிக் கூறவந்தசொற்பிரிவேயன்றிப் பொருட்பிரிவன்று. அதுபோல; அசத்துமுதலியமூன்றும், சத்துமுதலியமூன்றும், சகத்தினையதெனவும், சிவமினையதென்வும் விளக்குவான் வேண்டிக் கூறவந்தசொற்பிறிவேயன்றிப் பொருட்பிறிவன்று. உலகமானதெவர்க்குமெப்போதுஞ் சச்சிதானந்தமாகக் காண்டலின், இஃதன்று வேறு. அதாவது, பரமெனல். ஆயி னுலகமோ? அவற்றிற்கு மாறுயு வநிர்தசடதுக்கமாயது, எனக்காட்டற்கு வேதமிங்ஙனங்கூறியதென்க. சோதனையிற் பஞ்சபூ

தங்களுளொவவொன்றுந் தனக்கெனச் சொரூபமொன்றின்றிக்காணுதபோ தற்கேதென்னை. இதுகற்றோர்க்கும் மற்றோர்க்குமாதலால் சத்தெனலெங்ங னங்கூடும். கூடாததாகவே சித்தெனலும், ஆனந்தமெனலுமெங்ஙனம்பொருந் தும். பொருந்தாதாதலாற் சத்தாதியெனும்பிரமமென்றார். சத்தாதிமூன்றி னொருமையேபிரமமெனலைச் சம்மதிக்கச்செய்வானேவேண்டிப் பிரத்தியட்ச வுலகை யசத்தாதிமூன்றினொருமையெனக்காட்டவந்ததென்க.

(க - து.) அநர்தசடதுக்கவொருமையே சகமென்றாற்போல, சச்சிதா னந்தவொருமையே பிரமமெனக்கூறியதென்பது. வேதமெளிதறியவென்றத னால், அவவேதமே பலசாகைகளாலும், பலவேதுக்களாலும், பலதிஷ்டாந் ததாஷ்டாந்தங்களாலும், பலவாய வளவைகளாலும், அரிதறியவுணர்த்து மென்றாயிற்று. ஏகந்தானேயென்னும் பயனிலைக்குப் பிரமமெழுவாயாயின், சத்தாதியெனும்பிரமமென்றது; குணமேகுணியாகவேண்டும். ஆதலி னேகமெ னல் பொருந்தும். சத்தாதிகுணமன்றிப்பிரமம்வேறெனல், அசத்தாதிக்குச் சகம் வேறுகாமையாற் பொருந்தாது. (கஈடு)

கஈசு - கவி. அ - கை.

[இவைபோலவின்னுமளவிறந்த பரியாயநாமகுணங்களுள, அவற்றுட்சிலவற்றைச் சொல்லுதுமென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந் தஞ், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாட்சி போதஞ், சுத்தமிலக் கியஞ்சநா தனஞ்சீவன் றத்துவம்விண் சோதி யான்மா, முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கண் மொழியும் வேதம்.

(இ - ள்.) நித்தியம்பூரணமேகம்பரமார்த்தம் பரப்பிரமநிதானஞ்சாந் தம், எ-து. நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரமம், நிதானம், சாந்தமெனவும்: — சத்தியங்கேவலந்துரியஞ் சமந்திருக்குகூடஸ்தன்சாட்சி போதம், எ - து. சத்தியம், கேவலம், துரியம், சமம், திருக்கு, கூடஸ்தன் சாட்சி, போதமெனவும்: — சுத்தமிலக்கியஞ்சநாதனஞ்சீவன்றத்துவம்விண் சோதியான்மா, எ-து. சுத்தம், இலக்கியம், சநாதனம், சீவன், தத்துவம், விண், சோதி, ஆன்மாவெனவும்: — முத்தம்விபுசூக்குமமென்றிவ்வண்ணம் விதிகுணங்கள்மொழியும்வேதம், எ-து. முத்தம், விபு, சூக்குமமெனவு மிவ வாறேவேதமானது விதிமீகப்பரியாயநாமகுணங்களைச்சொல்லும், எ - று.

நிதானம், ஆதிகாரணம். சநாதநம், அநாதி. இவ்வண்ணம், இவைபோல்வ னவாக. இவை விதிகுணங்களாகுமெனவே, விலக்குகுணங்கள் வேறுண்டெ ன்பதுபெற்றாம்.

(க-து.) பரியாயநாமகுணங்களை யிக்கவியிற்கூறினாரென்பது. (கஈசு)

கரு௭ - கவி. ௮ - கை.

[அதுபோலவிலக்குப்பரியாயநாமகுணங்களுள, அவற்றுட்
சிலவற்றையுணர்த்துதுமென்றதையிக்கவியிற்
கூறுகின்றூர்.]

**அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமலம் வசனு தீத**
**மசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகணு நிருபா கண்ட**
**மசமனந்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம நாதி**
**யசரீர மவிகார மத்துவித மெனவிலக்கு மனேக முண்டே.**

(இ-ள்.) அசலநிரஞ்சனமமிர்தமப்பிரமேயம்விமலம்வசனுதீதம், எ - து. அசலம், நிரஞ்சனம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம், வசனுதீதமெனவும்:- அசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகணுநிருபாகண்டம், எ-து. அசடம், அநாமயம், அசங்கம், அதுலம், நிரந்தரம், அகணு, நிருபம், அகண்டமெனவும்:- அசமனந்தமவிநாசிநிர்க்குண நிட்களநிரவயவமனுதி, எ-து. அசம், அனந்தம், அவிநாசி, நிர்க்குணம், நிட்களம், நிரவயவம், அநாதியெனவும்:—அசரீரமவிகார மத்துவித மெனவிலக்குமனேகமுண்டே, எ-து. அசரீரம், அவிகாரம், அத்துவிதமெனவும் விலக்குப்பரியாயநாமகுணங்களு மின்னுமனேக முளவாம், எ - று.

அசலம், சலனமின்மை. நிரஞ்சனம், களங்கமின்மை. அமிர்தம், அழிவின்மை. அப்பிரமேயம், அறியப்படாதது. விமலம், அழுக்கின்மை. வசனுதீதம், வாக்குக்கெட்டாமை. அசடம், மூடமின்மை. அநாமயம், நோயின்மை. அசங்கம், சங்கமின்மை. அதுலம், கனமின்மை. நிரந்தரம், இடையின்மை. அகணு, அணுவன்மை. நிருபம், ரூபமன்மை. அகண்டம், கண்டமன்மை. அசம், பிறவிக்குடன்படாமை. அனந்தம், இறப்புக்குடன்படாமை. அவிநாசி,யாதினுனுநசியாமை. நிர்க்குணம், குணமின்மை. நிட்களம், சகளமின்மை. நிரவயவம், அவயவமின்மை. அநாதி, ஆதியின்மை, அசரீரம், சரீரமின்மை. அவிகாரம், விகாரமின்மை. அத்துவிதம், துவிதமின்மை. எனக்கொள்க.

(க-து.) விலக்குகுணப்பரியாயநாமங்களினையவென்பது. சிலபிரதிகளில், விமலமசனுதீதமெனவும், நிருமலகோசரமெனவும், நிசமனந்தமெனவும், நிரஞ்சனம்மனுதியெனவும், விதிவிலக்கமனேகமெனவுமிருக்கின்றன, அவற்றையுமுய்த்துணர்க. சமஸ்தமதஸ்தரும் வஸ்துவிதிகுணத்ததென நின்றனர், அஃதோர்பக்கத்ததாமெனக்காட்ட விலக்குகுணமும்வகுத்ததென்க. இதனையினிவருங்கவியாற்காண்க. (கருஎ)

கருஅ - கவி. ௮ - கை.

[இவ்விதிவிலக்குகுணங்களொருபொருட்கேயன்றி வேறுக்
கன்றென விக்கவியிற்கூறுகின்றூர்.]

**இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்றூச்சேர்த்தொருமித்**
**தெல்லாங் கூட்டிச், சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை.யொ**

ருபொருளைச் சொல்லுஞ் சொற்கள், பின்னபத மாமதனாற் சத்தாதி குணப்பொருளாம் பிரம மேக, மன்னபொரு ளொருமையறிந் தகண் டபரி பூரணமா யாவாய் நீயே.

(இ - ள்.) இன்னவகைவிதிவிலக்குக்குணங்களன்றாய்ச் சேர்த்தொருமித் தெல்லாங்கூட்டி, எ-து. இன்னவாறாக விதித்த விதிவிலக்குகுணங்களைச் சேர்த்தொருங்கே யனைத்தையுங்கூட்டி:—சொன்ன பொருளொன்றன்றியிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ்சொற்கள் பின்னபதமாம், எ - து. வேதஞ்சொல்லியிருக்கிறபொரு ளொன்றேயன்றி யிரண்டாகவில்லை, ஆதலி, னொருபொருளைப்பற்றிச்சொல்லுஞ்சொற்க ளொருபொருள்குறித்தபல வேறுவகைபட்டசொல்லுகளாம்: — அதனாற்சத்தாதிகுணப்பொருளாம்பிரமமேகம், எ - து. இங்ஙனங்கூறியிருப்பதாற் சத்துமுதலாகக்கூறப்படு மூக்குணப்பொருளாவது பிரமம், அஃதேகமாம்:—அன்னபொருளொருமையறிந் தகண்டபரி பூரணமாயாவாய்நீயே, எ-து. அத்தகையதான பொருளினொருமையையறிந்து, அஃதிருந்தவண்ண நீயுமகண்டபரிபூரணமா யாகுதி, வேறு சங்கற்பிக்கற்க, எ-று.

சேர்ந்துகூடியென்றாக்கின் குணங்களெழுவாயாகவேண்டும், எழுவாயாக்கின் பயனிலையெங்கே. சொன்னவென்பதெனின், குணங்கள், சொல்லுமா? கூடாதுபற்றிக் குணங்களைச்செயப்படுபொருளாக்கிச் சேர்ந்துகூடியென்னுந் தன்வினைகளைப் பிறவினையாக்கிச் சொன்னவென்னும் பயனிலைக்கெழுவாய் வேண்டுமாதலால் வேதத்தைவருவித்தாம். ஒருபொருளைச்சொல்லுஞ்சொற்கள் பின்னபதமாமென்றதனால், ஒருபொருள்குறித்தபலசொல்லென்றாம்.இங்ஙனம் விதிவிலக்குகுணங்கள்கூறவந்தது, சச்சிதானந்தமேகமெனற்கன்றோ? அதனாற்சத்தாதிகுணப்பொருளாம் பிரமமேகமென்றார். அறிந்தாவாய்நீயே யென்றது, அகண்டபரிபூரணமாயென்றதனால், அஃதிருந்தவண்ணமெனவருவித்தாம். சச்சிதானந்தமொருமையெனக்கண்டவக்கணமே யவ்வொருமையே பிரமமெனத்தானேவிளங்கும். அங்ஙனம்விளங்கல்; நிருபாதிகமாதலின் வியாபகவிளக்கமாம், அவ்வியாபகவிளக்கமபரிச்சின்னமாதலினேகமாம், அதுபற்றிப் பிரமமேகமென்றதென்க. இந்நெறிசற்றுமறியார் கடவுளேகமெனலவர் போல்வரோற்பர். வஸ்துவிளங்க விதிகுணமும், அதுவுமிறக்க விலக்குகுணமும் வருத்ததென்க. எனவே, தானேதானாதற்கெனப்பெறும். (கஙஅ)

கூ௬கூ - கவி, அ - கை.

[நிர்க்குணவஸ்துவிற்குக்கூறுஞ்சகுண மெங்ஙனமமையுமென்ற வினாவிற்குவிடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

நிர்க்குணவஸ் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென னிகரொன் றாதே, சற்குணனே வஸ்துநிலை யுரையாமு லறியவல்ல சதுர

ருண்டோ, நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப்பிரம ஞானந் தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்லபிரம மாஞ் சொரூபந்தானே.

(இ-ள்.) நிர்க்குணவஸ்துவின் குணங்களுரைப்பதுதாய் மலடியெனனிகரென்றே, எ-து. நிர்க்குணவஸ்துவினுக்குக் குணங்களுரைத்தல் மலடியைத் தாயெனற்குச் சமானமாமேயெனச் சங்கியாநிற்றி:— சற்குணனே வஸ்துநிலை யுரையாம லறியவல்ல சதுரருண்டோ, எ-து. சற்குணமுடையோனே! வஸ்துநிலையினையதென வுதற்குரிய குணங்களைப் பிறருணர்த்தாமல் தாமேயுணர்ந்துகொள்ளத்தக்க வலியுள்ளமானுக்கருமுளரோ? இன்றேயதனால்:—நற்குணவேதங்களிந்தச் சீவன்முத்திபெறப் பிரமஞானந்தோன்றச்சொற்குணங்கள், எ-து. சச்சிதானந்தங்கள் நல்லசகுணமென வேதங்கள், இங்ஙனமாய சீவன்முத்திநிலைபெறவும், பிரமக்ஞானம் விளங்கவுஞ் சொல்லவந்தகுணங்களாம்:— பிரமத்தின்குணங்க ளல்லபிரமமாஞ்சொரூபந்தானே, எ-து. அவை பிரமத்தினது குணங்களல்ல பிரமசொரூபமாம், எ-று.

நிற்குணவஸ்துவின்குணங்களுரைப்பதென்பதற்கு, சகுணங்களை நிர்க்குணவஸ்துவின் குணங்களாக வுரைத்தலெனப் பொருள்கொள்ளினு மமையும். "சுரையாழவம்மிமிதப்பவரையனைய யானைக்கு நீத்துமுயற்கு நிலையென்பகானககாடன்சுனை." என்னுங்கவியில், சுரையாழாது, அம்மிமிதவாது, யானைக்கு நீத்தாகாது, முயற்குநிலையாகாது, இவைமுறனுகையில்; சுரைமிதப்ப, அம்மியாழ, யானைக்குநிலை, முயற்குநீத்தென மொழிமாற்றிப்பொருள்கொள்ளவேண்டும். அதுபோல விங்கும், தாய்மலடியென னிகரென்றே யெனக்கவியிருப்பினும், குணரகிதமான வஸ்துவுக்குக் குணங்கற்பித்தல், மலடியைத் தாயென்றுற்போலும். எனப்பொருள்படுதலால், தாய்மலடியென்பதை, மலடிதாயென மொழிமாற்றிப் பொருள்கொள்ளவேண்டும். கொள்ளாவிடில், முரணும். எங்ஙனமெனில்; சகுணவஸ்துவினிர்க்குணங்களுரைப்பது தாய்மலடியெனனிகரென்றேயெனக் கவியிருக்கின்முரணுது, இங்ஙனங்கவியின்றேயாதலின்முரணும். சகுணமாகவஸ்துவைக்கூறுது நிர்க்குணமாகக் கூறின் வஸ்து எங்ஙனம் விளங்கும். விளங்காதுபற்றி யிங்ஙனங் கூறியதென்க. சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்லவெனின், யாதினுலெனவருஞ் சங்கைக்குத்தரமின்றும். ஆதலினிங்ஙனமுரைகொண்டாம். சச்சிதானந்த நற்குணங்கள் வேதங்கள்சொல்லிய சகுணங்களாம். இதுவும் வஸ்துநிலைதெரிவிப்பதற்காகவென்க. இக்குணங்களே பிரமசொரூபமாதலின் பிரமத்தின் குணங்களெனின் தற்கிழமைப்பொருளதாம், பின்னுபின்னமதாம், பொருந்தாது. இக்குணங்களா லறிபடுவது வஸ்துவாயிருக்கக் குணங்களே வஸ்துவெனல் கூடாதெனின், சூரியனுக்குப் பிரகாசங்குணம், நமக்கக்குணமின்றிச் சூரியன்காணப்படான். எனவே, நமக்குச்சூரியன்வேறுயினும்பிரகாசத்திற்குவேறே? அல்லவே. பிரகாசரூபனேசூரியனே.

னற்குத் தடையென்னே? அதுபோலவே யிதனையுங்கோடற்குத்தடையென்னே? இதனைவிடாத விலக்கணையாற் காணலாம்.

(க-து.) சுருதிப்பிரமாணத்தால் சச்சிதானந்த வொருமையே பிரமமெனச் சிந்தித்துத் தெளிய வஃதே சூனியமாக்குமென்பது. இதனைக்கணிப்பது; அனுபவத்தாலன்றிக் கூடாது. கூடுமெனின், அவம். (கககூ)

கச0 - கவி. அ - கை.

[சுருதிப்பிரமாணத்தா லுணர்த்தியதுபோ லிதனையுத்திப்பிர
மாணத்தாலு முணர்த்தவேண்டுமென விறைவலை
யிக்கவியிற் கூறுகின்றார்.]

மோகவிருள் கெடக்கோடி யருணனென வருகுருவே மொழியக் கேளீ, ரேகபரி பூரணமா மென்சொருப மென்னுள்ளத்திலிறுகும் வண்ண, மாகமங்கள் சொன்னபடி யென்னையகண்டார்த்தமா வறிந்தே னையா, வூகமுமொத் திடவுரைத்தாற் பசுமரத்திலாணிபோ லுறையு நெஞ்சே.

(இ-ள்.) மோகவிருள்கெடக்கோடியருணனென வருகுருவேமொழியக் கேளீர், எ-து. மோகாந்தகாரமொருங்கே நசிக்க வுதித்த கோடிசூரியர்களைப் போ லடியேனுக்காக வெழுந்தருளிவந்தகுருநாதனே! இன்னுமோரையமுளததனையான்கூறக்கேட்டருளும்:— ஏகபரிபூரணமாமென் சொருபமென்னுளத்தி லிறுகும்வண்ணம், எ-து. ஏகபரிபூரணமாகவிளங்குமெனது சொரூபமான தென துள்ளத்தின்கண் திரம்பெறுமாறு:—ஆகமங்கள்சொன்னபடி யென்னையகண்டார்த்தமா வறிந்தேன், எ-து. சுருதிகள்கூறியமுறையே யென்னையகண்டபரிபூரண சொரூபமாகத் தரிசித்தேன் :— ஐயாவூகமுமொத்திடவுரைத்தாற் பசுமரத்திலாணிபோ லுறையுநெஞ்சே, எ-து. ஐயனே! யுத்திக்குமொத்திருக்கும்படி தெரிவித்தாற் பசுமரத்திலறைந்த வாணியைப்போ லஃதென்னுளத்தி லுறைந்துபோகும், எ-று.

மோகவிருள், உருவகம். மோகவிருள்கெடவருகுருவேயெனக்கொள்க. கோடியருணனென வென்பதுவமை. சிலபிரதிகளிலென்னுளத்தி லிருக்கும் வண்ணமெனவும், உறைக்குநெஞ்சேயெனவுமிருக்கின்றன. ஆகமங்கள் சொன்னபடி யென்னை யகண்டார்த்தமாவறிந்தேனென்பதினால், சச்சிதானந்த வொருமையைக்கண்டேனென்றாயிற்று. ஊகமுமொத்திடவுரைத்தாற் பசுமரத்தி லாணிபோ லுறைக்குநெஞ்சே யெனக்கொள்ளின், உறைக்குமென்பதுபிறவினையாதலின், அவ்வொருமையினெஞ்சமுறையும்படி செய்யுமென்றுரைகொள்ளவேண்டும். அப்போது; உரைத்தல், எழுவாய். நெஞ்சத்தை, செயப்படுபொருள். உறைக்கும், பயனிலை. தன்வினையாக்கில் அனுபூதி, எழுவாய். உறையும், பயனிலை. நெஞ்சம், ஏழாம்வேற்றுமைத்தொகை.

(க-து.) அவ்வநுபவம் யுத்திக்கொக்கத் தெரிவிக்கவேண்டுமென்பது. சுருதியுத்தியனுபவத்து ளினியுத்திவேண்டடல். இங்கேயாகமங்கள், ஞானத் தைமாத்திரம் பிரதிவாதித்தலா லற்பசுருதியை யன்று பிரபலசுருதியை. அதாவது ; ஞானகாண்டமென வறிக. (கசா0)

**௩௪௧ - கவி. அ - கை.**

[அவ்வினாவிற்கு விடைகூறுவான்வேண்டிச் சத்துஞ்சித்தும் மாறு திணங்கிற் சச்சிதானந்தமாம், மாறப்பெறி னநர்தசட துக்கமாம், எனவிக்கவியிற் கூறுகின்றார்.]

சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தாலுற் சாட்சி யெ ங்கே, சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதி யு மில்லை, யொத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாகு மூகத் துக்கோர், வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவம் விளைந் திடாதே.

(இ-ள்.) சத்தேசித்தாகுமயலெனிலசத்தா மசத்தாலுற் சாட்சியெங் கே, எ-து. சச்சிதானந்தமென்னுமொழி; சத்து, சித்து, ஆனந்தமென மூப்பதமாயிருக்கும். அம்முப்பதங்களுள், சத்தேசித்தாகவேண்டும். ஆகாது சத்துக்குச்சித்துவேறெனின், அப்போது சத்தெனலசத்தெனப்படும். அசத் தெனப்படின், அவஸ்தாத்திரியம், காட்சித்திரியம், அபிமானத்திரியம்போல் மாறுது நின் றவற்றையாங்காங்கு சாட்சியாயறிவதெங்கே ? இன்றெனின், இதுதினவனுபவமாயிற்றே யதுகூடாது, இருந்தன்றோவறியவேண்டும், இங் ஙனமிருந்தறிதலின், சத்தேசித்தாகுமென்பதொக்கும் :— (இதனால்) சித் தேசத்தாகுமயலெனிற் சடமாஞ் சடங்களுக்குத் திதியுமில்லை, எ-து. சித் தெனல்சடமெனப்படும். சடமெனப்படின், புல்லையாதியாஞ் சராசரப்பொ ருள்களாகிய சடங்களுதித்தலுக்கும், உதித்துப்பூத்துக்காய்த்தலாகிய திதி க்குமிடமெங்கே, இருப்பதனாலன்றோ விவ்வளவு முண்டாகின்றன, இவற் றிற்கெல்லா மாதாரஞ் சிற்சத்தியாதலின், இச்சிற்சத்தி யிருப்பதுகொண்டு, இத்தனையு நிகழ்கின்றன. ஆதலின் சித்தேசத்தாகும், இஃதுமுரணின்மை யினைக்கும்:—ஒத்தே தோன்றியசத்துஞ்சித்து நல்லசுகமாகுமூகத்துக்கோர் வித்தே, எ-து. இங்ஙனமொத்துத்தோன்றுவதாற் சத்துஞ்சித்தும் நல்லசுக மெனப்படுவதற் கையமின்று. ஐயமின்றமையி னிதுயுத்திக்கோர் விதை போல்வதேயாம்:—அன்னியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவம் விளைந்திடா தே, எ-து. நமதுமூடத்தாற் சத்துஞ்சித்து மன்னியமாகக்காணப்படுமாயின், சித்து, சடமாகவும்; சத்து, அசத்தாகவுமுடியும் ; முடியவே, துக்கானுபவ மன்றிச் சுகானுபவ மெங்ஙனம் விளையும் ? விளையாது, எ-று.

இது; பாசஞ், சத்தெனவும் ; பசு, சத்துசித்தெனவும்; பதி, சத்து, சித்து, ஆனந்தமெனவுங் கூறுமடமையை மறுத்தது. இவர்வாதம், தோற்ற

வாதமுஞ்சொல்வாதமுமேயன்றி யத்தவாதமன்று. அர்த்தவாதமெனின், இத்திரிபதார்த்தத்திற்கு மோர்சுயம்பேனு மோர்முதலேனு முளவாகச்சோதனையாதிமுகத்தால் முரணின்றிக்காட்டவேண்டும்; அங்ஙனமெவர்க்குங் கூடாமையின் பொருந்தாது.

(க-து.) சச்சிதானந்தவொருமை யிங்ஙனமன்றி வேறுவகையாற்கூடாதென்பது. இதனுக்கு முறனாக வொருமைகூறுவது; அவர்போல்வாரேற்றற்கன்றி யறிஞருக்கன்று. முறனுவொருமை யருமை. தானல்லாத வுபாதிகுணங்களைத் தொடாது தன்னைத்தான் தக்கோரரா னேக்கினல்லாற் சச்சிதானந்தவொருமை யெங்ஙனம் வாய்க்கும். வாயக்காமைக்கடையாளம், அயலைச் சச்சிதானந்த மெனல். முரணுமைக் கிடமின்று, இஃதேற்றற்பாற்றன்று. (கசக)

கசஉ - கவி. அ - கை.

[இன்னுமவ்வொருமையை வலியுறுத்துவான்வேண்டிச் சில சங்கைகளைத்தானே யாசங்கித்து, அதற்குரியதக்க விடைகளால் தானே சமாதானங்களை யிக் கவியிற் கூறுகின்றார்.]

வீயாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன்றாலோ, வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தேன் மலடிமைந்தன், பேயாகா ரியஞ்செயுமோ வசத்தெனவிப் படியதையும் பிரித்துச்சொன்னு, லோயாத வவத்தையாங் குதர்க்க விகற் பங்களை விட்டொழிந்தி டாயே.

(இ-ள்.) வீயாதசத்துமுன்னம்விளங்குவது தன்னாலோ வேறொன்றாலோ, எ-து. என்றுமழியா தொருதகைத்தா யின்றுள்ள சத்தெனப்படுவது ; பிரத்தியட்சமாகத் தான்விளங்குவது தன்னாலேதானோ ? அல்லது, வேறொன்றாலோ :—வாயால் வேறெனிலதுவு மசத்தோசத்தோ வசத்தேல் மலடிமைந்தன்பேயா காரியஞ்செயுமோ, எ - து. வெறுஞ்சொன் மாத்திரத்தால் வேறொன்றாலெனின், அந்தவேறொன்றாலெனப்படுவதும் அசத்தெனப்படுவதோ சத்தெனப்படுவதோ ? அசத்தெனப்படுவதெனின், மூடா ! மலடிபுத்திரனோர் காரியஞ்செய்வானோ ? செய்வானாயினதுவும் விளக்குதும் :—அசத்தென விப்படி யதையும்பிரித்துச்சொன்னால், ஓயாதவவத்தையாங்குதர்க்க விகற்பங்களைவிட் டொழிந்திடாயே, எ-து. அதையுமிப்படி யசத்தெனப் பிரித்துச் சொல்லுவையாயின் முடிவுபெறுதலுவன்தானோட பலமாகமுடியுமோ யிதென்னவிபரீதம், ஆதலி னிங்ஙனமாய குதர்க்க விகற்பங்களினின்று விலகுதி, எ-று.

ஞானமேபிரமமாதலா லிங்கேசத்தென்பது, ஞானம். ஞானமெனினு மறிவெனினு மொக்கும். அறிவுக்கறிவென்ப தோர்பட்சம், அறிவொன்றே

யென்பதோர்பட்சம். அறிவுக்கறிவென்பதில் ; முன்னறிவு, சிவனென வும், பின்னறிவு சிவமெனவுஞ்சொல்வர், முன்னறிவு தன்னையறிவதும், தான்விளங்குவதும், தன்ஞலன்று. பின்னறிவாலெனின், அந்தப்பின்ன றிவும் ; தன்னையறிவதும், தான்விளங்குவதும் வேறொன்ருலெனல்வேண் டுமே? இங்ஙனங்கூறுதல்கூடாதெனின், அங்ஙனங்கூறுதல்கூடுமோ ? முடி வுபெருதேயெனின், அறிவுக் கறிவெனக்கூருதொழியின் முடிவுபெறும். ஆயின், முன்னறிவு தன்னைத்தானறிவதும், தன்ஞல் தான்விளங்குவதுங் கூடுமோ? கூடுமெனின், நாமுமவ்வறிவாதலா விவவனுபவமப்போதெங்கே? விசாரணைசெய்யிலப்போதுங்காணும். எங்ஙனமெனின்; அவஸ்தாத்திரியம் காட்சித்திரியம், அபிமானத்திரியமென்னுமிவைதிரிசியமோ, திருக்கோ ? திரிசியமெனின், எந்தத்திருக்குவுக்கு? அறிவுக்கெனின், அவ்வறிவொன் ருே, இரண்டோ? இரண்டெனின், ஒவ்வொன்றிற்கு மெல்லைவரையறையி ருக்கவேண்டுமே? இருக்கின்றதெனின், எங்கே? வியஷ்டியுபாதியளவின தொன்று, சமஷ்டியுபாதியளவினதொன்று. இதில்; சிற்றறிவு வியஷ்டியு பாதியளவினதெனின், அதுநனவிலன்ருே? ஏனையவிரவத்தையிலுமெங்கே? இம்மூன்றவத்தையுந் தினமுநிலையாதுமாறும், இதையறியுமறிவுமாறுகின் றதோ? மாறுகின்றதெனின், அவவவ்வவத்தைகளையாங்காங்குநின்று சாட் சியாயறிவதெது? வேறின்ருமையி ஞென்றேயெனவுணர்க. நனவாகிறசாக் கிராவத்தைதோன்றும்போது, அண்டபிண்டங்கள்தோற்றும், அதுதோற் றச் சீவேசராகிற சிற்றறிவுபேரறிவுபேதந்தோற்றும், இங்ஙனந்தோற்றுவ தைத் திண்ணமெனக்கொள்ளின், இதுமாருதேனையவவத்தைகளறிவுக்குக் காணுதிருக்கவேண்டும். அங்ஙன மனுபவ மெவர்க்குமின்றே, ஆதலினறி வொன்றேயென்க. அறிவொன்ருதலாற் சத்தொன்றேயெனவும்; அதுவே சித்தெனவும், தன்ஞல்தானறிவதெனவும், தன்ஞல்தான்விளங்குவதென வுங்கூறியதென்க.

(க-து.) சத்துக்குச்சத்துவேறின்றென்பது. உண்டெனல்மூடம். தன் னைவிட்டாய்வாருக் கயலின்பமேயன்றிச் சுயானந்தமின்றென்க. காரியஞ் செயுமோசத்தென, இங்ஙனஞ்சிலபிறிதிகளிருக்கின்றன. வேறொன்ருலன் றித்தன்ஞல்தானிருப்பதுயாதோ? அதுசத்தெனவும், தன்ஞல் தன்னையுணர் வதும், தன்ஞல்தான்விளங்குவதும்யாதோ அதுசித்தெனவுமாம், இதஞல், இருப்பதேவிளங்கலின் சத்தேசித்தெனவும், விளங்குவதேயிருத்தலின், சித்தேசத்தெனவுங்கொள்ளப்பெற்ரும். பெறவே, சத்துஞ்சித்துஞ்சொற் பேதமேயன்றிச் சிறிதும்பொருட்பேதமின்றென விளங்கக்கண்டாம். கா ணவே, இவ்வொருமையே பிரதிசயானந்தமெனத் துணிதலுக்கிடமாயிற்று. ஆகவே, சுவானுபவப்பேற்றிற் கிஃதே தக்கயுத்தியென்றேற்கின்றது. இவ் விரண்டுவழியாலும் சச்சிதானந்த வொருமைக்குத்தி கூறியவாறுகாண்க. யுத்தியெனல்; தர்க்கம், அனுமானம், யுத்தியென்னுமூன்றுமடங்கிய மனவி த்துளொன்று. இவற்றையொக்க வாயாவிடத்து நமதுத்திக்கிசையவதெங்

நனம், ஐயந்திரிபின்றித்தெளிவதெங்ஙனம்? இன்றுதலாலமைதியின்றென்பதாயிற்று. ஆகவே, ஞானநூல் கற்றவெற்றிற்கு, நூலிலுள்ள யுத்திக்குச் சமாதானம் வேண்டுவதின்றெனின், பொய்யைமெய்யென்ற மூடரென்னுங் கவியில் ஞானமெய் யேனைய பொய்யென்னலாமா? மூர்த்தியாதிகளைக்கூறும் புராணமுஞ்சான்றோரும் அதையேற்போருமூடரா? இதென்னவியப்பு. பயனின்றெனக்கண்டாம். (கசஉ)

## கசங - கவி அ - கை.

[சச்சிதானந்தவொருமையைச் சுருதியுத்தியால்விளக்கிய வாறுபோல, அனுபவத்தாலும்விளக்குதுமெனலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

சுருதியுத்தி யொத்ததுபோ லனுபவமுங் கேள்சுழுத்தி சுகவா னந்த
மிருதிவடி வாதலினவ் வானந்த மேயறிவாம் வேறங் கில்லை
கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்கின் றாயே
யிருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரணமா யிருந்தி டாயே.

(இ - ள்.) சுருதியுத்தியொத்ததுபோலனுபவமுங்கேள் சுழுத்திசுகவானந்த மிருதிவடிவாதலினவ்வானந்தமே யறிவாம்வேறங்கில்லை, எ-து. முன்னர்கூறியது சுருதியுத்திக்கொத்து நின்றாற்போல, இனி யனுபவத்துக்கு மொத்துநிற்கக்கூறுதும், அதனையுங்கேளுதி. அதாவது; சுழுத்தியிற்காணுஞ்சுகமானதுஸ்புரணரூபமாதலின், அவ்வானந்தமேயறிவாம், இங்ஙனமன்றியறிவாதற்கு வேறோர்நெறியங்கிருக்கயாங்கண்டிலம்:— கருதுபிரளயஞ் சுழுத்தியிரண்டிலு நீயிருந்திருளைக்காண்கின்றாயே, எ - து. எவருநினைத்தற்குரியயுகாந்தப்பிரளயம், சுழுத்தியவஸ்தையென்னுமிரண்டுகாலத்தினு நீயிருந்துகொண்டாங்குமூடிய விவ்விருவிதவிருளையுங்காண்கின்றனையன்றோ:— இருதயத்திப்படிநோக்கி யேகபரிபூரணமாயிருந்திடாயே, எ - து. இவவாறுனதுள்ளத்திலெக்காலத்திலும், எவ்விடத்திலுநீயிருக்கநோக்கி யேகபரிபூரணமாகநீயிருந்திடுதி, எ-று.

தினசுழுத்தி, நனவிற்சுழுத்தியெனக்காட்டாதுபொதுப்படக்கூறியது; சுகரூபமேஸ்புரண ரூபமாகத்தடித்தலும், மீண்டுமந்தஸ்புரண ரூபமேயந்தச் சுகரூபமாகப்பெருகலு மிவ்விருசுழுத்தியிலுமாதலினென்க. ஆயிற்சுழுத்திபேதமென்னை? ஒன்றுநனவிற்சுழுத்தி, ஒன்றுமூடசுழுத்தி. இதனால், ஞப்தியேபிரியம், பிரியமேஞப்தியெனக்கண்டாம். இவ்வனுபவம் மூடசுழுத்தியிலெங்ஙனமெனின், நித்திரைத்தெளிவிலெழுநினைவு சுகமாயிருத்தலினாலும், விவகாரமுடிவில்மீண்டுமுறங்குங்கால், அந்நினைவுசுகத்தாகாரமழிவித்தனிப்படும்; அங்ஙனந்தனிப்படுதலேசுகப்பெருக்காம், அச்சுகப்பெருக்குக்கங்காணிநேரிடும்போது சிறியெழுதல்நினைவன்றோ, அப்போதச்சுகம் நினை

வாயிருத்தலினுனுமென்க. சத்தென்பீதுவேறன்றுநீயேயெனக்காட்டப் பிரளயஞ்சுழுத்தியிரண்டிலு நீயிருந்திருளைக்காண்கின்றுயேயெனவும், உன்னைவிடப்பரிபூரணம் வேறன்றெனக்காட்ட, இருதயத்திப்படிநோக்கியேபரிபூரணமா யிருந்திடாயேயெனவுங்கூறியவாறுகாண்க. தன்னையிங்ஙனம்விசாரித்துத்தெளிந்தவரோ? அருள், பரிபூரணம், ஆனந்தம், ஆனந்தாதீதந்தன்னைவிடவேறென்போர். நீயேதெளிதியெனத் தன்னனுபூதிநிலையைக்குறிப்பித்தாரென்க. முந்தியனுபூதிகூறுதது; தலைதடுமாற்றமென்னுந்தந்திரயுத்தி.

(க - து.) அறிவேயானந்தம், ஆனந்தமேயறிவெனல் விசாரணைத்தெளிவிலென்பது, ஆயின்மூடத்திலின்றேவெனின், உண்டு. விசாரியாக்குற்றமேயென்க.* அறிவன்றியவானந்தமும், ஆனந்தமன்றியவறிவுமில்லை. அறிவுநானெனலாயின், ஆனந்தம்யாது? பரமெனின், நானெனலின்றே? அதுததாகாரமாயதெனின், அப்போதயலெனல் சற்றுமின்மையி னானந்தமுமயலன்றும். இதுகற்பிதபேதமன்றி யறிவானந்தபேத மென்றுமின்றும். (கசரு)

கசசு - கவி. அ - கை.

[இவவனுபூதிகேட்டவக்கணமே சமாதிகூடித்தெளிந்தானெனலையிக்கவியிற்கூறுகின்றார்.]

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமனு பவம்விடாமற், பலமலரின் மதுப்போலச் சச்சிதா னந்தமொன்றும் பரமார்த் தத்தைப், பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்விழித்துப் பார்த்த போது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னனே.

(இ - ள்.) பலகலையுமுணர்ந்தகுருமொழிந்தபடி யிவனுமனு பவம்விடாமல், எ - து. சகலசாஸ்திரத்தேர்ச்சியுமுள்ள சற்குருநாதன்கூறியவண்ணம் மாணுக்கனுந் தனதனுபூதி நிலையினைவிடாமல்:—பலமலரின்மதுப்போலச் சச்சிதானந்தமொன்றும்பரமார்த்தத்தைப் பலபொழுதுங்கண்மூடிச்சமாதியிருந்தான், எ - து. பலமலரினின்றுசேர்க்கப்பட்டதேன்கூடுபோன்று, சச்சிதானந்தவொருமையெனப்படுவதே பரமார்த்தமாதலால், அதனைக்காணவூனக்கண்மூடிவெகு நேரஞ்சமாதியினின்றகலாதிருந்தனன்:—விழித்துப்பார்த்தபோது பலவடிவாஞ்சராசரசித்திரங்களெலாந் தோன்றுமொருபடமானனே, எ - து, பின்னர்விழித்துப்பார்த்தபோது, பலவேறுவகைவடிவாயுள்ள சராசரசித்திரங்களனைத்துந் தோன்றவரையப்பட்டிருக்கின்ற வொரு படத்தைப்போலத்தானுயினன், எ-று.

பரமார்த்தத்தையென்னுஞ் செயப்படுபொருளுக்குப் பயனிலையின்றுதலால், காணவென்பதைவருவித்தாம். தனக்கன்னியமாகக்காணுது தானுகியவியாபகவிளக்கத்திற் சராசரமாயுள்ளவனைத்தையுங்காண்டலிற் படத்தையுவமைகூறினர். படத்தைப்போ லென்றது தான்படமானனென்றத

ளுல், உருவகமெனினுமமையும். பரமார்த்தத்துக்குச்சச்சிதானந்தங் குண மென்பாரை மறுக்கச் சச்சிதானந்த மொன்றும்பரமார்த்தத்தையென்றார். சமாதிவிட்டு பிரியக்கூடாமையிற் பலபொழுதுமென்பதற்குப் பலதரமு மென்பாருமுளர். சமாதியிலென்னுநு விழித்துப்பார்த்தபோது தானொரு படமானேனென்றதனால், சகசசமாதியெனப்பெற்றாம்.

(க - து.) தானேசமஸ்தமுமாகவிளங்கினனென்பது. இங்கேயிவன்பட மானேனென்றதனால், விருத்திகிருட்டாந்தமெனப்பெற்றாம். பெறவே, ஏனை யமூன்றுந் தானேயமையுமென லருத்தாபத்தியெனக்கண்டாம். மதுவென் பது, ஆகுபெயர். பலமலரின் மதுக்கூட்டரவன்றித் தேன்கூடின்மைபோ லச் சச்சிதானந்தவொருமையன்றிப் பரமார்த்தமின்மையின், ஒருமையே வடிவாயிற்று. ஆகவே, வடிவும்பண்பாதலாற்பண்புவமை. என்னை, "பண் புந்தொழிலும்பயனுமென்றிவற்றி" னென்னும் விதியாற்காண்க. (கசச)

## கசரு - கவி. அ - கை.

[ துரியாதீதமுமேழாம்பூமியுமுக்கியமாமெனக் கூறியநிலையினையும்
அதன்வகையையுந்தெரிவிக்கவேண்டுமென்று மாணக்கன்
வினவலையிக்கவியிற்கூறுகின்றார். ]

**இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி யினிவே றுண்டோ, வதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றோ ஞானிக ளுக் கான நீதி, முதலுரைத்த துரியாதீ தமுமேழாம் பூமியுமுக் கிய மா மென்ற, பதமுமதின் வகையுமெனக் கெளிதாகத் தெளியும்வண் ணம் பணித்தி டீரே.**

(இ - ள்.) இதயமொத்தசற்குருவேநமக்கிதுவே விநோதமன்றியினிவே றுண்டோ, எ-து. அடியேன்மனதுக்கியைந்தெழுந்தருளியசற்குருநாதனே! நமக்குவிநோதமாயதிந்நிலையேயன்றி யிதுபோல்வதினியாவதுவேறுளதாக க்காணுமோ? இன்றாதலின்:— அதையுரைத்துமதைநினைத்துமிருப்பதன்றோ ஞானிகளுக்கானநீதி, எ-து. அங்ஙனமாயவனுபூதியையுரைத்துக்கொண்டும், அதையே சிந்தித்துக்கொண்டுமிருப்பதல்லவோ ஞானிகளுக்கியைந்தவொ முக்கமாவது :—முதலுரைத்த துரியாதீதமுமேழாம்பூமியு முக்கியமாமென்ற பதமுமதன்வகையு மெனக்கெளிதாகத் தெளியும்வண்ணம்பணித்திடீரே, எ-து. முன்கூறிய துரியாதீதநிலையும், ஞானபூமியிலேழாம்பூமியும், முக்கி யமாமென்றுகூறியபதமும், அதன்விபரமுமினையவென வெளிதிற்றெளிந் துகொள்ளும்வண்ண மடியேனுக்குவிளக்கியருளும், எ-று.

இதுகாறுமில்லையெனக்காட்ட, இனிவேறுண்டோவென்வும், ஏனையரு க்கன்றெனக்காட்ட, ஞானிகளுக்கானநீதியெனவும், இந்நிலையைப்பொ துவாக, கஙஉ - கவியிற்கூறியிருப்பதால், முதலுரைத்தவெனவுங்கூறினார்.

இவ்வினுக்களுக்குவிடை, கருக-முதல், கருரு-கவிவரையிற்காணலாம். முக்கியமாமென்னும்வினைக் கெழுவாய், துரியாதீதமும், ஏழாம்பூமியுமாதலாலவற்றைச்சங்கையிற்சேர்க்கப்படாது. என்றவென்னும்வினைக்கெஞ்சியது;பதமும், அதன்வகையுமாதலா லிவ்விரண்டைப்பற்றிவினுவியதாக விக்கவிகாட்டுகின்றது. நான்கெனக்கோடற்குக் கவியியையிற்கொள்ளலாம்.

(க - து.) மாணக்கனிவ்விரண்டையுந் தெளிந்துகொள்ளுமாறுவினுவினனென்பது. இவ்விரண்டிற்கும்விடைகூறுங்கால் தானேதுரியாதீதமும், ஏழாம்பூமியுமமையும். உரைக்குக்கவியன்று, கவிக்குரையாதலா லிக்கவிக்கியைந்தவாறுரையெழுதினும். என்செய்தும். (கசரு)

கசசு - கவி. அ - கை.

[இவ்வினுவுக்கு விடைஞானபூமியிற்சேர்ந்ததாதலின், ஞானஞ்ஞானபூமிகளைவிளக்காவிடில்தெரியாதெனக்கருதியிக்கவியி லஞ்ஞானபூமிகளைத்தெரிவிக்க அவற்றின்பெயர்களைக்கூறுகின்றார்.]

வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளே ழென்பா
ரினியவற்று ளஞ்ஞான பூமிகளே ழையுமுந்தி யியம்பக் கேளாய்
தனிவித்து சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த
கனவுகனக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றெழுபேர் கணித்தார்
மேலோர்.

(இ-ள்.) வினவுமிடத்தஞ்ஞானபூமிகளேழ்ஞானபூமிகளே ழென்பாரினியவற்றுளஞ்ஞானபூமிகளேழையுமுந்தியியம்பக்கேளாய், எ-து. அதைக்குறித்துச்சொல்லுமிடத்தில், அஞ்ஞானபூமிகளேழென்றும், ஞானபூமிகளேழென்றுஞ் சத்துக்கள்சொல்லுவார்கள். இனியவ்விரண்டுபிரிவினுள்; அஞ்ஞானபூமிகளேழையு முன்னர்சொல்லுதுமதனைக்கேளுதி:—தனிவித்துசாக்கிரஞ்சாக்கிரமகாசாக்கிரஞ்சாக்கிரத்தைச்சார்ந்தகனவுகன, எ-து. தனிமையாயுள்ள வித்துசாக்கிரம், சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பனம், சொப்பனம்:—கனவுசாக்கிரஞ்சுழுத்தி யென்றெழுபேர்கணித்தார்மேலோர், எ-து. சொப்பனசாக்கிரம், சுழுத்தியென்றிங்ஙனமேழுபேர்களை யுஞ்சத்துக்கள் சொல்லினர், எ-று.

தனித்துநிற்றலின், தனியென்றார். என்பாரென்றதனுற்சத்துக்கள் வருவித்தாம், இதுதோன்றுவெழுவாய். (கசசு)

(க-து.) வெளிப்படை.

கசஎ - கவி. அ - கை.

[அஞ்ஞானபூமியேழனுள் நான்குபூமிகளினியல்பை யிக்கவியிற்கூறுகின்றார்.]

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல்வித் தாகு
மிந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா மிதுாக னுவாம்

**வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாசா ஞவா**
**நந்துமகங் கொடுநனவின் மனோராச் சியஞ்செயலே நனுக்க னுவே.**

(இ-ள்.) முந்தவகண்டத்தெழுமோரறிவுமாத்திர மதுதான்முதல்வித்தாகும், எ-து. அகண்டபரிபூரணமாகவிளங்குஞ் சுத்தசயஞ்சைதன்னியத்தில்முதலில் தான்மாத்திரமாக வெழுந்தஞெப்திஸ்புரிப்பெதுவோவதுவேவிந்துசாக்கிரமெனப்படும்:—இந்தவறிவிற்பண்டில்லாவகந்தை முளைபோலாமிதுநனுவாம், எ-து. இந்தஞெப்திஸ்புரிப்பில்முன்னென்றுமிலாத வாணவமங்குரம்போலெழும், இதுவேசாக்கிரமெனப்படும்:—வந்துவந்துபிறவிதொறு மகமமதைவளருமிதுமகாநனுவாம், எ-து. அந்தவகந்தையால்யானெனதென்னுமகமமதை பிறவிதோறும் வந்துவந்து வளர்ந்துகொண்டிருக்கும், இதுவேமகாசாக்கிரமெனப்படும்: — நந்துமகங்கொடுநனவின்மனோராச்சியஞ் செயலேநனுக்கனுவே, எ-து. அங்ஙனம் வளர்ந்துகொண்டிருக்குமகமமதைகொண்டு சாக்கிரத்தில் மனோராச்சியஞ்செய்வதே சாக்கிரசொப்பனமெனப்படும், எ-று.

மகாசமுத்திரத்திற்பரமாணுபோலெழுந்திவலைபோல்வதின், ஓரறிவென்னுமிகைபடமாத்திரமெனவும், அங்ஙனம்வளர்ந்துகொண்டிருப்பதைப்பற்றி நந்துமகங்கொடெனவுங்கூறினர். முன்னென்றுமில்லாதறிவுஸ்புரித்தல்போறலின், விந்துசாக்கிரமெனவும், அங்ஙனம்ஸ்புரித்தலளவாகின்றவறிவானதகந்தையென்றங்குறம்போலாகத் தானுமதன்மயமாகக்காண்டலின், சாக்கிரமெனவும், இவ்வகந்தைமேலீட்டாற்பிறவிதோறுமகமமதைவளரும், அவ்வகமமதைரூபமாகவளர்தல்போன்றறிவுகாண்டலின், மகாசாக்கிரமெனவும், அவ்வகமமதைமேலீட்டால் தடையின்றிமனோராச்சியம்புரிதல்போன்றவ்வறிவுகாண்டலின், சாக்கிரசொற்பனமெனவும்வந்ததென்க. (கசஎ)

**கசஅ - கவி. அ - கை.**

[ஏனையமூன்றுபூமியினியல்பை யிக்கவியிற்கூறுகின்றார்.]

**உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொற் பனமெனும்பே**
**ருடைய தாகும், பண்டுநனுக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பது**
**சொற் பனநனுவா, மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா மஞ்ஞான**
**வகைகள் சொன்னோம், விண்டுகிறை முத்திதரு ஞானபூ மிகளே**
**ழும் விளம்பக் கேளாய்.**

(இ - ள்.) உண்டுறங்கிமனோராச்சியஞ்செயல் சொற்பனமெனும்பேருடையதாகும், எ - து உண்டுறங்கிமனோராச்சியஞ்செய்தலே, சொற்பனமென்னும்பெயர்பெறுவதாம்:—பண்டுநனுக்கண்டுமறந் ததைமீண்டுநினைப்பது சொற்பனநனுவாம், எ - து. முன்சாக்கிரத்திற்கண்டுமறந்ததை மறுபடியு

நினைப்பதுசொற்பனசாக்கிரமாம் :—மண்மேயிருண் மூடுவதுசுழுத்தியாமஞ்ஞா னவகைகள்சொன்னோம், எ-து. மிகுந்தவிருள்மூடிக்கொள்ளத்தகுவது சுழுத்தி யெனப்படுவதாம், இதுவரையிலுமஞ்ஞானபூமிபேதங்களைச் சொல்லினோம்:— விண்டுநிறைமுத்திதருஞான பூமிகளேழும்விளம்பக்கேளாய், எ-து. பரிச்சேத பேதமகன்றுபரிபூரணமாவிளங்குமுத்தியைத் தரத்தக்கஞானபூமிகளேழையு மினியாஞ்சொல்லக்கேளுதி, எ-று.

அங்ஙனமனோராச்சியஞ்செய்தலோ டுண்டுறங்குவதுபோலறிவுகாண்ட லை, சொற்பனமெனவும், முன்கண்டுமறந்ததை மீண்டுநினைப்பதுபோலறிவுகா ண்டலை, சொற்பனசாக்கிரமெனவும், நன்குறங்குங்கால் மிக்கவிருள்மூடிக்கொ ள்வதுபோலறிவுகாண்டலை, சுழுத்தியெனவுங்கூறியதென்க.

(க-து.) இந்தவஞ்ஞானபூமியேழு மத்தியாரோபமெனக்காட்டக்கூறிய தென்பது. ஆகாயமானது; காற்று, அக்கினி, நீர், மண்ணாகப்பரிணமித்தது போற்காணினும், அவற்றால் தனக்காணிவிர்த்திதினைத்துணையுமில்லை. அது போல; சுசாதியாதிவிகற்பமின்றியவறிவானது; அஞ்ஞானபூமிகளாகிய மூல ப்பகுதிமுதல் தனுவிகுதியீறாக்கிடந்த கற்பனைகளாகப் பரிணமித்ததுபோற் காணினு மவ்வவற்றி னானிவிர்த்தி தினைத்துணையுந்தனக்கில்லை.உள்ளதுபோ ற்காண்டலி னிங்ஙனங்கூறினானென்க. இல்லாததை யுள்ளதுபோற்கூறவந் தது; உள்ளதாகக்கருதியதைவிலக்கற்கென்க. இல்லாததையில்லையெனக்கூறி னைவருமேலார். அதாவது; அறிவையன்றிச்சகமென்பதில்லையெனக்கூறுதல் போல்வது. சிருஷ்டிக்கிரமங்களாற்சகமுள்ளதாகமுடிக்கினைவர்க்குமுடன்பா டு.இங்ஙனமுடன்பாடாக யாமுங்கலந்து மெல்லமெல்லத்தளர்த்தல்வேண்டும். எங்ஙனமெனில்; உலகமும்யாமுங்கடவுள்சங்கற்பத்தாலன்றித்தோன்றச்சற் றுஞ்சுருதியுத்திகண்டிலம். ஆகவே, அந்தச்சங்கற்பம், நமக்குமுலகுக்குங்கார ணமோவன்றோ? காரணமெனின், மூன்றுகாரணத்துள்யாது? துணைக்காரண மெனின், அப்போதுகடவுள்நிமித்தகாரணமாகின்றது. முதற்காரணமெங்கே? மாயையெனின், யாமாசாமாயா, என்பதற்கருத்தமென்னை? இதுமலடிமைந்த னென்றாற்போலும், ஏனக்காட்டி வயப்படுத்துவதெனவறிக. (கசஅ)

### கசகூ - கவி. அ - கை.

[இனிஞானபூமிகளேழையுங்கூறுவான்வேண்டி யவற்றின் நாமங்களையிக்கவியிற்கூறுகின்றார்.]

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யாகு
நலதனுமா னசிமூன்றும் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி
சொலுஞ்சமுசத் திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேருந் துரியப்பேரு
மனைமறு மகனேயெய்ந் தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர்.

(இ-ள்.) புலவர்புகழ்முதற்பூமிசுபேச்சைவிசாரணையிரண்டாம்பூமியாகும், எ-து. மகான்களால் மதிக்கப்பெற்றஞானபூமிகளில், சுபேச்சை முதற்பூமியெனவும், விசாரணையிரண்டாம்பூமியெனவும்:—நலதனுமானசிமூன்றாம்பூமி சத்துவாபத்திநாலாம்பூமி, எ-து. நல்லதனுமானசிமூன்றாம்பூமியெனவும், சத்துவாபத்திநான்காம்பூமியெனவும்: — சொலுஞ்சமுசத்திப்பேரும் பதார்த்தாபாவனைப்பேருந்துரியப்பேரும், எ-து. சொல்லாநின்ற சமுசத்தியென்னும்பெயரும், பதார்த்தாபாவனையென்னும்பெயரும், துரியமென்னும்பெயரும்:—மலினமறுமகனேயைந்தாறேழு பூமிகளாவகுத்தார்மேலோர், எ-து. களங்கரகித மானஞானபுத்திரா! ஐந்தாம்பூமியெனவும், ஆறும்பூமியெனவும், ஏழாம்பூமியெனவும் பெரியோர்கள் வகுத்துச்சொன்னார்கள், எ-று.

சமுசத்தி, பதார்த்தாபாவனை, துரியம், இவற்றை; ஐந்தாம்பூமி, ஆறும்பூமி, ஏழாம்பூமியெனக்கூறியது, நிரனிறை. சுபேச்சை, சுபம்விரும்பல். விசாரணை, அங்கலிங்கவிசாரணையிற்றலைப்புகல். தனுமானசி, மனஞ்சிறுகல். சத்துவாபத்தி, உண்மையினிலையுறல். சமுசத்தி, சங்கற்பமறல். துரியம், அறிவுவிளக்கம், என்பன. சுபம்விரும்பல், மங்களகரமாதலைவிரும்பல். அதாவது; பூர்வபட்சமாதற்கியையாதது. நல, சொலும்; இடைக்குறை.

(க-து.) ஞானபூமிகளினுமங்களை யுணர்த்தியதென்பது. இனிவகையாதற்கிதுதொகையெனப்படும். (கசுக)

கரு௦ - கவி. அ - கை.

[ஞானபூமிகளினிலை யினையவெனத் தனித்தனிவிளங்க, நான்கு பூமிகளையிக்கவியிற்கூறுகின்றார்.]

துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை யாகு
நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையா நம்பி
முற்சங்க வீடணைகள் விடறனுமா னசியிந்த மூன்றினாலுஞ்
சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்திதானே.

(இ-ள்.) துற்சங்கநிவர்த்திவந்து சிவஞானம்விரும்புவதுசுபேச்சையாகும், எ-து. பொருளல்லவற்றைப்பொருளாகக்கொள்ளுந் துர்ச்சங்கசார்பகன்று மேலாயஞானமாதற்குவிரும்புவதுசுபேச்சையெனப்படுவதாம்:—நற்சங்கமொழிவினவி ஞானநூல்பழகல்விசாரணையாம், எ-து. பொருளைப்பொருளாகக் கொள்ளுஞ் சற்சங்கத்தைத்தழுவி யவருரைக்கு மொழிகளையையமறக்கேட்டு, இந்தொக்கஞானசாஸ்திரங்களிற் பலகாற்பழகல் விசாரணையெனப்படுவதாம்:— நம்பிமுற்சங்கவீடணைகள்விடறனுமானசி, எ - து. உண்மையெனச்சொல்லுதலாலவற்றினம்பிக்கையுற்று முன்னர் தனக்குச்சங்கமாயின்றுள்ள வீடணைத்திரியங்களை விட்டகறல் தனுமானசி யெனப்படுவ

தாம்:—இந்தமூன்றினாலுஞ் சற்சங்கமனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்திதானே, எ - து. இந்தமூன்றேதுக்களாலுஞ் சற்சங்கமயமானமனதின் கீண் மெய்யுணர்வெழல் சத்துவாபத்தியெனப்படுவதாம், எ-று.

(க-து.) நான்குபூமி; சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி யென்பன. (௧௫௦)

கருக - கவி. அ - கை.

[ஏனையமூன்றுபூமிகளினிலை யினையவென விக்கவியிற் கூறுகின்றார்.]

**தத்துவத்தின் மனமுறைந்து மித்தையெலா மறத்தல்சமுசத்தி யாகு, மத்துவிதா னந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தாபா வனையதா கும், வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவு னசுபா வந்துரிய மாகு, மித் துரிய பூமியைமுன் றுரியாதீ தப்பதமென் றதுவுங் கேளாய்.**

(இ - ள்.) தத்துவத்தில்மனமுறைந்து மித்தையெலாமறத்தல்சமுசத்தி யாகும், எ - து. உண்மையாதோவதில்மனமானதழுந்தி மித்தையெனப்படு வனவெவையோ வவற்றையொருங்கேமறந்துவிடுதல் சமுசத்தியெனப்படு வதாம்:— அத்துவிதானந்தம்வருந்திரிபுடிபோம் பதார்த்தாபாவனையதாகு ம், எ - து. அத்துவிதானந்தோதயமா யதனால்திரிபுடிபோகத்தகுவது பதார் த்தாபாவனையெனப்படுவதாம்:— வத்துநிலையிருந்தபடியிருந்த மவுனசுபாவ ந்துரியமாகும், எ-து. பிரமவஸ்துவினிலையெங்ஙனமிருந்ததோ வஃதிருந்தவ ண்ணந்தானுமிருக்க வதனாலெய்துமவுனசுபாவந் துரியமெனப்படுவதாம்:— இத்துரியபூமியை முன்துரியாதீதப்பதமென்றதுவுங்கேளாய், எ - து. இந் தத்துரியபூமியையே முன்னேதுரியாதீதபதமென்றுசொன்னமே யதனையு மிப்போதுயாங்கூறக்கேளுதி, எ-று.

உறைந்தென்பது, உறைத்தென்றாயது; தன்வினைபிறவினைமயக்கம். இங்கேயுண்மையாவது; ஆன்மா. உதாரணம். "மெய்யதேதெனிற் சச்சிதா னந்தமா வியாபிக்குமான்மாவே." இன்னுமுண்மையாவது; ஞானம். சிவ மெனற்கும், ஆன்மாவெனற்கும்பொருள்; ஞானத்தையன்றிச்சோதனையில் வேறுகண்டாருளரோ? உளரெனில், உபாதிகுணந்தொழிலன்றோ? இம்மூன் றையுந்தள்ளிக்காட்டவேண்டும். கூடாதெனில், ஒத்துக்கொள்வதற்குத்த டையென்னை? இதுநிற்க. சுசாதியாதிபேதமிறந்ததாதலின்ஞானத்தில்மனமு றைதற்குத்தடையென்னை? உறையவே, மித்தையெல்லாமறக்கவரும். மறக் கவரவே, அத்துவிதானந்தம்வரற்கும், திரிபுடியொழிவுக்கு மிடமுண்டாம். உண்டாகவே, பரமெங்ஙனமிருக்கின்றதோ வங்ஙனமிருக்கத்தானேயமை யும். அங்ஙனமாயவமைதியே, சுபாவமெனத்தக்கது. அச்சுபாவமே மகா மௌனமாம்.

(க-து.) இவ்விரண்டுகவியானு 'ஞானபூமியேழினிலை யினையவெனவிளக் கினுரென்பது. இங்ஙனம் விளக்கியது, இனித் துரியத்திற்கு மதீதத்திற்கு மபேதங்காட்டவேண்டியென்க. இங்ஙனம்விளக்காவிடிலெழுத்தறியார்கவி போலும். (கருக)

கருஉ - கவி. அ - கை.

[துரியமேதுரியாதீதமெனற்கு ஞானபூமியேழையுஞ் சுத்தபஞ்சா வஸ்தையாக விக்கவியிற்கூறுகின்றூர்.]

முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமாம் மூன்று ற் கப்பாற், சொற்பனமா மதுவுமெல்ல நழுவுமஞ்சாம் பூமியே சுழுத் தி யாகு, மற்புதமாஞ் சுவானுபவ மிகுமாறும் புவிதுரிய மதற்கப் பாலோர், கற்பனையில் லாதவிட மதீதமென்று மவுனமாக் காட்டும் வேதம்.

(இ-ள்.) முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற்சாக்கிரமாம், எ - து. ஞானபூமிகளில் முதலிலுள்ள சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னு மிம்மூன்றுபூமிநிலைகளெய்தினு முலகந்தோற்றிக்கொண்டிருப்பதாற் சாக் கிராவஸ்தையெனப்படும்:— மூன்றற்கப்பாற்சொற்பனமாமதுவுமெல்ல நழு வுமஞ்சாம்பூமியேசுழுத்தியாகும், எ - து. அந்தமூன்றுபூமிக்கப்பாலெய்திய நான்காம்பூமிநிலையே சொற்பனவஸ்தையெனப்படும், அந்தநான்காம்பூமி நிலையு மெல்லமெல்ல நழுவத்தக்க வவசரத்துதிக்கு மைந்தாம்பூமிநிலையே சுழுத்தியவத்தையெனப்படும்:— அற்புதமாஞ்சுவானுபவமிகு மாறும்புவிது ரியம், எ - து. அவ்வைந்தாம்பூமி நிலைக்கப்பால் மிகவுமற்புதமாயுள்ள தனதுசுவானுபவநிலைதோன்றும், அந்நிலைமீக்குறலேயாறும்பூமியாகும், அவ் வாறும்பூமி நிலையே துரியபதமென்னப்படும்:— அதற்கப்பாலோர்கற்பனை யில்லாதவிட மதீதமென்றுமவுனமாக்காட்டும்வேதம், எ - து. அந்தவாறும் பூமிநிலைக்கப்பா லெழுநிலையாகிய வேழாம்பூமி யாதோர்கற்பிதமு மிறந்த விடமாம், அவ்விடமேதுரியாதீதமென்று வேதமானதுசொல்லாமல்மவுனமாக க்காட்டிவிடும், எ-று.

சிவஞானம்விரும்பல், ஞானநூல்பழகல், ஈடணைகள்விடல், இம்மூன்று முலகத்தைமறைக்கற்பாலதன்றாமையின், புவிமூன்றினுமுலகந்தோன்றுமெ னவும், தொக்கியிருப்பதால், நான்காம்பூமியை வருவித்தாம். ஞானேதய விளக்க உலகஞ்சாயாவடிவம்போற் காணச்செய்தலின், மூன்றற்கப்பால் சொற்பனமாமெனவும், தத்துவத்தில்மனமுறைந்தபோது மித்தையெனப் படுவனவற்றையெல்லாம் மறந்துபோகச் செய்தற்பாலதாதலின், அதுவு மெல்லநழுவுமைந்தாம்பூமியே சுழுத்தியாகுமெனவும், அப்போதங்கேயெ ழுமானந்தக் துவிதமிறந்ததாதலினும், திரிபுடியென்பதிருத்தற் கிடமன் றாமையினும், அவ்வானந்தந்தெரிவுமயமாதலினும், அதனை, அற்புதமா

ஞ்சுவானுபவமிருமாறும்புவி துரியமெனவும், சுத்தசைதன்யமெங்ஙனமிருந்ததோவங்ஙனந்தானுதலே, அதற்கப்பாலோர்கற்பனையில்லாதவிட மதீதமென்றுமவுணமாக்காட்டும் வேதமெனவுங்கூறியதென்க.

(க-து.) முன்னர்கூறிய துரியநிலேயே துரியாதீதமன்றிவேறன்றெனற்கிங்ஙனங்கூறியதென்பது. இதுவும்வேதாந்திரம். மெல்லவென்பது செய்யுணடை, மெள்ளவென்ப துலகவழக்கம் சுகானுபவமெனினும், சுவானுபவமெனினுமொக்கும். இது மரூஉ. பூமியுமிடமாதலா லிங்கே கற்பனையில்லாதவிடமென்றதை யேழாம்பூமியாக்கிறும். (கருஉ)

## கருங - கவி. அ - கை.

[ துரியமேதுரியாதீதமெனற்கையுறுவண்ண மின்னும் வேறுவகையாற் சமாதானமிக்கவியிற்கூறுகின்றார். ]

துரியநிலந் தனிற்றுரியா தீதமெனின் மயக்கமென்று சுருதிமே
லோ, ரரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கிலாறும்
பூமி, மருவுசுழுத் தியிற்காட்சி சுழுத்தியென்பா ரென்பதுநீ மனதிற்
கொள்வாய், பெருமைதரு ஞானபூ மியின்விகற்ப மின்னமுண்டு பே
சக் கேளாய்,

(இ - ள்.) துரியநிலந்தனிற் றுரியாதீதமெனின் மயக்கமென்று சுருதிமேலோரரியதொருவிதேகமுத்தியதீதமென்பா ரதுகணக்கிலாறும்பூமி, எ-து. வேறென்னாது துரியபூமியில்தானே துரியாதீதமெனக்கூறின் ஐயமெய்துறுமென்று பிரபலசுருதியில்வல்லசான்றோர், அறிதற்கரியவொப்பற்றவிதேக முத்தியெனப்படுவது துரியாதீதமெனக்கூறுவர், அங்ஙனங்கூறப்படுவதும் ஞானபூமியேழென்னுங் கணக்கிலாறும்பூமியெனப்படுவதாம்:—மருவுசுழுத்தியிற்காட்சிசுழுத்தியென்பாரென்பது நீமனதிற்கொள்வாய், எ-து. ஆயினேழாம்பூமியோ, அங்குள்ள சுழுத்திசம்பந்த மில்லாதவறிதுயிலென்பர், என்றவர்கள் கூறுவதையு முன்மனதிற்கொள்ளுதி:— பெருமைதருஞானபூமியின்விகற்பமின்னமுண்டுபேசக்கேளாய், எ-து. யாவற்றினுமிக்கவுயர்வுதரத்தக்க ஞானபூமிகளின் விகற்பங்களின்னுமுண்டு, அதனை யாங்கூறக்கேளுதி, எ-று.

அதுவுமென்பதிலும்மை தொக்கது. அதுகணக்கி லாறும்பூமியென்றதனால், முன்கவிப்படிதுரியமென்றாயிற்று. ஆகவே, துரியமேதுரியாதீதமெனக் குறிப்பித்ததாகக்கண்டாம். ஆறும்பூமி துரியாதீதமாகவே, யேழாம்பூமியோ வென்றும். அவவேழாம்பூமி துரியாதீதத்துக்கு மேலிட்டதெனத்தோன்ற, மருவுசுழுத்தியிற் காட்சிசுழுத்தியெனற்குச் சுழுத்தியாயினுமூடமல்லாததால் சுழுத்திசம்பந்தமில்லாத வறிதுயிலென வுரைகொண்டாம். இல்லென்பது வினைத்தொகையாதலி னியல்பாயிற்று. என்பதுமென்றதிலும்மை, இறந்ததுதழீஇயவெச்சவும்மை. அதீதமெனிற்போதுமே மேலறிதுயி

லென்றது; மிகைபடக்கூறலென்னுங் குற்றமாமேயெனின், அறிதுயிலாவது; எல்லாமறிந்துமெல்லாமறியாதது. துரியாதீதமாவது; எல்லாமறியாதது. ஆயின், மூடசுழுத்தியினுமதீதஞ் சிறந்ததென்றதென்பற்றியெனின், தத்துவவிசாரத்தெளிவு காரணமாகவந்ததாதலினென்க. எல்லாமறிந்துமறியாததிலென்சிறப்பெனின், மூடமுமன்று, தெளிவுமன்றென்னலைப்பற்றியென்க. சத்துக்களேழாம்பூமியைக் காட்சிசுழுத்தியென்பரெனமுடிக்க. ஏழாம்பூமியிசையெச்சம். துரியம், சீவன்முத்தி. துரியாதீதம், விதேகமுத்தி- எனவே, துரியமேலீடேதுரியாதீதமெனற்கு, கணக்கிலாரும்பூமியென்றார். துரியமே துரியாதீதமெனின்மயக்கமுறுமேயெனின், சுருதிமேலோர்விதேகமுத்தியே' துரியாதீதமெனக்கூறலாமா ? அதுவு மேற்கவியிற்கூறியகணக்கி லாரும்பூமியென்னலாமா? அங்ஙனம்பிரபலசுருதிகளிருப்பதாற் கூறலாமெனின், இதுவுங்கூறலாம். ஆதலினையமென்னை. எனவே, சுருதிசம்மதமிங்ஙனமிருப்பதுபற்றிக்கூறலாமென்க. இதுகூடாதெனின், அதுவுங்கூடாது. அதுசான்றோராட்சியாதலா லிங்ஙனங்கூறினாரென்க. இன்னும், மருவுசுழுத்தியிற்காட்சிசுழுத்தியென்பதற்கு, பிரபலசுருதிகளில்மருவிய சீவசுழுத்தி, சிவசுழுத்தி, பரசுழுத்தியெனப்படுஞ் சுழுத்திபேதங்களி லேழாம்பூமிகாட்சிசுழுத்தியெனப் பொருள்கூறினு மையமின்றியமையும். இங்ஙனமுரைகொள்ளிலேழாம்வேற்றுமையாதலா லகரம் நகரமாகத்திரியலாம்.

(க - து.) சுருதிசம்மதம்போல மகான்கள்சம்மதமு மிங்ஙனமிருத்தலின் துரியநிலந்தனிற்றுரியாதீதமெனல் பொருந்துமென்பது. இங்ஙனங்கவிநோக்கறியா ருரைவேறென்பர். இதனாற் கவிவேறாகுமா, கவிக்கிலக்கணம் வேறாகுமா ? இதெல்லாந்தோன்றாமை. (கருரு)

## கருசா - கவி. அ - ைந.

[இந்தஞானபூமிகளையடைந்தோ ரவசரநாமங்களை யிக்கவியிற்கூறுகின்றார்.]

முன்னிலங்க ளேறியமு வருமப்பி யாசிகளா முத்த ரல்லர், பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேதமாகுஞ், சொன்னநடப் பூமிவந்த ஞானிகளை பிரமவித்தாந்தூய முத்த, ரின்னமுமப் பூமிகளின் பெருமைதனை நீயறிய யான்சொல் வேனே.

(இ - ள். ) முன்னிலங்களேறியமூவரு மப்பியாசிகளாமுத்தரல்லர், எ-து. முதலிலுள்ள சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னுமூன்றுபூமிகளி லேறிவந்தமூன்றுபேரு மப்பியாசிகளன்றிச்சீவன்முத்தரல்லர்:—பினனிலங்கள்வரன்வரியான் வரிட்டனெனுஞ்சீவன்முத்தர்பேதமாகும், எ - து. கடையிலுள்ள நான்காநிலத்தேறியோன்வரன், ஆறாநிலத்தேறியோன்வரியான், ஏழாநிலத்தேறியோன் வரிட்டனெனக்கூறப்படுவர். இதுதான்சீவன்

முத்தர்பேதங்களாம்:—சொன்னநடுப்பூமிவந்த ஞானியேபிரமவித்தாந்தூய முத்தன், எ-து. இப்போதுசொல்லிவந்தபூமிகளில் நடுவாயுள்ள நாலாநிலத்தே றிவந்தஞானியே, பிரமவித்தென்னும்பரிசுத்தசீவன்முத்தனெனப்படுவோனு ம்:—இன்னமுமப்பூமிகளின்பெருமைதனை நீயறியயான்சொல்வேனே, எ-து. இ ஃதன்றியுமின்னுமந்தஞானபூமிகளின் மகிமையைநீசெவ்விதாகவுணர்ந்து கொள்ளுமாறு யான்சொல்லுவன்கேளுதி, எ-று.

முன்னிலம், பின்னிலம், நடுப்பூமி, என்றதனால், முன்னிலம்; விசாரணை, தனுமானசியெனவும், பின்னிலம்; சமசத்தி, பதார்த்தாபாவனை, துரியமென வும், நடுநிலம்; சத்துவாபத்தியெனவும்பெறாம். முன்னிலங்களென்பதினு னும், மூவருமென்பதினுனும், பன்மைபற்றி மூன்றுநிலமெனக்கண்டாம். மூவ ருமென்பதிலும், பின்னிலங்களிலுமில்லாமையால், ஒருமைபற்றி நடுப்பூமி வந்தஞானியே பிரமவித்தாந் தூயமுத்தனென்றாம். வரன், வரியான், வரிட்ட னெனு மூவரைப்பற்றிச் சீவன்முத்தரெனப்பலர்பாலாக்கினரன்றி; வரர், வரி யார்,வரிட்டரெனவொவவொன்றையும் பலர்பாலாக்கவில்லை.ஆதலின்,பிரமவி த்தாஞானியே தூயமுத்தனெனவொருமையாக்கினும். முன்னிலங்களேறிய வென்றதனால்,பின்னிலங்களேறிய நடுப்பூமியேறிவந்தவென்றாம்.மூவருமுத்த ரல்லவொன்றதனால், ஏனையர்முத்தராமென்றாயிற்று. முதல்மூன்றுபூமியு மப் பியாசமெனவே, ஏனையபூமிக ளாரூடமென்றாயிற்று. இதனால்ஞானபூமிகள் போல் பூமியின்றெனக்கண்டாம். (கருச)

## கருரு - கவி. அ - கை.

[முதற்கண்ணுள்ளமூன்றுபூமிசெய்யுமகிமையும், முதற்பூமியி னருமையு மிக்கவியிற்கூறுகின்றார்.]

நாலாம்பூ மியின்வருமுன் மூன்றுபூ மியுமடைந்து நடந்து மாண் டோர், மேலான பதமடைந்து பிறந்துமெல்ல மெல்லவந்து வீடு சேர் வார், மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்தமை ந்தா, காலானமுதற்பூமி கைவந்தான் முத்தியுங்கை வந்த தாமே.

(இ-ள்.) நாலாம்பூமியில்வருமுன்மூன்றுபூமியு மடைந்துநடந்துமாண் டோர், எ-து. நாலாவதானஞானபூமிக்குவருமுன்னரே மூன்றுபூமியுமடை ந்து, அவற்றில்வழுவின்றி நடந்துவருகையிற் பிராரத்துவநீக்கத்தாலிறந் தோர்:—மேலானபதமடைந்து பிறந்துமெல்ல மெல்லவந்து வீடுசேர்வார். எ-து. பதவிகளில்மேலாயதைப்பலனாகவடைந்து, பந்தசென்மமல்லாதவிடு திசென்மமெடுத்துக் குழந்தைபோல்மெல்லமெல்ல வொவ்வொரு பூமியா கத்தவழ்ந்துகடந்துவந்து, ஐக்கியமுத்தியடைவார்கள்: — மாலானபவத்தில் விழார் முதற்பூமிகிடைப்பதுவேவருத்தமைந்தா, எ-து. ஞானபுத்திரா! இவர்

கள்பிராந்திருபமாணபந்தசென்மத்தி லொருக்காலுஞ்செனியார், இங்ஙனமி ருக்க, இதில்முதற்பூமிகிடைக்கிறதேவெகுவருத்தாமகுமே: — காலானமுத ற்பூமிகைவந்தால் முத்தியுங்கைவந்ததாமே, எ - து. அஸ்திபாரம் போல்வ தாகிய முதற்பூமி யொருவேளைகைகூடுமோனு லப்போதே முத்தியுங்கைகூடி னதாம், எ-று.

நடவாநிற்கவென்பது; நடந்தென்றது, காலமயக்கம். அங்ஙனமாயஞானு னுஷ்டானஞ்செய்துகொண்டிருக்கும்போது தேகநழுவினு மின்னுமவனுஷ் டானஞ்செய்துமுடித்தற் கியைந்ததேகம்வரும். வரவே, அதனைமுடித்து, அப் பால்செய்துமுடித்தற்குரிய ஞானுனுஷ்டானஞ்செய்யவேண்டிவரும். இம்மு றையேமுடிபுவரையினுஞ்செய்துவரும்போது, இடையிடையேதேகநழுவும், நழுவினுமனுஷ்டானம்விடாமற்செய்துமுடித்தல், மரபும், அனுபவமுமாதலி னிங்ஙனங்கூறினுரென்க. இதனையிவ்வுலகில்தானே காணலாம். இங்ஙனமாய சிந்தையிலார்க் கெங்ஙனங்காணப்படும். அந்தந்தமுயற்சியுடையோருக்கு, அதது தெரியுமன்றி மற்றெங்ஙனந்தெரியும். நழுவியசென்மமீண்டும்வருமாவெ னின், அதுவராவேனுந்தானியற்றிவந்த கன்மபேதவவசரநிலைகள்பற்பலபேத மாதலின், அவவவற்றிற்கியைந்தபலனும், பற்பலபேதவவசரபேதங்களாயிரு க்குமன்றே? அப்பலனையனுபவித்தாலன்றித்தீருமோ, தீராதுபற்றிச்சென் மம்வரவேண்டியதன்றே? வராவிடின், உயிர்களவாவடங்கற்கேதென்னை, அங்ஙனமவாவி விதிவிலக்குகட்ககலாது கன்மம்புரிவதற்கேதென்னை? வேண்டு வதின்றேல், உயிர்களோரோபிரகாரமாகவல்லாது பற்பலபேத வவசரபோகங் களை யவவவற்றிற்குரிய தனுகரணபுவனங்களைச் சாதனக்கருவியாக்கொண் டெதிரிலனுபவித்தற்கேதென்னை? அனுபவிப்பதால், மறுத்தற்கேதென்னை? அவாவற்ற வுயிர்களில்லை. அந்தவவா; பந்தம், விடுதியென்பவற்றுளொன்றன் பாலதாயிருக்கும். பந்தவவாகாமியத்தவத்தாலும், விடுதியவா; நிட்காமியதவ த்தாலுங்காணப்படும். பந்தவவா; தனக்கயலைச்சுகித்தற்பாலது. விடுதியவா; தன்னைத்தான் சுகித்தற்பாலது. இவ்விருவகையுமுலகிற்காண்கின்றோம். யாது தடுக்கினும், அனுபவத்தைத்தடுக்கலாமா? உயிர்கட்கனுபவமொருதகையதாவி ன்றே, இன்றுதலாலொத்துக்கொள்ளவேண்டும். இதனையுமறுக்கில், குதர்க்க த்திற்சேர்க்கப்படும். மனதின்றேல், விறுவுதற்கிடமின்றிவிடைதரவேண்டும். கூடாதேல், வாய்பொத்திக்கிடக்கைநன்குமதிப்பு.இதனைச்சுருக்கியுரைத்தாம். விரிக்கிற்பெருகும். இதுநிற்க.

(க-து.) ஞானபூமிகளின்பெருமையுமருமையுங்கூறியதென்பது. முதற் பூமிகைவந்தால் முத்தியுங்கைவந்ததாமேயென்றது, காலமயக்கம். இது;உரை யளவையானும், காட்சியளவையானு மிவற்றிற்கிவைகாரணமாகத்தெளிந்த மையின் தெளிவாயிற்று. மலானபவம், பந்தகன்மத்துக்கியைந்தசென்மம். பிற க்தென்றது; இங்கேவிடுதிகன்மத்துக்கியைந்தது. (கடுரு)

கடுசு - கவி. அ - கை.

[இந்தஞானபூமிகளிலொன்றையேனு மிரண்டையேனுமெய்தி னோன் மிக்கவிழிஞனேனும், சீவன்முத்தனே யென்பதையிக்கவியிற் கூறுகின்றார்.]

இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தா ராலு
லப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குருபாதத் தாணை மெய்யே
தப்புரையென் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கியாதே
செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்தி டாயே.

(இ-ள்.) இப்புவியிலிஞ்ஞானபூமியொன்றிலிரண்டில்டைந்திருந்தாரானு ல், எ-து. இவ்வுலகின்கண் இந்த ஞானபூமிகளேழெண்களு ளொன்றிலேனு மிரண்டிலேனுஞ்சேர்ந்திருப்பாராயின்:— அப்புருடர்மிலேச்சராகிலுமுத்தர் குருபாதத்தாணைமெய்யே, எ-து.அந்தப்புருடர்கள்மிக்கவிழிஞராயினுஞ்சீவன் முத்தர்களே யிதிலையஞ்சற்றுங்கொள்ளற்க; இது குருபாதத்தாணைப்படிசத்தி யமே:—தப்புரையென்றவர்கெடுவார் நடுவானமறைகளைநீசங்கியாதே, எ - து. இவவளவாணையிட்டு மிதுதப்பார்த்தமென் றிதனைச்சற்றுமேலாரினியென்று மீளாதுகெடுவர். ஞானுஞ்ஞானங்களுக்கு நடுநிலையாயுள்ள வேதவாக்கியங்க ளைப்பற்றி நீவிபரீதமாகச்சங்கைசெய்யாதே:—செப்புமொழிவழிதிடமா யகம் பிரமமென்றிருந்துதெளிந்திடாயே, எ-து. இதுவரையுங்கூறிவந்த வுபதேச மொழிவழியேயுறுதியாகநின் றகம்பிரமமெனச்சிந்தித்திருந்துதெளிதி, எ-று.

பொதுப்படவொன்றிலிரண்டிலெனக்கூறினும், முதல்பூமியுமிரண்டாம்பூ மியுமெனக்கொள்க. மிலேச்சர், விதிமார்க்கத்துட்சற்றுமடங்கார். நடுவானம றைகள், மத்தியகத நிலவடிவாயுள்ள வேதங்கள். அகம்பிரமம், யானெனல்யா தோவதுபிரமம். யானெனல் பூர்வபட்சமாதற் கிடமின்றிக்கண்டுதெளிந்து ழியன்றிப் பிரமமெனல் பொருந்தாதென்பார், இருந்துதெளிந்திடாயேயென் றார். எனவே, சொல்லாலும், நினைவாலும், யான்பிரமமெனக்கோடற்கவென் றாயிற்று. ஆகவே, எதுயானென்னலோ அதனையுள்ளவாறுகண்டாற்போதும். அது வேபிரமநிலையதாகும். நீகொள்வதில்விபரீதத்ததாகும், அப்போது நீகெடுவை யெனக்கண்டாம்.

(க - து.) இந்தஞானபூமிவேதசம்மதமாதலி னிதின் வழித்தாகவே சிந் தித்துநிற்றியென்பது. மிலேச்சராகிலுமென்பதிலும்மை, இழிவுசிறப்பு. ()

கடுஎ - கவி. அ - கை.

[இழிஞனுக்கும் முத்தியெனில் துறவறங்கொள்வானே னென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான பூமியென்று
செல்லாகி முனைக்குமெனைத் தண்டுலமாக் கியகுருவேநீர்சொன் னீரோ

இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கி யானோ
ரல்லாமன் முத்திபெறு ரென்றுசிலர் சொலுமயக்க மகற்று வீரோ.

(இ-ள்.) பொல்லாதமிலேச்சருக்கும் விதேகமுத்திதருஞானபூமியென்று, நெல்லாகிமுளைக்குமெனைத் தண்டுலமாக்கியகுருவேநீர்சொன்னீரே, எ-து. நெல்போன்றுமுளைக்கின்ற வடியேனை யரிசிபோன்றுபதமாக்கியசற்குருவே! கொடியபாதகருக்கும் ஞானபூமியானது; விதேகமுத்தியைத்தருமென்று தேவரீர்சொன்னீரோ யதுவேசரியென்றுகொள்ளின்: — இல்லாளுங்குடும்பம்விட்டுச் சந்நியாசம்புகுந்தேகாங்கியானோரல்லாமல், எ-து. மனைவியோடுகூடியாளுகின்ற குடும்பத்தைப்பற்றுவிட்டுச் சந்நியாசவாசிரமத்திற்புக்கு, ஏகாங்கியானெவரோ வவரேயல்லாமல்:—முத்திபெறுரென்று சிலர் சொலுமயக்கமகற்றுவீரோ, எ-து.ஏனையோரெவ்வண்ணத்தராயினுமுத்தியடையார்களென்று சிலர்சொல்லிக்கொள்ளுகின்ற பெரியமயக்கத்தைநீக்கியருளவேண்டும், எ-று.

இங்கேநெல்லென்பது, பதரோடபேதமாயவரிசியை. எனவே,முளைத்தற்கிடம்பெறுமாறுபோன்று பிறவிக்கிடம்பெறுமாறென்றாயிற்று. இல்லாளோடுகூடியாளுங்குடும்பமெனவே, தாய்தந்தைமக்கள் சகோதரர் பாட்டன்பேரன் முதலியோரைப்பெற்றாம். மயக்கம், தெளிவின்மை. அதாவது; எங்கே குடும்பக்கலக்க மின்றோ, அங்கே ஞானம் பலிக்குமன்றி யேனையிடத் தெங்ஙனம் பலிக்குமென்பார்சிலர். எவ்வருணத்தாரொத்திறத்தாராயினும் பூர்வசமஸ்காரத்தாற் பரிபாகிகளாயில் பலிக்குமென்பார்சிலர். இவற்றுள்யாதிலுந்துணிவுறாமை. மிலேச்சரென்றது பொல்லாதவென்றவைடைகொடுத்ததினால், கொலைபாதகரென்றாயிற்று. சீவன்முத்திதருமென்னாது விதேகமுத்திதருமென்றது, ஞானபூமியின்மகிமைதோன்றவென்க.

(க-து.) துணிபுதோன்றவினாவியதென்பது. (கருஎ)

கருஅ - கவி. அ - கை.

[அதற்குவிடைகூறுவான்வேண்டித் துறவுநால்வகையெனவவற்றினுமங்கவை யிக்கவியிற்கூறுகின்றார்.]

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டழியுந் துறவுநால் வகையாகு மவைகளுக்கங் காகும் பேர்கள்
பட்டதுயர் கெடுங்குடீ சகம்பகூ தகம்ஹம்சம் பரமஹம்சம்
விட்டகலுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேடமன் றே.

(இ - ள்.) சிட்டர்புகழ்மகனேநீ சங்கித்தசங்கைநன்றுதெரியக்கேளாய், எ-து. சற்சனரால்மதிக்கப்பெற்றஞானபுத்திரா! நீகேட்டகேள்விமிகச்சிறப்புடையது, அதுதெரியக்கூறுது மதனைக்கேளுதி: — கட்டழியுந்துறவுநால்வ

கையாகு மவைகளுக்கங்காகும்பேர்கள், எ-து. பந்தக்கட்டழியத்தக்கசந் நியாசத்துவ நான்குவகையாயிருக்கும், அவைகளுக்காங்காங்குவரும்பெயர் களோ: — பட்டதுயர்கெடுங்குடீசகம் பகூதகம்ஹம்சம்பரமஹம்சம், எ-து. பிறவிதோறும்பட்ட துயரநசிக்கத்தக்க குடீசகம், பகூதகம், ஹம்சம், பரம ஹம்சம், எனநான்குவகையாகும்:—விட்டகலுந்துறவுக்கு விராகங்காரணம ன்றிவேடமன்றே, எ - து. பந்தத்தைவிட்டுநீங்கத்தக்க சந்நியாசத்துக்குநிரா சைகாரணமேயல்லாமல் வேஷங்காரணமல்லவே, எ-று.

ஆசைநீக்கத்துக்குச் சந்நியாசவேடமடையாளம். அது நீங்காவிடத்து வேடத்தாற்பயனென்னே. பெருமைக்கும், உணவுக்குமன்றே. மிகக்கற்றுச் சந்நியாசத்தை நிலையுறுத்துவதாற்பயனென்னே. இன்றென்பதுதோன்றத் துறவுக்குவிராகங்காரணமன்றி வேடங்காரணமன்றேயென்றார்.

(ந - து.) சந்நியாசநான்குவகைக்கும் பெயரிவையவென்பது. இங்ஙன மகூறியது, விராகத்தைநோக்கற்கு. விராகமில்லார்வேடம் பசையற்றதெ ன்க. (கறு௮)

கறுகூ - கவி. அ - கை.

[அந்தவிராகம்மூன்றுவகையாமென விக்கவியிற்கூறுகின்றார்.]

மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு மெனமூன்று வகைவி ராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராகமந்த
மிந்தவுட லளவுமனை தனம்வேண்டா மெனவிடறீ விரமென் பார்க
ளந்தணர்நூன் மித்தையென விடலதுதீ விரதரமா மறிந்தி டாயே.

(இ - ள்.) மந்தமுந்தீவிரமுந் தீவிரதரமுமென மூன்றுவகைவிராகம், எ-து. மந்தம், தீவிரம், தீவிரதரம், எனவிராகம்மூன்றுவகைப்படும்:—வெந் துயரம்வரும்பொழுது குடும்பத்தைவெறுத்துவரும்விராகமந்தம், எ - து. மிகக்கொடியதுயரநேரிட்டபோது குடும்பத்தைவெறுத்துவிடற்கெழும் விரா கம்மந்தமெனவும்: — இந்தவுடலளவுமனைதனம்வேண்டாமென விடறீவிர மென்பார்கள், எ - து. இத்தேகமுள்ளளவு மனைவிதனமாதிகள்வேண்டாமெ ன் றவற்றைவிட்டகலல்தீவிரமெனவும்:—அந்தணர்நூல்மித்தையென விட லதுதீவிரதரமா மறிந்திடாயே, எ-து. பிராமணர்களனுட்டிக்கத்தக்க நூலா கியகன்மகாண்டத்தை மித்தையெனக்கையறவிட்டுவிடுநிலையாதோ வது தீவிரதரமெனவுமாம், இதனைநீதெரிந்துகொள்ளுதி, எ-று.

குடும்பத்தில்தோடதிஷ்டியெழலாகியவிராகம், மந்தம். இதுகாரணமாக மனைவியாதிகளையொருங்கேவிட் டகலலாகியவிராகம், தீவிரம். ஒருங்கே விடல்காரணமாக ஞானகாண்டத்தையனுட்டிக்கவேண்டிக் கன்மகாண்டத்தி லெமங்கோடதிஷ்டியாகியவிராகம், தீவிரதரம் என்க. வெறுத்துவரும்

விராகமென்பது, வெறுத்துக்கொண்டுவரும்விராகத்தை. வெந்துயரம்வரும் பொழுதெனவே, வராதபோது விராகந்தோன்றற்கிடமின்றாயிற்று. இடமின்றாகவே, மந்தம், தீவிரம் தீவிரதரமென்றபெயர்வருதற்கிடமென்னை. இன்றாகவே, அறத்துளொன்றாகிய துறவறமென்றதேயில்லை. இல்லையாகவே, ஞானநூலென்பதெற்றிற்கெனப்பெற்றாம்.

(க-து.) நிராசையேதுறவென்பது. வேடமுமஃதுண்டாயிற்சிறக்கும். ()

௧௬0 - கவி. அ - கை-

[அம்மூன்றுவகையில் மந்தமுந்தீவிரமுமினையவென

விக்கவியிற்கூறுகின்றார்.]

பாவிமந்த விராகத்திற் சந்நியா சங்களொன்றும் பலித்தி டாதே
தீவிரத்திற் குடீசகமும் பகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்டாந்
தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சகங்க ளெங்கு [ர்.
மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குபகூ தகமுமென விதித்தார்மேலோ

(இ - ள்.) பாவிமந்தவிராகத்திற்சந்நியாசங்க ளொன்றும்பலித்திடாதே, எ - து. கொடியமந்தவிராகத்தைச்சார்ந்த சந்நியாசநிலைகளிலொன்றேனும்பலிக்கமாட்டாது: — தீவிரத்திற்குடீசகமும்பகூதகமு மென்றிரண்டு திறங்களுண்டாம், எ - து. தீவிரவிராகத்தில்குடீசகம், பகூதகமெனவிரண்டு பாகுபாடுகளுள: — தாவிநடந்திடத்திடமிலாதவர்க்குக்குடீசகமும், எ - து. அவற்றுள், கொஞ்சதூரந்தாவிநடக்க வலியில்லாதவர்க்குக் குடீசகமெனவும்: — சகங்களெங்குமேவிநடந்திடத் திடமுள்ளவர்க்குப் பகூதகமுமென விதித்தார்மேலோர், எ-து. உலகிலெத்தேசத்தின்கண்ணுஞ்சென்று, அப்பாலப்பால்தாவிநடக்கவலியுள்ளவர்க்குப் பகூதகமெனவும்பெயர்விதித்தன ரறிவிற்சிறந்தசத்துக்கள், எ-று.

மந்தம்; விராகம்போற் சொல்லாலும், அபிநயிப்பாலுங்காண்டலேயன்றிவேறின்மையி னதனைக்காண்பாரவரைமெய்யெனநம்பிவிடுவர், அதனாலவர்கரவிற்போகநுகர்தற்கிடமுண்டாம், இதுபற்றிப்பாவிமந்தவிராகத்திற் சந்நியாசங்களொன்றும்பலித்திடாதென்றார். மீண்டுமவ்வூர்களிற்செல்லாவண்ணந் தினமொன்றிற்கேழூர்சுற்றலெனனும்விதியிருப்பதாற் சகங்களெங்குமேவிநடந்திடத் திடமுள்ளவர்க்குப்பகூதகமெனவும், அங்ஙனநடக்கத்திடமற்றவர்க்குக் குடீசகமெனவும்பெயர்வந்தமைகாண்க. இங்ஙனஞ்சுற்றல்பற்றனுகாமைக்கு.

(க-து.) மந்தவிராகசந்நியாசங்கள் பயனின்றெனவும், தீவிரவிராகப்பாகுபாடாகிய விரண்டுவிதசந்நியாசங்களினையவெனவுங்கூறியதென்பது.

கசுக - கவி. அ - கை.

[தீவிரதரவிராகப்பாகுபாடாகிய விரண்டுவிதசந்நியாசநிலைக.

இருவகைதீ விரதரத்து மம்சனென்றும் பரமாம்ச னென்றுஞ் சொல்வார், வருமம்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தென்பார், பரமாம்ச னுக்குமுத்தி யிவ்வுலகின் ஞானத்தாற் பலிக்கு மென்பார், திரமருவும் பரமாம்சன் றனுமிரு வகையாகுஞ் செப்பக் கேளாய்.

(இ - ள்.) இருவகைதீவிரதரத்துமம்சனென்றும் பரமாம்சனென்றுஞ் சொல்வார், எ - து. தீவிரதரமிருவகைப்படும். அங்ஙனமாயதீவிரதரத்துமவ விருவகையையும், அம்சனென்றும் பரமாம்சனென்றுஞ் சத்துக்கள்சொல் வார்கள்: — வருமம்சனுக்குமுத்தி சத்தியலோகத்தன்றி வாராதென்பார், எ - து. சந்நியாசவிதி வழுவாதுநடந்துவருமம்சசந்நியாசிக்கு மோட்ச மானது பிரமன்வசிக்குஞ்சத்தியலோகத்தெய்தினலன்றி யிம்மையில்வரா தென்றுசொல்வார்கள்:—பரமாம்சனுக்குமுத்தி யிவ்வுலகில்ஞானத்தாற்பலிக் குமென்பார், எ-து. பரமாம்சனுக்குமோட்சமானது, இம்மையிற்றனே ஞான த்தாற்கிடைக்குமென்றுசொல்வார்கள்: — திரமருவும்பரமாம்சன்றனு மிருவ கையாகுஞ்செப்பக்கேளாய், எ - து. நிலைபெற்ற பரமாம்சசந்நியாசனுமிருவ கைப்படுவன், அவற்றையாஞ்சொல்லக்கேளுதி, எ-று.

வருமென்பதினல், சந்நியாசநூல்களின் விதிவழுவாதுநடந்துவருமெ ன்றும்.

(க-து.) தீவிரதரத்தினிருவகை சந்நியாசநிலைகளினையவென்பது. (கசுக)

கசுஉ - கவி. அ - கை.

[பரமாம்சமிருவகையாமெனலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்களவ ரிற்சிஞ் ஞாசு, மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூமி யுண்டாக்கும் விவேகி யானேன், சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி யடைந்திருக்குந் தூய மேலோ, னஞ்ஞான மகலுமந்தச் சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய்.

(இ - ள்.) சிஞ்ஞாசுஞானவானென்றிரண்டுபேர்களவரில், எ-து. மேற்ப ரமாம்சசந்நியாசனிருவகையாவனென்றார் அவை, சிஞ்ஞாசெனவும், சுஞ் ஞானவானெனவும்பெயரன. அப்பெயரையுடைய சந்நியாசிகளிருவரில்:— சிஞ்ஞாசுமெய்ஞ்ஞானபூமியின் முன்மூன்றுபூமியுண்டாக்கும்விவேகியானே ன், எ-து. சிஞ்ஞாசென்போன் மெய்ஞ்ஞானபூமியேழனுள், முதலினுள்ள மூன்றுபூமியுண்டாக்கின்ற விவேகவடிவானவன் :— சுஞ்ஞானவானென்

போன் சீவன்முத்தியடைந்திருக்குந்தூயமேலோன், எ - து. சஞ்ஞானவா னென்பவன் சீவன்முத்தி நிலையையடைந்த பரிசுத்த நெறியிற்சிறந்தவன் :— அஞ்ஞானமகலு மந்தச்சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய், எ - து. அஞ்ஞானநீங்கத்தக்க அந்தச்சிஞ்ஞாசென்போனு மிருவகையாவன், அதனையும்யாங்கூறக்கேளுதி, எ-று.

சஞ்ஞானவானென்பது, ஞானவானென்றிருத்தல்முதற்குறை. சிஞ்ஞா சுமென்பதிலும்மை, எதிரதுதழீஇயவெச்சவும்மை.

(க-து.) பரமாம்சனிருவகைசந்நியாசநிலை யினையவவென்பது. (௧௯௨.)

**௧௯௩ - கவி. அ - கை.**

[சிஞ்ஞாசுவினிருவகைநிலையு மினையவென விக்கவியிற்
கூறுகின்றார்.]

பந்தமனை துறந்துசில ரதிதிகளா யிருந்தடைவர் பரம ஞான
மந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா யிருந்துசில ரடைவர் ஞான
மிந்தவகை சாத்திரத்து முலகத்து நடப்பதுங் கண் டிருந்து மைந்தா
சிந்தனையின் மயக்கமென்ன சுருதியுத்தி யனுபவத்தாற்றெளிந்திடாயே.

(இ-ள்.) பந்தமனைதுறந்துசிலரதிதிகளா யிருந்தடைவர்பரமஞான, எ-து. சிலர்பந்தத்துக்கிடமாயுள்ள மனைவியாதிகளைத்துறந்துவிட்டுச் சந்நியாசிகளாயிருந்து பிரமஞானத்தையடைவார்கள்:— அந்தணர்மன்னவர்வணிகர் சூத்திரராயிருந்துசிலரடைவர்ஞானம், எ-து. சிலர் பிராமணராயும், அரசராயும், வைசியராயும், சூத்திரராயுமிருந் துஞ்ஞானத்தையடைவார்கள்: — இந்தவகைசாத்திரத்துமுலகத்து நடப்பதுங்கண் டிருந்துமைந்தா, எ-து. சற்புத்திரா ! இவ்வண்ணஞ் சாஸ்திரங்களிற் சொல்லியிருப்பதையும், உலகத்திற்சாதாரணமாகநடந்துவருவதையும் பிரத்தியட்சமாகக் கண்டிருந்தும்:—சிந்தனையில்மயக்கமென்ன சுருதியுத்தியனுபவத்தாற்றெளிந்திடாயே, எ-து. மனதிலின்னுமையமென்னையுளது. உளதேல், அதனையுமிவ்வண்ணஞ் சுருதி, யுத்தி, அனுபவத்தால்விசாரித்துத்தெளிதி, எ-று.

சாத்திரம், சுருதிப்பிரமாணம். உலகத்துநடப்பது, பிரத்தியட்சப்பிரமாணம். சிஞ்ஞாசென்பவனிருவகைநிலையாவது; இல்லறம், துறவறமென்பன. அவை; முதலடியால்துறவறமும், இரண்டாமடியாலில்லறமுங்காணப்படும்.

(க-து.) சிஞ்ஞாசுவினிலையில்லறந்துறவறமாமென்பது. இதனால், இல்லறத்திலேனுந் துறவறத்திலேனும் ஞானமடையலாமென்றாயிற்று. இவவிரண்டறத்தும்பலரென்னாதுசிலரென்றது,விராகத்தைக்காட்டற்கென்க.(௧௯௩)

கசுச - கவி. அ * கை.

[முன்னர் வித்தியானந்தத்தைப்பற்றி நூற்றறுபத்துநாலாங் கவிமுதல் நூற்றெழுபத்தேழாங் கவிவரையானுஞ் சொல்லுது மென்றனமே அதனையிக்கவிமுதல்பதினாலுகவிவரையானும் விளக்குவான்வேண்டி, அகம்பிரமமென்பதில்; அகமென்பது, நான். பிரமமென்பது, சிவம். இவ்விருவகையும் ஞானத்தையன்றியின்மையின், நானேசிவமெனலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

பிறந்ததுண் டானு லன்றோ பிறகுசா வதுதா னுண்டாம்
பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா வதுவு நானே
பிறந்தது நானன் றாகிற் பிரமமென் றந்த நானே
பிறந்தது மிறந்த தந்தப் பிரமமா நானே நானே.

(இ-ள்.) பிறந்ததுண்டானுலன்றோ பிறகுசாவதுதானுண்டாம், எ - து. நானென்னும்பொருள் யாதோ அதுபிறந்ததுண்டாயிருக்குமானுலல்லவாபிறகுசாவதென்பதுமுண்டாயிருக்கலாம். நானெனலைப்பற்றியிதுகாறுங்கூறிவந்ததிலில்லாமையின்:—பிறந்ததேயில்லையென்னும் பிரமமாவதுவுநானே, எ - து. என்னைப்போலப்பிறந்ததேயில்லையென்னத்தக்க பிரமமென்பதும் நானேயாம்:—பிறந்ததுநானன்றாகிற் பிரமமென்றந்தநானே, எ - து. பிறந்ததென்பதுநானல்லனுயின், நானேபிறமமென்றதுமந்தநான்தான்:— பிறந்ததுமிறந்ததந்தப்பிரமமாநானேநானே, எ - து. ஆயின், பிறந்ததுபோலு மிறந்ததுபோலுங் காணப்படுவெதுமந்தப்பிரமமாகிய நானே நானலதுவேறுளதோ, இல்லையே, எ-று.

நானேயென்பதிலேகாரமீற்றசை. நானென்னும்பொருள்பிறந்தாலன்றோசாகலாம், இல்லையே. இதுபோலப் பிரமமென்னும்பொருளும் பிறந்தாலன்றோ சாகலாம், இல்லையே. பொருளொன்று சொல்லிரண்டு. அப்போதொருபொருள்குறித்தபலசொல். ஆகவே, எவவாறிரண்டென்னலாம்? அந்தவொருபொருளாவது ஞானம். ஆயின், சிற்றறிவு பேரறிவென்னற்கியைவானேன் ? உபாதிகுணங்களையேயறிவாகக்கோடலினுலும், அவவுபாதிகுணங்கள் சமஷ்டிவியஷ்டியாகக்காண்டலானும், இவற்றைப்பற்றியவிசாரஞ்சற்றுமில்லாததினுலும், பிறர்சொல்லினுங் கல்விச்செருக்காலெனக்குத் தெரியாதாவென்னு மகங்குன்றாமையானும், இஃதென்றுமாதலினுனுமென்க. சமஷ்டிவியஷ்டியாகக் காணப்பட்டுள்ள வுபாதிகுணங்கள் ஞானத்தின்பிரதிபலனபோயன்றிஞானமல்ல. ஆதலின், ஞானத்தைத்தவிரவுயிர்பரமிரண்டில்லை. இதற்குதாரணம். "விண்ணுருவமீசனென்பார் வேற்றுருவஞ்சீவனென்பார் கண்ணுமிரவியும்போற்காணென்பார், திண்ணமதாய், அத்துவிதமாகாதவையிரண்டுமாகாத, சித்துருவந்தானேசிவ" மென்பதினுற்காண்க. சித்தெனலும், ஞானமெனலுமொருபொருட்கிளவி. நானெனக்கொள்ளாத பரமுமுயிருமில்லை, அங்ஙனங்கொள்வதுபாதிகுணமன்று, இவ்விரண்டுமோர்முத

லன்று, அந்தமுதல்; அறிவையன்றியில்லை. ஆதலி, ஞானேபிரமமெனப்படும். இவ்விருவகைநானெனல்; அறிவாதலால், நானேபிரமம், பிரமமேநானெனற் கிழுக்கென்னை? இன்னும் பிறப்பிறப்பு, உபாதிகட்கன்றி யறிவுக்கெனச்சுரு தியுத்தியனுபவம் யாதானுமுளதோ? இல்லையேயிதனுனுமுணர்க. "உடலு தித்தல்யோனியுயிருதித்தலெங்கே, உடலுயிர்சித்துசடமொன்றே." அன்றே யென்பதினுனுங்காண்க. இவற்றையுமுணராதுமறுத்தலென்னுணர்வு. அந்த ர்முகநோக்கிற்குடன்படாதார்க் கென்சொல்லினுமென்பயன். பிரமமாவது நானேயென்றது, பிரமமாவதுவுமெனவும்மைகொடுத்ததினுலன்றே, நா னென்னும்பொருள் பிறந்தாலன்றே விறக்கலாம், என வுரைகொண்டாம். இங்ஙனமாதலைப்பற்றிப் பிறந்ததே யில்லையென்னும் பிரமமாவதுவு நானே யெனவும், அதுபோலப் பிறந்ததும்நானென்னும்பொருளன்றுமையின் நா னேபிரமமெனக்கொண்டது மந்தநானேயென்பதுதோன்றப், பிறந்ததுநா னன்றாகிற் பிரமமென்றந்தநானேயெனவும், இறந்ததுமென்றவும்மைதொக் கது. பிறந்ததுபோலவுமிறந்ததுபோலவுங் காணப்படுதல்நாளுகையால், பிறந்ததுமிறந்ததந்தப் பிரமமா நானேநானெனவுங் கூறினார். பிரமநானே நானேயென்றது, பிரமமாநானேநானேயென்றது; நானேபிரமம், பிரமமே நானென்னு மைக்கியங்காட்டற்கென்க. அறிவேபரமுமுயிருமெனற்குதார ணம். வேதாந்தசூடாமணி, "இகலிலாவறிவுமாத்திரமாகிநின்ற விலக்கிய மாம்பிரமகூடஸ்தவுயிர்கொள்ளில், புகரிலாவது விதுவேயிதுவதுவேயென் னப் பொருந்துதாதான்மியம்வந்துறுமெனவேயறிக." என்பதினுற்காண்க. உற்றுக்காணுதுழி மதி மேகங்களி னுழைந்துநுழைந்து செல்வதுபோலவும், கண்டுழி யங்ஙனஞ்செல்லாது நிலையுறுவதுபோலவுங் காணப்படுமாறுபோ ன்று, தெளியாதுழி, ஆன்மாவாகியநானென லுடல்தோறுநுழைந்துநுழைந் து பிறப்பதுபோலவும், இறப்பதுபோலவும், தெளிந்துழி யங்ஙனஞ்செல்லா து நிலையுறுவதுபோலவுங்காண்படுதென்னை? ஆதலினிங்ஙனங்கூறினரென்க.

(க - து.) இதுவித்தையானந்தமாதலினுனும், இந்தவித்தையைத்தவிர வுயிர்பரமின்றாதலினுனு மேகமென்றாரென்பது. வித்தியானந்தமென்றாயது மரூஉ. அனைத்துநானுவதுமன்றி யெனப்பொருட்டலின் பிரமமாவதுவுமென் றவும்மை யிறந்ததுதழீ இயவெச்சவும்மை. பிரமமாநானேயென்பதுருவகம். பிரமமாகியநானேயன்றி நானென்பதுவேறின்றெனத்தோன்ற, ஈற்றில் நா னேயென்றார். ஆதலினிதுபொருந்தும். (ககூச)

ககூரு - கவி. அ - கை.

[ஞானத்தைத்தவிரப்பிரமமில்லாவாறுபோல ஞானத்தையன்றி யான்மாவின்றென விக்கவியிற்கூறுகின்றார்.]

நானென்ற பிரம மான நானேநா னறிவே யென்று
ஞனென்ப தேது பின்னை நம்முடை புந்தி யென்னிற்
றூனது மபக்கந் தன்னிற் சாகுமே சாவா தாகி
ஞனென் நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே.

(இ - ள்.) நானென்றபிரமமான நானேநானறியேனென்றால், எ - து. நானெனத்தக்கபிரமமாகியயானே யென்னையானறிகிலனென்று வருமாயின்:—நானென்பதே துபின்னை நம்முடைபுந்தியென்னில், எ-து. அப்போது நானென்பதியாது, அதற்குத்தரமாகப்பின்னர் நமதுபுத்தியெனக்கூறின்:—தானதுமயக்கந்தன்னிற் சாருமேசாவாதாகில், எ - து. தானேயந்தப்பிராந்தியாதலால் தன்னிடத்திலேயேநசிக்குமே, நசியாவிடில்:—நானெனநிறைந்திருந்த ஞானமாநானேநானே, எ - து. அப்போதுநானாகவெங்கணுமொருபடித்தா வியாபித்துநின்றஞானமாகியநானெனவேநானாகமுடியும், எ-று.

நானேயென்பதிலேகாரமீற்றசை. நானாகியபிரமம், அந்தப்பிரமமாகியநானென வபேதங்காட்டவந்தவராதலின், நானென்றபிரமமானநானேயெனவும், அங்ஙனமபேதமானநானே யென்னையானறிகிலனென்பார், நானேநானறியேனெனவும், என்னையானறிகிலனென்பதுமூடம். அதுதன்னைவிடவேறன்றாதலின் தன்னினசிக்குமேயென்பார், மயக்கந்தன்னிற்சாருமேயெனவும், மயக்கம்விகற்பமாதலால் தானாகாது, எங்ஙனந்தன்னில்சாருமென்பார், சாகாதாகிலெனவும், நசியாதிருத்தற்குவேறிடமின்மையி னசிக்குமென்பதுதோன்ற நானெனநிறைந்திருந்தஞானமெனவும், அந்தஞானத்தைத்தவிரநானெனலின்மையின், ஞானமாநானேநானெனவுங்கூறினர்.

(க-து.) ஞானமேபிரமமும்நானுமாதலின், ஏகமாயிற்றென்பது. அறிவையன்றிப்பிரமமெனினும், கூடஸ்தனெனினுஞ் சொன்மாத்திரமும், தோற்றன்மாத்திரமுமாதலாற் கற்பிதமெனக்குறிக்க விங்ஙனங்கூறினரென்க. அறிவையன்றியுயிர்பரமென வில்லையென வெங்கேவிளங்கிற்றோ, அங்கேயதுவேயானந்தமாதலன்றி வேறின்மையின் வித்தையானந்தமெனத்தானேயமையப்பெற்றாம். இஃதனுபவமொழி. நம்முடையவென்பது, கடைக்குறை. நானென்றபிரமம், பிரமமானநான், என்னுமிரண்டும், இருபெயரொட்டுப்பண்புத்தொகையெனில், உருபுவிரிந்திருப்பதாற்கூடாது. உருவகமெனினமையும். உபமானவுபமேயபேதஞ்சற்றுமின்மையின். என்னை, "உவமையும் பொருளும்வேற்றுமையொழிவித் தொன்றெனமாட்டினஃதுருவகமாகும்" என்பதனாற்காண்க.

(கசுரு)

கசுசு - கவி. அ - கை.

[அறிவேயான்மாவாதலி னவ்வான்மாவேபரிபூரணமும், ஆனந்தமுமாமெனவே யிக்கவியிற்கூறுகின்றார்.]

நிறைந்தவா றெந்த வாறு நிலைதெரிந் திலனென் றாயே
லறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லானந்த மதுவே யாகுங்
குறைந்ததுக் கானந் தந்தான் குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே யிந்த வாத்மா நிதானமிவ் வறிவு தானே.

(இ - ள்.) நிறைந்தவாறெந்தவாறு நிலைதெரிந்திலனென்றாயேல், எ-து. யான்பரிபூரணமாயவாறெவ்வாறு, அந்நிலையை யென்பாற்கண்டிலனெனக்

கூறுவையாயின்:—அறிந்ததாஞ்சுழுத்திதன்னிலானந்தமதுவேயாகும், எ-து. அறிந்துகொண்டிருப்பதாகிய நனவிற்சுழுத்தியிலிருப்ப தானந்தமாதலின், அவ்வானந்தமேபரிபூரணமாம்:—குறைந்ததுக்கானந்தந்தா குவலயந்தன்னி லில்லை, எ-து. ஆயி னேகதேசமாகிய சுகத்துக்கமேழு, நீபூமியிலிருந்து மஃது னக்கில்லை:—நிறைந்ததேயிந்தவான்மா நிதானமிவ்வறிவுதானே, எ-து. ஆத லிவ்வான்மாவேபரிபூரணம், அப்பரிபூரணமே, இந்தவறிவு, எ-று.

நிதானம், சாய்வின்மை. எனவே, குறைவின்மையாயிற்று. ஆகவே, பரிபூரணமெனக்கொண்டாம். சுழுத்தியென்னு தறிந்ததாஞ்சுழுத்தியென்ற மையின், அறிந்துகொண்டிருப்பதாகியசுழுத்தியென்றாயிற்று. ஆகவே, மூட சுழுத்தியன்றென விலக்கி நனவிற்சுழுத்தியெனப்பெறற்றாம். அந்தநனவிற் சுழுத்தி பரிபூரணானந்தமாதலின், ஆனந்தமதுவேயாகுமெனவும், இந்நிலை யையுடையையாதலி னிவவுலகிலிருந்துமுனக்கின்பதுன்பமில்லை மற்றவர்க ளுக்கென்பார், குறைந்ததுக்கானந்தந்தான் குவலயந்தன்னி லில்லையென வும், விசாரித்துத்தெளியினுந்தெளியாவிடினு மான்மாவியல்பாகவே பரிபூர ணானந்தமேயென்பார், நிறைந்ததேயிந்தவான்மாவெனவும், அங்ஙனமாய வான்மாவும், குறைவின்றிநிறைந்துள்ள விந்தச் சைதன்யமேயென்பார், நிதானமிவவறிவுதானே யெனவுங்கூறியவாறுகாண்க. சிலபிறிதிகள், குறை ந்ததற்கானந்தந்தானென்றிருக்கின்றன.

(க-து.) ஆன்மாவித்தையானந்தமேயென்றாரென்பது. வித்தையானந் தத்தினிலைமையினையதேயென்க. முன்கவியில்பிரமமாநானென்றது; பிரம மேகூடஸ்தனெனவும், பின்கவியில்நானென்றபிரமமென்றது; கூடஸ்தனே பிரமமெனவும் பொருள்படற்கென்க. நானெனல், அறிவு. பிரமமெனல், சுகம். எனவே, சுகமேயறிவு. அறிவேசுகம். என்றாயிற்று. ஆகவே, சுகம் வேண்டியலைவ துயிர்களறிவாதலால், அலைவையொழித்தற் கிங்ஙனங்கூறிய தெனப்பெறற்றாம். ஆதிகாரணமெனப்பொருளிருப்பினு மிங்கேநிதானமென் பது, குறைவின்மை. அறிந்ததாஞ்சுழுத்தியென்றதனால், அறியாத சுழுத்தி குறிக்கின்றது. இதிலுமுள்ளசுகப்பெருக்கு, ஆன்மாவேயெனக்காட்ட நன விற்சுழுத்திகூறினாரென்க. இனசுழுத்தி யான்மாவையன்றியுளதேனனவிற் சுழுத்தியு மிருக்கலாம். (௧௬௬)

௧௬௭ - கவி. அ - கை.

[தனியேயென்னையான்விசாரிக்குமிடத்தில் வித்தையானந்தமாகக் கண்டனனென மாணாக்கன்கூறியதாக விக்கவியிற் கூறுகின்றார்.]

மனத்தினு லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகு
நினைத்திடி லனேக லோக நிற்பதிவ் வறிவி லன்றோ
வனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவி தாமென்
றெனைத்தனி விசாரித் திட்டா லேகமாய் நிறைந்தோ றனே.

(இ-ள்.) மனத்திருலெண்ணித்தனே வந்ததிவ்வுலகமாகும், எ - து. இவ்வுலகமானதுமனோசங்கற்பத்திருலேதானே வந்ததாகக்காண்கின்றது:—(எங்ஙனமெனில்) நினைத்திடிலனேகலோக நிற்பதிவவறிவிலன்றோ, எ-து. எண்ணளவைகளாலும், ஊகத்தாலும், அனுபவத்தாலு மொருங்கேநின்று சிந்திக்குமிடத்தில், இவ்வுலகமாத்திரமன்று, இன்னுமிவைபோல்வனவாகக் கூறப்படு மனேகலோகங்களும் பதவிகளுமிருப்பது நாமாகிய விவ்வறிவிலல்லவா :—அனைத்துங்கடந்தப்பாலு மந்தமற்றறிவிதாமென் றெனைத்தனி விசாரித்திட்டா லேகமாநிறைந்தோனே, எ-து. இஃதன்றியும், இவ்வறிவிலுள்ளமுன்கூறியவனைத்தையு மோவவொன்றாகநியதிகளைந் தவற்றினின்று நீங்கி யவற்றிற்கப்பாலும்யாதுளதென் றென்னைத்தனியாகவிசாரிக்குமிடத்தில், முடிவின்றி விளங்காநின்றவிவ்வறிவாகவே யெங்குங்காண்கின்றது, ஆதலின் பரிபூரணமாக வெங்கனுநிறைந்து விளங்குவோன்வேறல்லன்யானே, எ-று.

மண்ணாதிகட்குச்சுயம்புவடிவம் யாதெனத்தனித்தனிப்பேதவாதமாறு னும், அபேதவாதமைந்தானு மையந்திரிபறச்சோதிக்குங்கால் யாது மங்ஙனங்காணாது தோற்றன்மாத்திரமாகக்காண்பதென்னை? காண்பதாலதனைச்சுயம்பாகப்பார்ப்பதென்னை? இவ்விருவகையாயநிலையும்விளைவது மனத்தாலோ, வேறாலோ? மனத்தாலெனின், அப்போது மனதையன்றி யுலகம் மெய்போலத்தோற்றுவதும், பொய்போலத்தோற்றுவதும்வேறன்றே. வேறாமெனின், யாதோவிவவிருவகையாகக்காண்பது? உலகமெனின், விசாரணைமுடிவி னுலகமென்னுநாமரூபமெங்கே? யாதுபொய்யாகக்காணப்படுகின்றது. நினைவு தானெனில், உலகம்போல் மெய்யாகக்காணப்படுவதும், பொய்யாகக்காணப்படுவதும், அதனையவ்வாறுணர்வதும்வேறன்றே. நினைவாகியமனோசங்கற்பமாதலின், மனத்திருலெண்ணித்தானே வந்ததிவ்வுலகமாகுமெனவும், அங்ஙனநியதிகளைந்தவிடத்தில்லாமற்போன விவ்வுலகமாதியனேகலோகங்களு மெங்கேயெனச் சுவானுபவத்தாலாராயும்பொது, அனைத்துஞ்சங்கற்பவடிவமாக யானாகியவறிவிற்கண்டனனென்றானென்பார், நினைத்திடிலுலகமெல்லா நிற்பதிவ்வறிவிலன்றோவெனவும், அங்ஙனஞ் சங்கற்பவடிவமாக அவையெங்ஙனமிருக்கின்றனவெனத் தனிதீதனியொவ்வொன்றாக ஆராயுமிடத்தும், அப்பாற்கடந் தாராயுமிடத்து மிவ்வறிவாகவே யனைத்துமுடிகின்றனவாதலின், அனைத்தையுங்கடந்தப்பாலு மந்தமற்றறிவிதாமெனவும், சமஸ்தமுமறிவாகமுடியும்போது யானாரெனத்தனித்துநின் றென்னை விசாரிப்புழி யகண்டபரிபூரணமாகிய விவ்வறிவைத்தவிரவில்லையாகமுடிதலின், எனைத்தனிவிசாரித்திட்டா லேகமாய்நிறைந்தோனே யெனவுங் கூறக்கிடந்ததென்க.

(க-து.) அறிவேயானெனத்தெரிவிக்க விங்ஙனங்கூறியதென்பது. இது வும்விந்தையானந்தமென்க. (கசுஎ)

கசஅ - கவி. அ - கை.

[என்னைத்தவிரக்கற்பிதங்களில்லாவிடத் தெங்ஙனம்பரிபூரண மாக விளங்குவதென்னின், மூன்றவஸ்தாவயத்தாகா தறிவாகவி ளங்கி னங்ஙனமாவையென விக்கவியிற்கூறுகின்றார்.]

அந்தவா றிருந்து கொண்டே யானந்த மனுப விக்க
வெந்தவா றிருந்து கொண்டா லெனக்கிது தெரியு மென்னி
லிந்தமூன் றவத்தை தம்மு ளொழுந்திடும் விருத்தி நீக்கி
லந்தவா றிருந்து நீயு மானந்த மடைய லாமே.

(இ-ள்.) அந்தவாறிருந்துகொண்டே யானந்தமனுபவிக்க, எ - து. என் னைத்தவிரச் சங்கற்பங்களில்லாவிடத்து, அங்ஙனஞ்சங்கற்பமயமாகநின்று கொண்டு யானெங்ஙன மான்மானந்தத்தைப் பரிபூரணமாகவனுபவிப்பது, கூடாமையால்:—எந்தவாறிருந்துகொண்டா லெனக்கிதுதெரியுமென்னில், எ-து. யானெவ்வண்ணமாய நிலையினின்றுகொண்டா லெனக்கிந்தப்பரிபூர ணமாயநிலை விளங்குமெனக்கேட்பையாயின்:—இந்தமூன்றவத்தை தம்முளெ ழுந்திடும்விருத்திநீக்கில், எ-து. இந்தமூன்றவத்தையிலுமுதிக்கு மனோவிருத் தியைத் தனதுசொரூபமாகக்கண்டுநீக்கினு லப்போதஃதுனக்கு விளங்கும்:— (ஆதலின்.) அந்தவாறிருந்துநீயு மானந்தமடையலாமே, எ-து. நீயுமவவண்ண மாகவிருந்து, அந்தப்பரிபூரணானந்தத்தை யனுபவிக்கலாமே யிதிலையமெ ன்னை, எ-று.

அவஸ்தாத்ரயமும், விர்த்தித்ரயமும், தனது ஞப்திஸ்புரிப்பைய ன்றி யில்லையெனக்காணத் தாமேதனது ஞப்தியாகக்கரையும், கரைந்தவா றிருக்கவேண்டும், இருக்கின், பரிபூரணானந்தோதயமாம். அவ்வுதயமே நீயாத லினும், உன்னையன்றியில்லாததினுலு மதுநீயாவையென்பார், இந்தமூன் றவத்தைதம்மு ளெழுந்திடும்விருத்திநீக்கி லந்தவாறிருந்துநீயு மானந்தமடை யலாமே யென்றார். அவ்வாறிருந்தோரொல்லா மானந்த மடைந்தாற்போல, நீயுமானந்தமடையலாமென்றாகலின், நீயுமென்பதிலும்மை, இறந்ததுதழீஇய வெச்சவும்மை. விருத்திநீக்கம், சிற்பிரகாசமாகக்கரைதல். எனவே, வித்தை யானந்தமெனக்குறிக்கப்பெற்றாம்.

(க - து.) சிற்பிரகாசமாகக்காணி லங்ஙனே விருத்தியதுவாகக்கரைய நீயுதுவாவையென்பது. வேறுபாயமெங்கனுமின்றெனக விருத்திகளுன்னை யன்றியில்லையாயினு முனதுசிற்பிரகாசமாகக்காணி னீயேபரிபூரணானந்தமா வையென்க. (கசஅ)

கசகூ - கவி. அ - கை.

[வாசனைவிருத்திகளைக் கனைவதெவ்வாறென்றவினுவுக்கு விடை யிக்கவியிற்கூறுகின்றார்.]

வாதனை வயத்தி னாலே வருகிற விருத்தி யெல்லா
மேதினா லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யின்
போதமா மிராசன் றனுப் புந்தியைப் புலன்க ளெல்லாந்
தாதரா யிருக்கப் பெற்றாற் சகலமு மடங்குந் தானே.

(இ-ள்.) வாதனுவயத்தினலே வருகிறவிருத்தியெல்லா மேதினலடக்கலாகு மென்றுதான்விசாரஞ்செய்யில், எ-து. பூர்வவாசனைகாரணமாகவருகிற மனோவிருத்தியனைத்தையும் யாதுகாரணமாக அடக்கக்கூடுமென்• றென்னைவிசாரிப்பையாயின்:—போதமாமிராசன்றனய்ப் புந்தியைப்புலன்களெல்லாந்தாதராயிருக்கப்பெற்றுற் சகலமுமடங்குந்தானே, எ-து. அறிவையரசனுக்கி யவவரசனே தானுகிப் புத்திமுதலிய வகக்கரண புறக்கரணங்களனைத்தையு மடிமைகளாக்கின்,இவ்விருகரணங்களுந் தலையெடுக்காதடங்கும்,எ-று.

முன்னனுபவித்த பிரியங்காரணமாகவெழுமனோவிருத்தியை, வாதனுவயத்தினலேவருகிற விருத்தியெனவும், தானுகிற ஞானப்பிரகாசத்தைத்தலையாகக்கொள்ள, ஏனையவிருவகைகரணங்களுமென்செய்யும்? அடங்குமாதலின், போதமா மிராசன்றனய்ப் புந்தியைப் புலன்களெல்லாந் தாதராயிருக்கப்பெற்றுற் சகலமு மடங்குந்தானே யெனவுங் கூறியவாறுகாண்க. அரசனுக்கினைசெல்லுவதிலும், அரசனேசெல்லிற்குடிகளடங்கும், இதுபற்றியிங்ஙனங்கூறியதென்க.

(க - து.) வாசனுவிருத்திகளையடக்கு முபாயமினையதென்பது. போதமாமிராசனுக்கியெனப்பிறிதிகளுமுண்டு. (கசுக)

களO - கவி. அ - கை.

[விருத்திகளையடக்க மிங்ஙனம்வலியின்றியவிடத்தில் மற்றிரண்டுபாயத்தாலேனு மவற்றையடக்குகியென விக்கவியிற்கூறுகின்றார்.]

விருத்திக ளடக்க வின்னம் விநோதமாம் யோகத் தாலே
துருத்திபோ லூது மூச்சைச் சுகமுட னடக்கி னிற்கும்
கருத்ததற் கில்லை யென்னிற் காரண சரீர மாகும்
பெருத்ததோ ரவித்தை தன்னைப் பிடுங்கிடி லடங்குந் தானே.

. (இ-ள்.) விருத்திகளடக்கவின்னம் விநோதமாம்யோகத்தாலே துருத்திபோலூதுமூச்சை சுகமுடனடக்கினிற்கும், எ - து. விருத்திகளையடக்குவதற்கின்னுமுபாயங்களுள. அவற்றுளொன்று, உலகத்திற்குவிநோதமாகக் காணப்பட்ட கிரியாயோகங்காரணமாக வுலைக்களத்தின்கண் துருத்திபோலூதத்தக்க வுசுவாசநிசுவாசமென்னுமூச்சைத் தக்கமுறைப்படிபிரியங்கொண்டடக்கில் விருத்திகள்தாமேநின்றுவிடும்:—கருத்ததற்கில்லையென்னிற் காரணசரீரமாகும் பெருத்ததோரவித்தைதன்னைப் பிடுங்கிடிலடங்குந்தானே, எ - து. அதுசெய்தற்குச்சற்றுங்கருத்தில்லையாயின் மற்றென்றுகேளுதி, காரணசரீரமாகிறமிகவும்பாரித்துள்ள வொப்பற்றவவித்தையைமாத்திரம் வேரறப்பிடுங்கிவிடி லந்தவிருத்திகள் தாமேயடங்கிவிடும், எ-று.

உபாயங்களுள், அவற்றுளொன்றென்பது; இசையெச்சம். பார்ப்பவர்க்குத்தறிபோற்காண்டலின், விளைதமாம்யோகத்தாலெனவும், மூச்சையடக்கத்தக்கவாறடக்க வுடலந் தறிபோலாம். ஆகவே, கன்மேந்திரியங்கணிற்கும். அதுநிற்க, ஞானேந்திரியங்க ணிற்கும். அதுநிற்க, மனமாதிய வகக்கரணங்களொன்றன்பின் னொன்றாகநிற்கும். அதுநிற்க, இச்சாஞானக்கிரியைகளாகிற விருத்திகள்தாமேநின்றுவிடும். இதுபற்றித்துருத்திபோலூதுமூச்சைச் சுகமுட னடக்கினிற்குமெனவும், வித்தை, அறிவு. அவித்தை, அறியாமை. இதனைப்பிடுங்கிடல், பொருளல்லவற்றைப்பொருளாகக்கோடல்தவிர்தலே. இங்ஙனஞ்செய்யில் விருத்திகள்தாமேநசிக்குமாதலின், காரணசரீரமாகும்பெருத்ததோரவித்தை தன்னைப் பிடுங்கிடிலடங்குந்தானே யெனவும் கூறியவாறு காண்க. வித்தையென்றது பெருத்ததோரவித்தை யென்றடைகொடுத்தது, பிறவிதரற்கு மிக்கவலியுள்ளதெனக் காட்டற்கு. எனவே, தொன்றுதொட்டதாகியாகவந்ததன்றி யிடையில்வந்ததன்றாயிற்று. இடையில்வந்ததாயின், பிடுங்கிடிலென்றது பிசைந்திடிலடங்குந்தானேயென்னல்வேண்டும். அங்ஙனங்கூறாமையால் தொன்றுதொட்டுவந்ததென்பதேபொருந்தும். வேரோடெனப்பொருள்படநிற்றலின், இங்ஙனங் கூறியதென்க. பிடுங்கிடல், மேலாயஞானானுஷ்டானத்தாலன்றி யேனையவனுஷ்டானத்தா லன்றாதலின், இங்கே யிம்மொழிதந்ததென்க.

(க - து.) விருத்திகளையடக்கற்குபாயமிதனையதென்பது. அவித்தைகளைவதினு முபாயம்வேறுண்டெனலெல்லா மறிவீனவசனமென்றுணர்க. கருத்ததற்கில்லையாகுமெனச் சிலபிறிதிகளிருக்கின்றன. (கஎ0)

கஎக - கவி. அ - கை.

[காரணசரீரத்தைக்களையுமாறிங்ஙனமென விக்கவியிற் கூறுகின்றார்.]

காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றோதி
லாரணம் பொய்சொல் லாதே யதன்பொரு ளகத்திலுன்னிற்
பூரண மாகு மென்மேற் புவனங்க டோற்று மென்னுந்
தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே.

(இ - ள்.) காரணசரீரந்தன்னைக்களைவதெவ்வாறென்றோதில், எ - து. தன்னைமறந்தமறதியாகியவறியாமையை வேரோடுகளையுமாறெங்ஙனமெனக் கேட்பையாயின்:—ஆரணம்பொய்சொல்லாதே யதன்பொருளகத்திலுன்னில், எ - து. வேதம்பொய்சொல்லாதாதலின், அதனதுமகாவாக்கியார்த்தத்தை விடாதகத்திற்கண்டுமெனனிக்கவேண்டும், அங்ஙனம்விடாதுமனனிக்கில்:— பூரணமாகுமென்மேற்புவனங்கடோற்றுமென்னுந் தாரணைவந்ததாகில் தரித்திடுமவித்தையெங்கே, எ - து. பரிபூரணமாகவிளங்குதும், அங்ஙன

ம அங்ஙனம் விளங்கில், புறம்பிலல்லாமல் சகலசராசரங்களும், அண்டாண்ட கோடிகளும், பரிபூரணமானவெனதகவியாபகத்தில், தானேதோற்றுமென்று சொல்லத்தக்கதிடசிந்தைதானேவரும். அங்ஙனம்வருமாகில், அனாதியாகவறியாதுவந்தகத்தில் தரித்திருக்கிறவவித்தையாகிய காரணசரீரமெப்படி தங்கியிருக்கும், எ-று.

எம்மதத்தருந்தங்கள்தங்கள்வேதம்பொய்சொல்லாதென்னுமாறுபோன்றிவருஞ்சொன்னூலிதிலென்சிறப்பெனின், இணைபாலிடமாயுமன்றியு நிற்பதெவ்வறிவோ, அவ்வறிவே மெய்ப்பொருளென எம்மதத்தினுண்டு, இதுவே தக்கவிடையெனற்கிடையூறுளதேற் சோதனையாதிகளிற்செல்லில்தானே விடைதருமென்க. இங்கேமேலென்பது, இடம். தோற்றுமென்று, எனப்பாடமுமுண்டு. பூரணமாகுமென்மேற்புவனங்கடோற்றுமென்னுந்தாரணைவந்ததாகில் தரித்திடுமவித்தையெங்கேயெனக்கூறியதில் யாதுநயமெனின், யாதுஞ்சுயம்பன்றெனத் தெளிந்தவாறுகலங்காதுநிற்கின், அப்பிலுப்பெனவனைத்துங் கரைந்துசின்மாத்திரமாகும், ஆதலே நயமெனவுணர்க.

(க-து.) அவித்தாநாசதந்திரமினையதெனக் கூறியதென்பது. (௧௭௧)

௧௭௨ - கவி. அ - கை.

[சர்வமுந்தானுயுமன்றியுங்காண்கின்றதெந்தவறிவோ, அதுவே யானுவதென விக்கவியிற்கூறுகின்றார்.]

அப்படியிருக்கச் சித்த மலைதலால் விவகா ரத்தி
லெப்படி கூடு மென்னி னென்னைவிட் டொன்று மில்லை
யிப்படி கண்ட வெல்லா மென்மய மென்க ளுப்போற்
கற்பித மென்றுந் தானே காண்கின்ற சித்து நானே.

(இ-ள்.) அப்படியிருக்கச்சித்தமலைதலால்விவகாரத்தி லெப்படிகூடுமென்னின், எ-து. இவ்வாறுயுவனுபவமங்ஙனமிருக்க, விவகாரவேளைகளிலெல்லாமனமலையுமே, அலையும்போது, இவ்வனுபவமெங்ஙனம்வாய்க்குமெனக் கேட்பையாயின்:—என்னைவிட்டொன்றுமில்லை யிப்படிகண்டவெல்லாமென்மயம், எ-து. விவகாரவேளையிலிங்ஙன நானுவிகாரரூபமாகக்காணப்பட்டதேகாதிப்பிரபஞ்சமனைத்தும் யானுகியசிற்பிரகாசத்தையன்றி யாதொன்றுமில்லையெனவும், அவையெனதுசொரூபமாமெனவும்:—என்களுப்போற்கற்பிதமென்றுந் தானேகாண்கின்றசித்துநானே, எ-து. எனதுசொற்பனுக்காட்சியைப்போற் கற்பனுவடிவமெனவுங் 'காண்கின்றதுயாதோவதுவேயறிவு, அவ்வறிவேயானெனப்படுவது, எ-று.

(க-து.) எல்லாமாயுமல்லவாயும் விளங்குவதறிவாதலால் அவ்வறிவேயானெனத்தெளிந்துழிக் கலக்கமென்செய்யுமென்பது. (௧௭௨)

௧0௩ - கவி. அ - கை.

[சிற்பிரகாசமேயானெனவிடாதுகண்டு பலவிருத்திகள்செய்யினு மவை தன்னையணுகாவென விக்கவியிற்கூறுகின்றார்.]

சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தா
லெத்தனை யெண்ணி னாலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை தெளிந்த பின்னர் நிற்கின்ற கனவைப் போல
வத்தனை யும்பொய் தானே யானந்த வடிவா னானே.

(இ-ள்.) சித்துநானிறைந்தோனென்ற திடமறவாதிருந்தா லெத்தனை யெண்ணினாலு மேதுசெய்தாலுமென்ன, எ-து. யானெனப்படுவது சைதன்ய மாதலின் பரிபூரணமாகநிறைந்துள்ளோன்யானே, என்னுஞ்சுவானுபவதிடத் தை மறவாதிருக்கப்பெற்றால், எவ்வெவ்விகற்பமாக வெவ்வெவ்வெண்ணங்களை‌ னினும், பலவேறுவிகற்பமாயுள்ளதொழில்செய்யினும் யாதிடையூறுசம்பவிக் கும்:—நித்திரைதெளிந்தபின்னர் நிற்கின்றகனவைப்போல, எ-து. உறக்கந் தெளிந்தவுடன் கண்டசொற்பனமெங்ஙனங்காணாது நின்றுவிடுமாறுபோ ல:—அத்தனையும்பொய்தானே யானந்தவடிவானானே, எ-து. தன்னையுள்ள வாறு தரிசிக்கவே யவ்வளவெண்ணங்களுங் கிரியைகளும் பொய்யாகவேமுடி யும். முடியவே, சமஸ்தமுமானந்தவடிவாகவிளங்கும், அவ்வாறாயவிளக்கமே யானெனப்படுவதாம், எ-று.

சிற்பிரகாசமன்னியமெனக்காணுமயக்கந்தானே தவிர்ந்துயானேயென் னுந் திடஞானமுண்டாகும். உண்டாகவே, பரிபூரணநிலைதானே தனக்கமை யும். அங்ஙனந்தானுயதைமறவாதிருக்கவேண்டும். மறவாதிருந்தால் யாதுநி னைக்கினும்யாதுபுரியினு மவற்றாற்சுவானுபவத்தடையெய்தற் கிடமெங்ஙன முண்டாமென்பார், சித்துநானிறைந்தோனென்ற திடமறவாதிருந்தா லெத் தனை யெண்ணினாலு மேதுசெய்தாலு மென்னவெனவும், கனவுகாண்புழி யங் கேகாணும் பிரபஞ்சமெய்போலத்தோற்றி விழித்தவுடன் பொய்யாகுமாறு போன்று, நனவிற்காணும்பிரபஞ்சம் மெய்போலத்தோற்றித் தனதெதார்த்த த்தில்விழித்தவுடன் பொய்யாகத்தோற்றலின், நித்திரைதெளிந்தபின்னர் நிற் கின்றகனவைப்போல வத்தனையும் பொய்தானேயெனவும், தினசுழுத்தியிற் செகந்தோற்றாமையால் துக்கநிவர்த்தியும் மக்கனுனந்தப் பெருக்குமுண்டாகு மாறுபோன்று, நனவிற்சுழுத்தியில் தேகாதிபிரபஞ்சந்தோற்றாமையால் துக்க நிவிர்த்தியும், அறிவானந்தப்பெருக்குமுண்டாமாகையால், ஆனந்தவடிவென வும், அந்தமக்கனுனந்தமே தினசுழுத்தியினுகை நிற்குமாறுபோன்று, அவ்வ றிவானந்தமே நனவிற் சுழுத்தியினுகநிற்றலின் ஆனந்தவடிவுநானேயென வுங் கூறியவாறுகாண்க.

(க-து.) சுத்தசைதன்யமேநானுகவிளங்கலைமறவாதுவிவகரிக்கில்விர்த்திக ளிருந்துஞ்சிதானந்தமாதக்கனையுமென்பது. நித்திரையுணர்ந்தபின்னரெனப் பாடமுமுண்டு. (௧0௩)

களச - கவி. அ - கை.

[என்னையானுள்ளவாறுகண்டபடியா லிப்போதுதான்கிருதார்த்
தனானேனென விக்கவியிற்கூறுகின்றார்.]

நானென வுடலைத் தானே நம்பினே னநேக சென்ம
மீனராய்ப் பெரியோராகி யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே.

(இ-ள்.) நானெனவுடலைத்தானே னம்பினே னனேகசென்மம்,எ-து. அ
னேகசென்மமாகத் தேகத்தையே நானெனத்திடமாகநம்பிநாசமானேன்:—
ஈனராய்ப்பெரியோராகி யிருந்தவையெலாம், எ-து. இஃதன்றியும், பலசென்
மங்களிலுமறிவீனராயும், அறிவிற்சிறந்தவராயுமென்னையான்கொண்டிருந்த
மயக்கங்களையெல்லாம்:—இப்போது கானலில்வெள்ளம்போலக்கண்டு,எ-து.
கானலிற்றோற்றும்பிரவாகத்தைப்போ லிப்போதையந்திரிபறக்கண்டு:—சற்
குருவினாலேநானெனவென்னைத்தானேநம்பியீடேறினேனே, எ-து. சற்குரு
நாதனருளால் யாதுண்மைவடிவமெனத்தெளிந்ததோவதுவேநானெனக்கோ
டலிலையமின்றதலி லங்ஙனமாயவென்னையேயானெனநம்பிப்பிழைத்தனன்,
எ-று.

கானலில்வெள்ளம்; நடுப்பகலில் சூரியகாந்தி யாற்றுவெள்ளம்போற்கா
ண்பது. நானெனவுடலைக்கோடலும் பெருமை சிறுமைக்காளாகலும், கானல்
வெள்ளம்போற்காண்டலி னிவ்வுவமை வேண்டியவாறாயிற்று. ஐம்பெரும்பூ
தாம்சையோகத்தையன்றியுடலெனத் தோற்றற்கிடமின்று. இங்ஙனமாய
தை யானெனக்கோடலாதியிவ்வுவமையை யேற்றற்கிடையூறென்னை? கான
லையன்றிமெய்யாவெள்ளமுண்டாயின், தனதுவிகற்பத்தையன்றி மெய்யாத்
தேகாதியுண்டாயிருக்கட்டும். அதுவில்லையெனின், இதுவுமங்ஙனமாகாதோ?
முன்னருடலை நானெனநம்பிநம்பி மோசம்போனேனென்றதனால் இப்போது
ணர்வை நானெனக்கண்டுகண்டு கிருதார்த்தனானேனென்பது நயமாகக்கா
ணப்பட்டது. இவ்விருவகையியலு மூடந்தெளிவைக்காட்டுகின்றது. எனவே
மூடத்தில்தெளிவும், தெளிவில்மூடமு மொன்றிலொன்றில்லாவாறுபோலத்
தானில்லையோ, இருப்பதுபற்றி யப்போதப்போதந்தந்தவாகார மானதேமெ
ன்றாயிற்று. எங்ஙனமெனில், அப்போதுமூடமாயிருந்ததுநாமே, இப்போது
தெளிவானதும்நாமே, ஆதலினையமின்றென்க.

(க-து.) இப்போதுவித்தையானந்தமேயானவிடத்துக் கிருதார்த்தனா
னேனென்பது. (களச)

கஎ௫ - கவி. அ - கை.

[இவ்வநுபவங் குருவைவியந்துபுகழ்தலுக்கிடமாயதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணே
னன்னிலந் தனிலெ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னானே னுத் தரீயத்தை வீசு கின்றேன்
றன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன்.

(இ-ள்.) என்னபுண்ணியமோசெய்தேனேதுபாக்கியமோகாணேன்,எ-து. பூர்வத்திலென்னபுண்ணியஞ்செய்தேனோ, அதனாலிப்போதுகிடைத்தபாக்கிய மெத்திறத்தாயதோ, யானிதனையுணரவழியிலனாயினன்:— நன்னிலந்தனி லெழுந்தநாரணன் கிருபையாலே, எ-து. நன்னிலமென்னும்பதியிலடியேனு க்காகக்குருவாகவவதரித்த நாராயணனென்னும்பெயரையுடைய வெனதாசி ரியனதருளினாலே:—தன்னியனானேனுத்தரீயத்தை வீசுகின்றேன், எ-து. கிருதார்த்தனானேன், அதனா லடியேனங்கவஸ்திரத்தை வெற்றிக்கொடியாக வீசுகின்றனன்:—தன்னியனின்னுநானே தாண்டவமாடுகின்றேன்,எ-து. அங் ஙனங்கிருதார்த்தனாகிய நான், இன்னும், ஆனந்தக்கூத்தாடுகின்றேன்,எ-று.

செயமடைந்தோன் றனதுவெற்றிக்கொடியை வீசுமாறுபோன்று, இவ னுந் தத்துவக்குழாப்பகையைக்கோறலால்,தன்னியனானேனுத்தரீயத்தை வீசுகின்றேனெனவும், அதனா லானந்தமீக்குறலாற் பரவசமாக, அப்பரவசத் தால் தானேகூத்தாடவரும்,அதனைத்தாண்டவமாடுகின்றேனெனவுங் கூறிய வாறுகாண்க.

(க-து.) அனுபவமேலீட்டாற் பரவசப்பட்டானந்தக்கூத்தாடினனென் பது. இது வியந்துபுகழ்தல். (கஎ௫)

கஎ௬ - கவி. அ - கை.

[யானிங்ஙனமாவனெனத்தான் தாய்தந்தையர் தாண்டவா வெனப்பெயரிட்டார்போலுமென வவரைவியந்ததை யிக்கவியிற்கூறுகின்றார்.]

தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தா
னித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த
சத்திய மதனா லன்றோ தாண்டவ வென்ற ழைத்தா
றத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே.

(இ-ள்.) தத்துவஞானம்வந்த சந்தோடவதிசயத்தால், எ-து. இவனு க்குண்மைஞானமுதயமாகும், அங்ஙனமுதயமான சந்தோஷத்தினாலும், அதுகாரணமாகவெழுமதிசயத்தினாலும்: — நித்தமாடுவன்காணென்ற நிலை

முன்னமேயறிந்த, எ-து. சதாகாலமு மானந்தநடனஞ் செய்துகொண்டிருப்ப னென்னு நிலைமையை முன்னமே தெரிந்துகொண்டார்கள்போலும். அங்ஙனந்தெரிந்துகொண்ட:— சத்தியமதனுலன்றோ தாண்டவாவென்றழைத்தார், எ-து. உண்மையினாலன்றோ, என்னைத் தாண்டவாவெனப் பெயரிட்டழைத்தனர்:—அத்தனைமகிமையுள்ளோ ரன்னையும்பிதாவுந்தாமே, எ-து. அங்ஙனமழைத்தற் கவ்வளவு மகிமைவாய்த்தவர்கள் தாய்தந்தையர்களே, எ-று.

(க-து.) தன்னைத்தாண்டவாவென்றழைத்த தாய்தந்தையரை மாணுக்கன் வியப்புற்றானென்பது. தனதனுபவத்துக்கும், தாய்தந்தையரிட்டபெயர்க்குஞ் சம்பந்தங்காணவந்ததென்க. இஃதுவியப்புவமையணி. (கஎசு)

## கஎஎ - கவி. அ - கை.

[இங்ஙனமாயசுவானுபவத்தையருளிய சற்குருவைவியந்து வணங்கியதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

வந்ததோ ரிவ்வா னந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேக்கி
யந்தமில் லாத தாயிற் றப்படி குருவே தாந்த
மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே.

(இ - ள்.) வந்ததோரிவ்வானந்த மகிழ்ச்சியாருடன்சொல்வேன்யான், எ-து. இங்ஙனமடியேனுக்குதயமான வொப்பற்றநிரதிசயானந்தமகிழ்ச்சியைக் குருவைத்தவிரயாவருளரோ வவர்பாற்சொல்லிக்கொள்வன்:—சிந்தையிலெழுந்துபொங்கிச் செகமெலா நிறைந்துதேக்கி யந்தமில்லாததாயிற்று, எ - து. அந்தமகிழ்ச்சி யெனதுசிந்தையிலெழுந்துபொங்கிச் செகமுழுவதுநிறைந்துதேக்கிட்டு, முடிவின்றிவிளங்குகின்றது:—அப்படிக்குருவேதாந்த மந்திரமருளு மீசன் மலரடிவணங்கினேனே, எ-து. அங்ஙனமாகக் குருநாதனாக வெழுந்தருளிவந்து வேதாந்தரகசியத்தையனுக்கிரகித்த வேகநாயகனாகிய வீசனதுதாமரைமலர்போன்றதிருவடிகளை வணங்கவேண்டியவாறுவணங்கினன், எ-று.

சொல்லிக்கொள்வதற்கு வேறில்லாமையாற் குருவைவருவித்தாம். வேதாந்தமந்திரம், வேதமுடிவான மகாவாக்கியார்த்தம் பிரதிவாதிக்குமைக்கியமுத்தியை. எனவே, பதவிமுத்தியன்றென்றாயிற்று. ஆகவே, பதவிமுத்தியைப் பிரதிவாதிப்பது, கன்மகாண்டமாகியவதிபசுருதியெனக்கண்டாம். இங்கேயடியென்பது, கூடஸ்தபிரம்மாகியவுபயபாதங்களை. வணங்கவேண்டியவாறுவணங்கல், அதனையேயாகவேண்டியவாறாக்கல்.

(க-து.) நவநவமாகச் சுபானுபவ மெய்தியகாரணத்தாற் குருவைவணங்காமல்வணங்கினனென்பது. ஈசனேகுருவேனல்மரபு. (கஎஎ)

கஎஅ - கவி. அ - கை.

[இந்நூல்விளைவிக்கும்பய னிஃதெனவிக்கவியிற்கூறுகின்றார்.]

வித்தியா னந்த மிந்த விதமென விளம்பி னோமே
பத்தியா யிந்த நூலைப் பார்த்தனு பவித்த பேர்க
ணித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந் திருந்து முனிவர ராகுவாரே.

(இ-ள்.) வித்தியானந்தமிந்த விதமெனவிளம்பினோமே, எ-து. வித்தியானந்தமென்பது, இன்னவகையதெனச்சொல்லினம்:—பத்தியாயிந்தநூலைப்பார்த்தனுபவித்தபேர்கள், எ-து. இந்நூலைமிக்கவன்போடு சிரவணமனனாதிகளைக்கொண்டையந்திரிபறப்பார்க்கவேண்டியவாறு பார்த்துநிட்டை கூடியனுபவித்தபேர்கள்:—நித்தியதருமநிட்டைநிலைதனையறிந்துசீவன்முத்தியையடைந்திருந்து முனிவரராகுவாரே, எ-து. நித்தமும்விடாதுசெய்யுந்தர்மமாகிய ஞானநிட்டையினிலை யினையதெனச் சுவானுபவத்தாலறிந்து,இருவகைமுத்தியுள் சீவன்முத்தியையடைந்து, அந்நிலையில்மாறுதிருந்து சிறந்தரிஷிகளாவார்கள், எ-று.

நித்தியதருமத்துள் மேலாயது ஞானநிட்டையாதலின், நித்தியதரும நிட்டையென்றார்.

(க-து.) இந்நூலையுணரவேண்டியவாறுணர்ந்தோர் செய்தும்பயனினைய தென்பது. தருமமெனினும், அறமெனினுமொக்கும், இஃதொருபொருட்கிளவி. அறமென்பது, தன்னிலையிற்றூனகலாதுநிற்றல். அதாவது; விவர்த்தம், பரிணாமம், ஆரம்பம், உற்பத்தி, விருத்தி தானெனக்காண்டல். விவர்த்தம்; ககனாரவிந்தம், வந்தியாபுத்திரன், சசவிஷாணம்போல்வது.பரிணாமம்; பால்தயிர் போல்வது. ஆரம்பம்; பிதாமகன்போல்வது. உற்பத்தி; மட்கடம்போல்வது. விருத்தி; சித்திரப்படம்போல்வது. இதனை ஞானகாண்டத்திற்காண்க.

(க-து.) இந்நூற்பயனினையதென்பது. (கஎஅ)

கஎகூ - கவி. அ - கை.

[எனதாசிரிய ரிந்நூலை யென்கனவிலெழுந்தருளிவந்து சம்பூரண மாக்கினொன்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

ஆரணப் பொருளாம் வித்தை யானந்தம் விளங்க வேதுங்
காரணக் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தி
னாரண குருந மக்குக்கவின்றனர் கனவில் வந்தே.

(இ-ள்.) ஆரணப்பொருளாம்வித்தை யானந்தம்விளங்கவேதுங் காரணக் குறைவிலாமல், எ - து. வேதார்த்தமாகிய வித்தையானந்த மினையதென

விளங்க,யாதோர்காரணமுங்குறைவில்லாமல்:—கைவல்யநவநீதத்தைப்பூரணமாக்கவேண்டி, எ-து. கைவல்யநவநீதமென்னு மிந்நூலை நிறைவேற்றவேண்டி:—பூர்வமாநன்னிலத்திறாரணகுருநமக்கு நவின்றனர்கனவில்வந்தே, எ-து. தொன்றுதொட்டுள்ள நன்னிலமென்னும் பதியிலெழுந்தருளியநாராயணதேசிகரென்போர் கனவிலக்கோலமாகவே வந்து நமக்குத்தெரிவித்தனர், எ-று.

பிரக்ஞானம், வித்தை. பிரமம், ஆனந்தம். எனவே, பிரக்ஞானம்பிரமமென்பது, வித்தையானந்தமாயிற்று. ஆகவே, இருக்குவேதமகாவாக்கியமெனப்பெறும். இனிக்கேட்கவேண்டியசங்கை யாதொன்றுங்குறைவில்லாம லிந்நூலைப்பூரணமாக்கவென்பார், ஏதுங்காரணங்குறைவிலாமற் கைவல்யநவநீதத்தைப் பூரணமாக்கவேண்டியெனவும், தானேசங்கைசமாதானமாதலினிதுஞாயஞ்சோதனைபொருத்தங்கட்கிடையூறின்றி நிறைவேறவுணர்த்தியது கனவிலாதலின், நவின்றனர் கனவில்வந்தே யெனவுங் கூறியவாறுகாண்க.

(க-து,) தனதுகனவிலாசிரிய மூர்த்தமாநின் றிந்நூலைநிறைவேற்றினானென்பது. எனவே, யானேபாடவில்லை யென்பதைக்குறிக்கப்பெறும். பெறவே, ஆணவவிழப்பைக்கண்டாம். யோகில்வந்தேயெனப் பிறிதிகளுமுண்டு. அங்ஙனங்கொள்ளினும்பொருந்தும். யோகில்வந்தென்பது, ஞானயோகத்தில் வந்தெனக்கொள்க. (௧௭௧)

## ௧௮௦ - கவி. அ - கை.

[இந்நூலாசிரியராகிய தாண்டவராயசுவாமிகள் இந்நூலில்
தெரிவித்த வபிப்பிராய மினையதென விக்கவியிற்
கூறுகின்றார்.]

அண்ணறன் னருளி னாலே யகம்புற மின்றி யொன்று
மெண்ணமி லிலக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன
நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் றண்ட வேசன்.

(இ-ள்.) அண்ணறன்னருளினாலே யகம்புறமின்றியொன்றும், எ-து. தனதுகர்த்தனாகியவாசிரியரதனுக்கிரகத்தினாலகமென்பதும்புறமென்பதுமின்றியேகமாநிறைந்துள்ள:—எண்ணமிலிலக்கியார்த்தத் தின்பொருளதுநானென்ன, எ-து. சங்கற்பரகிதமான விலக்கியார்த்தத்தினயம், அதுவென்னும்பிரமமும், நானென்னுங்கூடஸ்தனுமெனவும்:—நண்ணினசரீரமாதிநாதத்தினுபாதியென்றே, எ-து. இப்போதுகிடைத்துள்ளதேகாதிப்பிரபஞ்சமனைத்தும் மாயாகாரியவுபாதியெனவும்:—கண்ணதாயனைத்துங் காணக்காட்டினன்றண்டவேசன், எ-து. இவ்விருவகைத்தாநின்றுள்ளவனைத்தும் ஞானக்கண்ணாகவிள

ங்கும்படி விந்நூலிலேயமறத்தெரிவித்தனன். அவனுரொனில்,தாண்டவேசனெ ன்னும் பெயருடையோன், எ-று.

தன்னாசிரியரதருளா லிலக்கியார்த்தமேகூடஸ்தபிரமமெனவும், தேகாதி ப்பிரகிர்தியிறுவாக்கிடந்த தத்துவக்கூறாங்களனைத்தும் மாயாகாரியமெனவும், இவ்விருவகையாகக்கூறக்கிடந்துள்ள வனைத்தும் ஞானக்கண்ணுக விளங்கும் படி யதற்கியைந்த அர்த்தங்களைத் தானியற்றியவிந்நூலிற் குறைவின்றிக்கா ட்டினன் தாண்டவேசனென்னு மியற்பெயருடையோனெனமுடிக்க. இல க்கியார்த்தத்தின்பொரு ளதுநானென்றதனுல், அதுவென்பது; ஈசனெனவும், நானென்பது; சீவனெனவுங்கூறுதொழிந்தனம். வாச்சியார்த்தமெனி னிங்ங னங்கூறற்கியையும். கூடஸ்தபிரமமகம்புறமற்றதெனற்கும், சங்கற்பநாசரூப மெனற்கும் பொருள்பட; அகம்புறமின்றியொன்றுமெனவும், எண்ணமிலில க்கியார்த்தத் தின்பொருளெனவுங்கூறியவாறுகாண்க. நானென்னவென்ப தும், உபாதியென்றேயென்பது மும்மைத்தொகை. சரீரமாதிநாதத்தினுபாதி யென்னல், மாயாசகிதம். இலக்கியார்த்தத்தின்பொருளதுநானென்னல், மா யாரகிதம். இங்ஙனமாயசகிதமும், ரகிதமுமிறத்தற்குக் கண்ணதாயனைத்துங் காணவென்னல், துவிதநாசமெனக்கொள்க. எனவே, இதனினு முடிவில்லை யென்பதாயிற்று. ஆகவே, இஃதத்துவிதத்தையே பிரதிவாதிக்கு நூலெனப் பெற்றும்.

(க-து.) அகம், நான். பிரமம், அது. அனைத்துங்கண்ணதாக்காணல், அ ஸ்மி. எனவிளக்கிஞெனபது. (௧௮0)

௧அக - கவி. அ - கை.

[சுவானுபூதிவாய்த்த வினையருக்கேயென
விக்கவியிற்கூறுகின்கின்றூர்.]

(வேறு.)

ஆன்ற பதமா மூன்றிற்கு மதுநீ யானு யெனும் பொருளிற்
சான்ற துரியா தீதமெனத் தடையற் றிலகொண் சைதன்னிய
மூன்றி யுணர்ந்தோர் விகற்புமயக் கொழித்தெத் தடையுமூடறுத்துத்
தோன்றித் தானே தானுவர் துலங்குமவர்க்கே சுவானு பவம்.

(இ - ள்.) ஆன்றபதமாமூன்றிற்கு மதுநீயானுயெனும்பொருளில், எ-து. யாவற்றினுமிகச்சிறந்த தத்வம்சியென்னு மூன்றுபதத்திற்குமர்த்தமாவது ; அதுநீயானுயென்னும்பொருளாம். அப்பொருளில்:— சான்றதுரியாதீதமெ னத் தடையற்றிலகொண்சைதன்யம், எ - து. பரிபூரணமாநிறைந்திருக்கி ன்ற துரியாதீதமெனப்பெயர்பெற்றுத் தடையின்றிவிளங்குஞ் சொப்பிர காசவடிவாயுள்ளசைதன்யத்தை:— ஊன்றியுணர்ந்தோர்விகற்பமயக் கொ ழித்தெத்தடையுமூடறுத்து, எ - து. யாதோர்விகற்பசிந்தையுமின்றி யூன்றி

யுணர்ந்தோரோ பலவாருக வேறுபட்டுள்ள பிராந்திகளினின்று நீங்கி, வலியு ள்ளவெவ்வகைத்தடைகளேயுங் கட்டறுத்து:— தோன்றித்தானே தானுவர் துலங்குமவர்க்கேசுவானுபவம், எ-து. மாயாரகிதமாகத் தோன்றித் தானே தானுவார். அங்ஙனந் தானே தானுகவிளங்குபவர்க்கே சுவானுபவமெனப்ப டுவது, எ-று.

தத்துவமசி யென்பதை முப்பதார்த்தமாக்கி யதன்முடிவில் விளங்குந் துரியாதீதசைதன்யத்தை நன்குதெளிந்தோரோ நிகரின்றித்தோன்றித்தானே தானுவர். அன்னேருக்கேயன்றிச் சுவானுபவமேனயருக்கன்றெனமுடிக்க. சான்றென்பது; சால், என்னுமுரியடியாகப்பிறந்த பெயரொச்சம். சாலென் பது; போதுமென்னும் பொருள்படநிற்றலின், பரிபூரணமென்ரும்.

(க-து.) சுவானுபவம்வாய்த்தல், தானேதானுனவருக்கேயென்பது. ()

௧௮௨ - கவி - ௮ - கை.

[நாராயணதேசிகரடிதொழுபவரும், அவர்கூறியதீர்ந்தநிலே யகலாதோரும், எய்தும்பயனிதேனயதெனவிக் கவியிற்கூறுகின்ருர்.]

**என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தியா னந்தஞ்**
**சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துகளற்ருே**
**ரின்ன மாணுக் கன்குருவாற் சந்தே கந்தீர்ந் திடுபதத்தே**
**துன்னி நிறைந்து நின்ருேர்க ளேய முத்த ராகுவரோ.**

(இ-ள்.) என்னுமாவாக்கியநான்கு மிசைக்கும்வித்தியானந்தஞ் சொன் னநாராயணன்பாதந் தொழுது துதிப்போர்துகளற்ருேர், எ-து. இங்ஙனமா ணூர்க்கே சுவானுபவம் விளங்குமென்னு மகாவாக்கிய நான்கு முணர்த்தும் வித்தியானந்தநிலே யினேயதெனவெடுத்துத் தெரிவித்த நாராயணதேசிகரது உபயபாதங்களே மாருது தொழுதுவழுத்துவோர் களங்கரகிதராவர்:—இன்ன மாணுக்கன் குருவாற்சந்தேகந்தீர்ந்திடுபதத்தே, எ - து. இத்தகையான நின் போன்ற மாணுக்கன் தனதுகுருவாற் சந்தேகவிபரீதந் தவிர்ந்த மேலாயநிலே யில்:—துன்னிநிறைந்துநின்ருேர்க ளேயமுத்தராகுவரோ, எ-து. விடாதழுந் திப் பூரணமாகவிளங்கிநிற்போர்கள் பரிசுத்தமான சீவன்முத்தராவர், எ-று.

இன்னநிலேயிருேர்க்கே சுவானுபூதி வாய்க்குமென்னு மகாவாக்கியப் படி வித்தையானந்த மினேயதெனத் தெரித்தருளிய நாராயணதேசிகரடி தொழுவோர் களங்கரகித ராவரென்வும், இஃதன்றியும், யாவனெருவன் தக்கமாணுக்கனுநின்று சற்குருவாற் சந்தேகவிபரீதந்தவிர்த்துக்கொண்டு மே லாயநிலேயிலமர்ந்து பூரணமாநின்ருேனே வவனே சீவன்முத்தனுவனெனவு முடிக்க.

(க-து.) குருபாதந்துதித்தோரும், துரியாதீதபதத்தே நின்ருேரு மெய் தும்பயனிதேனயவென்பது. (௧௮௨)

கஅ௩ - கவி. அ - கை.

[இன்னின்னபயன்தோன்ற விந்நூலியற்றியதெனவிக்கவியிற்கூறுகின்றார்.]

வேறு.

தத்துவ விளக்கத் தானுஞ் சந்தேகந் தெளிதலானு
மொத்திருள் விடாதமாயா வுள்ளிரு ளிரியவோங்குஞ்
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்திபேதப்
புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித்தாண்டான்.

(இ - ள்.) தத்துவவிளக்கத்தானுஞ் சந்தேகந் தெளிதலானு மொத்து, எ-து. தத்துவவிளக்கம், சந்தேகந்தெளிதல், என்னுமிவ்விருபடலமும் பேதியாதிந்நூலை:— இருள்விடாத மாயாவுள்ளிருளிரிய வோங்குஞ்சித்ததா மொளிவிளங்கச்செய்து, எ-து. இருள்மயமாநின்றுள்ள மாயையென்னு மகவிருளோடவும், யாதினுக்கு மேலீடா வோங்கிநின்றுள்ள சிற்பிரகாசமெனுங்கனு மொருபடித்தாவிளங்கவும் பாடலாகச்செய்து:— பின் விருத்திபேதப்புத்தியால் வருமையத்தைப் புரையறத் தெளிவித்தாண்டான், எ-து. பின்னரிது காரணமாகப் பேதபுத்திவிர்த்தியால் வந்துகொண்டிருக்குஞ் சந்தேகவிபரீதங்களை யாதுமயக்கமுந் தோன்றாதுநீக்கித் தெளிவுண்டாக்கி யெம்மை யடிமைகொண்டனன், எ-று.

தத்துவவிளக்கம், சந்தேகந்தெளிதலென்னு மிவ்விருபடலத்தாலும்பொருளொத்திருக்குமாறு மாயாவிருளோடவும், சிற்பிரகாசம்விளங்கவு மிந்நூலைப்பாடலாகச்செய்து, பின்னர் பேதபுத்திவிருத்தியால் வருமையத்தை யாதோர் சந்தேகமுந் தோன்றாது தெளிவித் தெம்மை யடிமைகொண்டனனெனமுடிக்க. ஒத்து, செய்து, தெளிவித்து, என்னும் வினையெச்சங்களை ஆண்டானென்னும் வினைமுற்றோடு முடித்துப்பொருள்கொள்க. இக்கவியில் வந்தவிருளிரண்டில்; முன்னையது, மாயாசொரூபம். பின்னையது, யாவருள்ளத் திலுமகலாதுநிறபது. அங்ஙனநிறபதும் மாயையாதலின், மாயாவுள்ளிருளெனவுருவகப்படுத்தினார். இரிய, விளங்கவென்னுஞ் செயவென்னும் வாய்பாட்டுவினைகள், செய்தென்னும் வினைப்பகுதியில் முடியுமாறுகாண்க. இந்நூலை நன்குணர்ந்தோர்க்குப் பயன் இருளிரிதலும், ஒளிவிளங்கலுமென்க.

(க-து.) இன்னின்னபயன்விளைய விந்நூல்செய்ததென்பது. எந்தெந்த வாதிகளு மிந்நூல்பூர்வபட்சசித்தாந்தங்களை மாற்றற்கனுபவமின்றியக்கண் ணினன்செய்வர்கூடாதென்க. அனுபவம்வரின்மாற்றலாமோ? புலியடிக்கப் புக்கானதனைக் கண்டொழிபோலாமென்க, இந்நூலருமை தெரியார்போலு மிதனைவைவார். (கஅ௩)

கஅச - கவி. அ - கை.

[இந்நூலாசிரியரா யிவரதுமாணுக்கன்றுதித்ததாக
விக்கவியிற் கூறுகின்றார்.]

ஆண்டதே சிகனு மைய னாண னனந்தன் பாதம்
பூண்டொழு வாரோ பித்நாற் பொய்ம்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ளேக்கத் தென்றுங்
காண்டிட வைத்த ளித்த காரணு போற்றி போற்றி.

(இ-ள.) ஆணடதேசிகனுமைய ஞரணனனந்தன் பாதம்பூண்டு, எ-து. வலிந்தாட்கொண்டகுருவாகியும், கர்த்தனுகியுமிருக்கின்ற நாராயணதேசிக ரதந்தமற்றபாதங்களைத்தனதுசிரமேற்கொண்டு:— மூவாரோபத்தாற்பொய்ம் மயக்காவந்தத்தை மாண்டநல் லபவாதத்தால்மாய்த்து, எ-து. மூன்றுவிதவா ரோபத்தினுற் பொய்ப்பிராந்திரூபமாக வந்தெய்திய மாயையென்பதை மாட் சிமைப்பட்ட நல்லவபவாதயுத்தியா னசிப்பித்து:— அருணேக்கத்தென்றுங் காண்டிடவைத்தளித்த காரணுபோற்றிபோற்றி, எ-து. கிருபாநோக்கினுலெ ப்போதுங் கண்டுசிந்தித்துய்ய நூலாகப்பாடிவைத் தெம்போலிகட்குக்கொடு த்த காரணகுருவானவரே நமஸ்காரம் நமஸ்காரம், எ-று.

நாராயணதேசிகரதடிகளைச் சிரமேற்கொண்டு, ஆரோபத்தால்வந்த மா யையை யபவாதத்தாற்கெடுத்து நூலாகப்பாடிக்கொடுத்த தாண்டவமூர்த் தியே! சரணஞ்சரணமெனக்கூட்டுக. ஓர்பிரக்ஞையே திரிபுடியாகத் தோற்ற லினுனும், அத்தோற்றம் பொய்மயக்காமுடிவதினுனும், அங்ஙனமுடிவது மா யையென்னும்பெயர்த்தாதலினுனும்,இதனை யத்தியாரோபமென்பார், மூவா ரோபத்தாற் பொய்ம்மயக்காவந்தத்தையெனவும், அதனைக்கெடுத்த லபவா தத்தாலாதலின், மாண்டநல்லபவாதத்தால் மாய்த்தெனவுங் கூறியவாறு காண்க. வைத்தென்பதற்குச் செயப்படுபொருளின்மையின், நூலைப் பாடி வைத்தெனக்கொண்டாம். அருணேக்கத்தென்றது, அருணேக்கமென்றிரு க்கின், அருணேக்கம்வைத்தெனப் பொருள்கொள்ளலாம், அங்ஙனமில்லா மையாற்கூடாது. இங்கே நூலைச் சிறப்பிக்கவந்தமாணுக்கனுதலின், பாடி வைத்தென்றும். வைத்தென்பதற்குத் திருவடிசூட்டியெனினொருசாரமையி னுமமையும்.

(க - து.) இந்நூலைச் செய்தளித்தவருக்கு நமஸ்காரஞ்செய்ததென்பது. இங்ஙனஞ்செய்தது, இந்நூலருமைபற்றியென்க. (௧௮௪)

க௮௫ - கவி. ௮ - கை.

[சற்குருவின்பாதாபிடேகநீரைத் தலைக்கொண்டோரும், இந்நூலை யுணரவேண்டியவாறுணர்ந்தோரும், எய்தும்பயனினைய வென விக்கவியிற்கூறுகின்றுர்.]

குலவுசற் குருவின்பாதக் குளிர்புன றலைமேற் கொண்டா
ருலகினிற் றீர்த்தமெல்லா முற்றபே றடைவார் போல்வர்
நலமெய்யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞானநூல்கள் படித்தஞானிகளா வாழ்வார்.

(இ - ள்.) குலவுசற்குருவின்பாதக் குளிர்புன றலைமேற் கொண்டார் எ-து. யாவுந்தானுகவிளங்கிய சற்குருவின் பாதத்தைப் பூசித்த குளிர்ச்சிபொ ருந்தியசலத்தை ஸ்நானமாகக் கொண்டோர் :—உலகினில் தீர்த்தமெல்லா முற்றபேறடைவார்போல்வர், எ-து. உலகத்தின்கண் சகலபுண்ணியதீர்த்தங் களினும் விதிமுறையே மூழ்கியடைந்தபேறுடையார்போல்வர் :— நலமெய்

யாகிய கைவல்யநவநீதநூலைகற்றோர், எ - து. மேலாயநன்மையும், எதார்த்த முமாகின்றுள்ள, இந்தக் கைவல்யநவநீதநூலைக் கற்கவேண்டியவாறு கற்றோர்:—பலகலைஞான நூல்கள் படித்தஞானிகளாவாழ்வார், எ-து. எண்ணிறந்த பலவேறுவகைப்பட்ட நூல்களையும், ஞானத்தைமாத்திரம் பிரதிவாதிக்கத் தகக தெளிந்த ஞானிகள்போலவே யையந்திரிபின்றி வாழ்வார்கள், எ-று.

எழுவாய்பயனிலையெனக்காட்டக் கொண்டார்போல்வதொன்றும். இங் ஙனமன்றெமதுசுவாமிகளுரைகூறியதெனின், கவிக்குரையாதலினானும், அக்கவி யிலக்கணவழுவுக் கிடம்பெறாதிருக்கவேண்டுமாதலினானும், கூடா தென்க. இதுசாம்பிரதாயவுரையெனின், ஞாயஞ்சோதனைபொருத்தங்கட்கு முரணாதிருக்கவேண்டும். இங்ஙனமெல்லாம் வேதாந்தத்துக்கு வேண்டுவதின் றெனின், அப்போது நூல்களாயிருக்கவேண்டுவதின்று. வேண்டுவதின்றெ னின், சுருதி, யுத்தி யனுபவ மென்பானேன்? சுருதிவேண்டுவதின்றெனின், ஞானநூல்களெற்றிற்கு? யுத்தியாகிய ஞாயஞ் சோதனை பொருத்தமெற்றிற் கு? சுவானுபவமாத்திரம் போதுமெனின், யுத்திக்குமுரணாய சுவானுபவமாக வேண்டும். ஆதலின் சுவானுபவஞ்; சுருதியுத்தியொத்ததென்றார் சான்றோர் பலரும். இவையெல்லாந் தக்கசாம்பிரதாயத்தை யடுத்துக்கேளாதகுற்றமென வறிக. சுருதி யுத்தி முரணாதுகூறற்குவலியின்றேல் சுவானுபவமு மங்ஙனமா கும். ஏட்டை மேற்கோளாகக் கூறாதிருக்கவேண்டும். கூறவரின், குற்றம் வரும். எங்கள்சுவாமிகள்கூறியதெனின், அவருக்கும்வரவா, அவரை யிழுப் பதுபோதும் வாயடங்கிநிற்கை நன்குமதிப்புக்குமேன்மை.

(க - து.) எல்லாங்கற்றுத் தெளிதல்போலு மிந்நூலைமாத்திரங் கற்கவே ண்டியவாறு கற்றுத்தெளிதலென்பது. நலமெய்யாகிய கைவல்யமெனவே, கைவல்யம்; நலமுமெய்யுமாயதெனப்பெற்றும். தானயலாகாதுதானே தானுத லெல்லாநலத்தினு மேலாயதாதலின் நலமெனவும், தானென்பதேமெய், ஏனை யவை யெத்திறத்தவாயினும் பொய். எனத்துணிதலின் மெய்யெனவும், இந் நூலுக்கடையாக்கியதென்க. சம்பூரணம், முற்றிற்று.

சந்தேகந்தெளிதல்படலம். கவி - க௩௫.
தத்துவவிளக்கப்படலம். கவி - ௧0௮.
ஆ - கவிகள் - உ௩௩.

முற்றிற்று.

நேரிசைவெண்பா.

தத்துவ மல்லாத சராசரங்க ளெங்கணுள
தத்துவத்தைச் சோதித்துத் தானுதற் - கித்துணை
யன்றிப் பிறிதில்லையா லாய்ந்துய்ம்மி னிந்நூலை
யின்றிச் சுருக்க மெஃதாம்.